# தாய் தன்னை அறியாத...

மீனாட்சி - பழனியப்பா நினைவு
முதல் அறக்கட்டளை
சொற்பொழிவு நூல்

**டாக்டர் சுதா சேஷய்யன்**, எம்.எஸ்.,
உடற்கூறியல்துறைப் பேராசிரியர்,
ஸ்டான்லி மருத்துவக் கல்லூரி,
சென்னை - 600 001.




## உமா பதிப்பகம்

171, (புதிய எண். 18), பவளக் காரத் தெரு,
மண்ணடி, சென்னை - 600 001.
தொலைபேசி : 2521 5363, 2525 0092

மீனாட்சி - பழனியப்பா நினைவு முதல் அறக்கட்டளைச்
சொற்பொழிவு நூலின் இம் முதற் பதிப்பு
காரைக்குடி கம்பன் கழகத்தின் சார்பில்,
19.3.2008 கம்பன் திருநாளில் வெளியிடப் பெற்றது.

## நூல் விவரப் பட்டியல்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | தாய் தன்னை அறியாத... |
| ஆசிரியர் | : | டாக்டா சுதா சேஷய்யன் |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு ஆண்டு | : | முதல் பதிப்பு - மார்ச் - 2008 |
| பதிப்புரிமை | : | © ஆசிரியருக்கு |
| தாள் | : | J.K. மேப்லித்தோ |
| நூல் அளவு | : | 14 x 22 செ.மீ. டெம்மி |
| எழுத்து | : | 11 புள்ளிகள் |
| பக்கங்கள் | : | 160 |
| பைண்டிங் | : | சாதாரணக் கட்டு |
| விலை | : | ரூ. 60.00 |
| ஒளி அச்சு | : | விக்னேஷ்வர் கிராபிக்ஸ் சென்னை - 600 005. |
| அச்சிட்டோர் | : | பரமேஸ்வரி கிராபிக்ஸ் சென்னை - 600 005. |
| நூல் வெளியீடு | : | உமா பதிப்பகம் சென்னை - 600 001. |



# பதிப்புரை

**கா**ரைக்குடி கம்பன் கழகம் 1939இல் தொடங்கப் பெற்றது முதல் நிறுவனர் சா. கணேசன் அவர்களோடு நெருங்கிய நட்புக் கொண்டிருந் தவர்கள் இந்நகர் மெ.செ.அ.மெ.பழ. குடும்பத்தவர்.

கம்பன் திருநாளுக்கு ஆண்டு தவறாது வந்து கலந்து மகிழ்ந்து மகிழ்விப்பதுடன், தேவையான உதவிகளை தம் அணிற் பங்காய் நிறைந்த உள்ளத்துடனும் மட்டற்ற மகிழ்ச்சியுடனம் செய்து வந்தவர் அமரர் மெ.செ.அ.மெ. பழனியப்ப செட்டியார். 'யாரொடும் பகை கொள்ளலன் என்றபின் போரொடுங்கும்; புகழ் ஒடுங்காது' என்ற கம்ப வரிகளுக்கு இலக்கியமாய்த் திகழ்ந்தவர்; கௌரவ நீதிபதியாய் பணியாற்றிய பண்பாளர்; வாய் பேசாத, காது கேளாத குழந்தைகளுக்கென பள்ளி நடத்த கட்டிடம் கட்டி உதவியவர்; ஏழை எளியவர்க்கு இரங்கி இன்னருள் சுரந்த பெற்றியர்.

தில்லையில் திருவடி குதித்தாளும் நடராசனடி நாளும் பரவும் மேனா சேனா குடும்பத்து மருமகளான மீனாட்சி ஆச்சி, காரைநகர் மேவும் கொப்புடையாள் பாதம் பரவிப் பணிசெய் அரு.அ.

குடும்பத்தே கவிஞர் ஆனா ரூனா மகளாவார். ஏழை பாழை என்று பாராது எவர்க்கும் எளியவராய் இலங்கிய இவர், கருவிலேயே கம்பனை நினைந்து ஊட்டி கம்பனடி சூடியை ஈன்ற பெருமாட்டி ஆவார். இவர் தம் நூற்றாண்டாகும் 2008ஆம் ஆண்டு.

'இவர்களிருவர் நினைவைப் போற்றும் வகையில் ஆண்டு தோறும் கம்பன் திருநாளின் திருநாள் மங்கலப்பேரவையில் கம்பனைப் பற்றி இதுவரை யாரும் ஆய்ந்திராத புதிய ஒரு கூறைப் பற்றியோ அல்லது புதிய கோணத்திலோ ஒரு நினைவுச் சொற்பொழிவு நடக்க வேண்டுமென விரும்பி இவர்கள் குடும்பத்தினர் ஏற்பாடு செய்துள்ளனர். கம்பன் அடிப் பொடியின் நூற்றாண்டான 2008-இல் நிகழும் 70-ஆம் ஆண்டுக் கம்பன் திருநாள் தொடங்கி சொற்பொழிவும், அச்சொற் பொழிவின் நூல் வடிவமும் அப்போதே வெளியிடப் பெறவும் ஆவன செய்துள்ளனர்.

★ *19.03.2008ஆம் நாள் மீனாட்சி - பழனியப்பா நினைவு அறக்கட்டளையின் முதற் சொற்பொழிவினை ''தாய் தன்னை அறியாத...'' என்ற தலைப்பில் நிகழ்த்திய டாக்டர் சுதா சேஷய்யன் அவர்கள்*

★ இந்த ஆய்வுச் சொற்பொழிவினை நூல் வடிவாக்கி அச்சிட்டு, அன்றைய தினமே வெளியிட்டுதவும் சென்னை உமா பதிப்பக இராம. லெட்சுமணன் அவர்கள்

★ இந்நினைவுச் சொற்பொழிவினை ஏற்பாடு செய்து, நூல் வடிவமாக்கி அதனை கம்பன் கழகம் மூலம் நிறைவேற்றிய மீனாட்சி பழனியப்பர் குடும்பத்தார்

- ஆகியோருக்கு எங்கள் மனம் கனிந்த நன்றி.

**- கம்பன் கழகத்தார்**

காரைக்குடி
19.3.2008

"தாயிற் சிறந்ததொரு கோயிலுமில்லை
தந்தை சொல் மிக்க மந்திரமில்லை"

- என்ற நடையின் நின்றுயர் இராமகாப்பியத்தில்
அறக்கட்டளைச் சொற்பொழிவினை
நிறுவக் காரணராய



**மீனாட்சி - பழனியப்பா**

# உள்ளே...

# தாரை

**வா**லி மனைவி...

கிட்கிந்தை பேரரசி...

அங்கதன் தாய்...

அயோனிசை' என்று புராணங்களால் அடையாளம் காட்டப்படும் அணங்கு...

அழகும் அறிவும் ஒருங்கே சேர்ந்த அன்புடைப் பெண்மை...

சுடேணன் என்னும் வானரப் பெருவீரனின் மகள் என்று இந்திய இராமாயணங்கள் பலவற்றிலும் குறிக்கப்படும் தாரை;

எல்லையற்ற பரமபக்தியை இராமனிடம் வரமாகக் கேட்டவள் என்று துளஸீதாசரின் இராம சரித மானஸம் காட்டுகிற தாரை;

தாரா கீதை என்னும் பெரும்புகழ் உபதேசத்தை இராமன் வழங்குவதற்குக் காரணமானவள் என்று அத்யாத்ம இராமாயணம் சிறப்பிக்கிற தாரை;

சுக்ரீவன் மனைவியாகவும், வாலியால் கவரப்பட்ட வளாகவும் இந்தோனீசிய இராமாயணங்களில் இடம்பெறுகிற தாரை;

நன் காசிரஜ்திதா, கோட்டஹ்ரத் ஆகிய பெயர்களைக் கொண்டு, துந்துபி என்னும் அரக்கனோடு போரிடும் வீராங் கனையாக லாவோஸ் பிரதேச இராமகதைகளில் காணப் படும் தாரை;

வட இந்திய விடுகதைகள் பலவற்றின் நாயகியாக விளங்கும் தாரை; இவ்வாறு பற்பல வடிவங்களில் காட்சி தருகிற தாரையின் தன்மைதான் என்ன?

## அ. அமிழ்தின் தோன்றிய ஆரணங்கு

ஆசைபற்றி கம்பநாட்டாழ்வார் படைத்த காசில் கொற்றத்து இராமன் கதையில், எதிர்மறை கதாபாத்திரத்தின் மனைவியாகத் தோன்றுபவன் தாரை. ஒருசில காட்சிகளில் மட்டுமே அவளின் முகவரி தெரியும்; இருப்பினும், அவளுடைய செயல்பாடுகளில் அவளின் அகவரி புரியும்.

## குரக்கினத் தலைவனும் கொண்டவள் காதலும்

இராகவன் துணையால் துணிவு பெற்ற சுக்ரீவன் அறைகூவ, அதனை ஏற்று, தோள் தட்டிப் புறப்படுகிறான் வாலி. அந்தத் தருணத்தில், கொண்டானைத் தடுக்கவும், நல்லுரை கூறவும் தோன்றுகிறாள் அந்த நுண்ணிடையாள். காப்பியத்தில், முதன் முறையாக அப்போதுதான் தாரை காட்சி தருகிறாள்.

தம்பியின் ஆர்ப்பொலி கேட்டு, எம்பி எழுந்தனன் வாலி. அவனுடைத் தோள் புடை விசித்த காற்றில், மலைகள் வீழ்ந்தன; அவனுடைக் கை புடைவிசித்த ஆற்றலில், அட்டதிக்கு யானைகளும் ஆரவாரமிட்டன. உலகையும், உலகைச் சுற்றிய யாவற்றையும், உலகுறை பொருட்களையும் ஒடுக்கிவிடுகிற ஊழிக் காலத்துப் பெருந்தீயைப் போன்றும், பாற்கடல் கடைந்த காலத்துத் தோன்றிய ஆலகால நஞ்சைப் போன்றும் கொடுங்கோபக் கனலாகத் தோற்றம் தந்த கணவனைத் தடுத்து நிறுத்துவதற்காக ஓடிவருகிறாள் தாரை.

மூங்கில் போன்ற தோள்களைக் கொண்டவளான அவள், வாலியைத் தடுக்கிறாள். கண்களில் கனலும், வாயில் புகையுமாக நிற்கிற குரங்குத் தலைவனைத் தடுப்பதற்காகப் புகுந்தபோது[3], அவளுடைய நீண்ட கூந்தல், அந்த நெருப்பில் தீய்ந்தது.

'விலக்காதே, விடு விடு' என்று வேகமாகக் கூறிக்கொண்டே நகர்வதற்கு அவன் முற்படுகிறான். 'மலைக்குல மயிலே' என்று அவளை விளிப்பவன், பாற்கடலைக் கடைந்து அமுதத்தை எடுத்ததுபோன்று, தன்னை வலுச்சண்டைக்கு அழைத்திருக்கும் சுக்ரீவனைக் கடைந்து அவன் உயிர்குடித்து வருவதாக முழக்கமும் இடுகிறான்.[4]

மலையிலாடும் மயில் போன்று அழகுடை அணங்காக இதுகாறும் தோன்றியவள், இப்போது நல்லாசானாய், நல்லுரை அமைச்சாய், மெல்லுரைக்கும் தாயாய் பேசத் தொடங்குகிறாள்.

வாலியின் வீரத்துக்கும், ஆற்றலுக்கும் அஞ்சி அன்றொரு நாள் ஓடியவன், இத்தனை நாட்கள் எங்கேயோ ஒளிந்து வாழ்பவன், இன்று தானே வந்து வலிய அழைக்கிறான் என்றால், காரணம் ஏதும் இல்லாதிருக்குமா? அவன் ஒன்றும் தானே பெருவலி பெற்றதாகத் தெரியவில்லை. அவனுடைய வீரம் அதிகப்பட்டதாகவும் தோன்றவில்லை. பின்னர், எக்காரணம் பற்றி இப்படியொரு புதிய அறைகூவல்?

எது காரணம் என்பது பற்றித் தெரிந்து கூறுகிறாள் அந்த நன்னுதலாள். வேறு என்ன இருக்கமுடியும்? தானே வலிமை குன்றிய சுக்ரீவன்,[5] தனக்கென்று ஒரு துணையைப் பெற்றுவிட்டான். துணைவலியின் திறமைகண்டு, அதன் துணிவால், இப்போது நேர்கூவல் விடுக்கும் நெஞ்சுரமும் பெற்றான்!

'கொற்றவ! நின் பெரும்
குவவு தோள்வலிக்கு
இற்றனன், முன்னை நாள்,
ஈடு உண்டு ஏகினான்;

பெற்றிலன் பெருந்திறல்;
பெயர்த்தும் போர் செயற்கு
உற்றது, நெடுந்துணை
உடைமையால்' என்றாள்.[6]

மனைவியிடம் அன்பு கொண்டிருந்தாலும், அவளுடைய ஆலோசனையில் நம்பிக்கை கொள்ளாத வாலி, தன்னுடைய பெருமைகளை மேலும் எடுத்துரைக்கிறான்.

மேல், நடு, கீழ் என்று மூன்றாக வகுக்கப்பட்டாலும், எல்லையற்றனவாகிய உலகங்கள் யாவும் ஒன்றாக இணைந்து, அவ்வாறு இணைந்ததால் ஒருங்கிணையும் வலிமை எல்லாமும் சேர்ந்து, வாலியை எதிர்த்தாலும், அத்தனையும் வாலியை வென்றுவிடமுடியுமா? இது வெற்றுப் பெருமை மட்டுமன்று; இதற்கான சான்றுகளும் உள்ளன.

'மூன்று என முற்றிய முடிவு
இல் பேர் உலகு
மூன்று, உடன் உற்றன,
எனக்கு நேர் எனத்
தோன்றினும், தோற்று அவை
தொலையும் என்றலின்
சான்று உள; அன்னவை
தையல்! - கேட்டியால்'[7]

சான்றுகள் சாதாரணமானவை அல்லன; மிக மிக முக்கியமான சான்றையே வாலி விவரிக்கிறான்.

அது பழங்காலம், பாற்கடலைக் கடைவதென்று தேவர்கள் ஒருபுறமும் அரக்கர்கள் ஒருபுறமும் அணிவகுத்து நின்றனர். மந்தர மலையை மத்தாக்கினர்; வாசுகிப் பாம்பைக் கயிறாக்கினர்; எடையும் இழுப்பும் தாங்காமல் சரிந்த மந்தரமலையை நிலைநிறுத்தும் அடைகல்லாக ஆழியானாம் திருமாலே தோன்றிவிட,[8] மத்துக்கு வலிமை சேர்க்கும் தூணாகச் சந்திரன் ஆக, இந்தப் பக்கமும் அந்தப் பக்கமுமாக நின்று தேவாசுரர்கள் கடலைக்

கடைந்தனர். இருந்தபோதிலும், கடைய முடியாமல் அயர்ந்தனர். அவர்களுக்கு பதிலாகத் தான் ஒருவனே நின்று பாற்கடலைக் கடைந்து, அமுதத்தை எடுத்துக் கொடுப்பதை யாரும் மறக்க முடியுமா?[9] மயில் இயலும் குயில் மொழியும் கொண்டு நல் யோசனை கூறும் தாரை, இதை மறக்கலாகுமோ?

'மந்தர நெடுவரை
மத்து, வாசுகி
அந்தம் இல் கடை கயிறு,
அடைகல் ஆழியான்,
சந்திரன் தூண், எதிர்
தருக்கின் வாங்குநர்,
இந்திரன் முதலிய
அமரர், ஏனையோர்

பெயர்வுற வலிக்கவும், மிடுக்கு
இல் பெற்றியார்
அயர்வுறல் உற்றதை நோக்கி,
யான், அது
தயிர் எனக் கடைந்து
அவர்க்கு அமுதம் தந்தது
மயில் இயல் குயில்மொழி!
மறக்கல் ஆவதோ?[10]

அமரர்களான தேவரும், அவுணர்களான அரக்கர்களும் வாலியைக் கண்டு நடுங்குவார்கள். யமன்கூட வாலியின் பெயரைக் கேட்டால் நடுங்குவான். இன்னும் யார் எதிர்த்தாலும் அவர்களால் வெல்லமுடியாது. வரங்களும் பலங்களும் பெற்றிருப்பார்களேயானாலும், அவற்றில் பாதியை வாலி அடைந்துவிடுவான். எனவே, எவ்வாறு யாரும் வாலியிடம் பகை கொள்வர்?

'ஆற்றல் இல் அமரரும்,
அவுணர் யாவரும்

*தோற்றனர்; ஏனையவர்*
*சொல்லற் பாலரோ?*
*கூற்றும், என் பெயர் சொலக்*
*குலையும்; ஆர் இனி*
*மாற்றவர்க்கு ஆகிவந்து*
*எதிரும் மாண்பினார்?*

*பேதையர் எதிர்குவர் எனினும் பெற்றுடை*
*ஊதிய வரங்களும், உரமும் உள்ளதில்*
*பாதியும் என்னதால்; பகைப்பது எங்ஙனம்?*
*நீ துயர் ஒழிக' என நின்று கூறினான்"*

## நடப்பது உணர்த்தும் நல்லுரை நாயகி

தனக்கென்று இயல்பாக அமைந்த வலிமையோடு, பிறருடைய வரபலங்களைப் பாதி பெற்றுவிடக்கூடிய தன்னுடைய சிறப்புமிக்க ஆற்றலையும், தாரைக்கு வாலி நினைவுபடுத்துகிறான். இவ்வாறான தன்மைகளைப் பற்றி, அவன் கூறியதைக் கேட்டபின்னர்தான், தாரை, மிக மென்மையான, ஆயின், மிக முக்கியமான தகவலைச் சொல்கிறாள்.

இத்தனை காலம் அச்சமுற்றிருந்த சுக்ரீவன், இப்போது மட்டும் இத்தகைய துணிவோடு வந்திருப்பதற்கு என்ன காரணம் என்பதற்கொரு விளக்கம் கொடுப்பதாகவும் தாரையின் கூற்று அமைகிறது. சுக்ரீவனுக்கு ஒரு நண்பன் கிட்டியுள்ளான்; சாதாரண நண்பனாக அல்லாமல், இன்னுயிர் துணைவனாகக் கிடைத்துள்ளான்; அதுவும் சுக்ரீவனுக்கு நண்பனாக இருந்து வாலியின் உயிர் பருக வந்துள்ளான்.

அன்னது கேட்டவள்,
"அரச! ஆய்வற்கு
இன் உயிர் நட்பு
அமைந்து இராமன் என்பவன்,

உன் உயிர் கோடலுக்கு
உடன் வந்தான் எனத்
துன்னிய அன்பினர்
சொல்லினார்'' என்றாள்.[12]

இராமனுடைய வருகை குறித்து தாரை அறிந்திருந்தாள் என்பது, அவள் எத்திறத்தவள் என்பதை உணர்த்துகிறது. ஓர் அரசனுக்கு அமைய வேண்டிய அனைத்து இயல்புகளும் அமையப் பெற்றவனாகவே வாலி விளங்குகிறான். பிற நாடுகளில் நிகழக்கூடிய செய்திகள் பலவற்றையும் தெரிந்து கொண்டிருந்தான் (பின்னாலே இராமனிடம் அவன் பேசக்கூடிய சொற்களாலே இதனை அறியலாம்).[13] ஆனாலும், தெரிந்து கொள்ளவேண்டிய மிக முக்கியமான தகவலை அறியாதவனாக அவன் இருந்த காலத்தும் அவனுக்கு அதனை உணர்த்துகிற (உணர்த்த முயற்சி செய்கிற) அமைச்சாகவே தாரை செயல்படுகிறாள்.

சுக்ரீவன் வந்து போருக்கு அழைத்தபோது, அது யாது வலியால் என்பது பற்றி, வாலி எண்ணியதாகத் தெரியவில்லை. ஆயின், தாரை சிந்தித்தாள். இத்தனை நாட்கள் தான் வாழும் மலைக் குகையைவிட்டு வெளியில் வராத சுக்ரீவன், இப்போது வந்திருக்கிறான், வந்தவனும் போருக்கு அறைகூவல் விடுக்கிறான் எனில், அவனுக்குத் துணையாக யாரேனும் இருக்கவேண்டும். அவ்வாறு இருப்பது யார் என்பதை தாரை தெரிந்து வைத்திருந்தாள்.

சிந்தனை சிறந்தவள் மட்டுமில்லை, அரசாங்கச் செயல் பாடுகள் அறிந்தவள் என்பதையும் இதே காட்சியிலிருந்து அறிந்துகொள்ளலாம். தன்னுடைய நாட்டிலும், நாட்டைச்சுற்றிய பகுதிகளிலும் என்னென்ன நடக்கின்றன[14] என்பதைக் குறித்து அவள் தகவல் சேகரித்திருந்தாள். வந்திருப்பவர்கள் யார் என்பது வரை புரிந்து கொண்டிருந்தாள்.

சிந்தனையிலும், செயல்பாடுகளிலும் திறமை மிக்கவள் என்பதினும், தாரையின் மற்றொரு பெருமையும் இவண் புலப்படுகிறது. அவள், உளவியல் வல்லுநராகவே விளங்கினாள். எப்படி?

தம்பியின் குரல் கேட்டுப் போருக்குப் புறப்பட்ட வாலியைத் தடுக்கத்தான், தாரை ஓடி வருகிறாள். தடுத்தவளைத் தடுத்துத் தள்ளிவிட்டு, வாலி விரைந்து செல்ல முற்படுகிறான். அந்தத் தருணத்தில் அந்த மாதரசி என்ன பேசுகிறாள்? சுக்ரீவன் செயலுக்குப் பின்னால் ஒரு காரணம் இருக்கக்கூடும் என்று வாலிக்குப் புரிய வைக்க முனைகிறாள். காரணம் இருக்கக்கூடும் என்று தொடங்கிவிட்டு, பின்னர் மெதுவாக, 'ஒரு துணையுண்டு' என்று வலியுறுத்துகிறாள். அப்போதே அவள் இராமன் பெயரைச் சொல்லியிருந்திருக்கலாம். ஆர்வமிகுதியால், அத்தகைய சூழலில் இருக்கும் பலரும் (இன்றைய நம்மைப் போன்ற நவீன மனிதர்கள் உட்பட) அவசரப்பட்டிருப்பார்கள்; ஆவேசத்துடன் இராமன் பெயரை உரைத்திருப்பார்கள்.

வாலியைப் பற்றி நன்குணர்ந்தவள் தாரை. அப்படிப் பட்டவளுக்கு இராமன்மீது வாலி வைத்திருக்கும் மதிப்பும் தெரிந்துதான் இருக்கவேண்டும். எனவேதான், இராமன் பெயரை மொழிவதற்கு முன்னர், அதற்கான முன் முகாந்திரத்தைக் கொடுத்துவிடுகிறாள். சுக்ரீவனோடு யார் துணை வந்தாலும் தன்னை வெல்லமுடியாது என்று வாலி பெருமிதம் சாற்றிய பின்னரே, வந்திருக்கும் துணை சாதாரணத் துணையன்று, தோன்றாத் துணையாகத் தோன்றியுள்ள பெருந்துணை என்பதை எடுத்தியம்புகிறாள். தேவாசுரர்களும் தனக்கு ஈடாகமுடியாது என்பதையும், யார் வரினும் அவரின் பாதி பலத்தைப் பெற்றுக்கொள்ளும் திறமை தனக்கிருக்கிறது என்பதையும் வாலி கூறிய பின்னரே, 'இராமன் என்போன் வந்தான்' என்று அவள் கூறுகிறாள். இராமனுடைய வலிமையைப் பற்றிய தெரியாததுபோல, 'இராமன் என்பவன்' என்றவள் சொன்னாலும், பிறரைக் காட்டிலும் இராமன் வலிமை மிக்கவன் என்பதாக அவள் எண்ணினாள் என்பதையும் இங்கு உணர்ந்துகொள்ளலாம். வாலிக்கு அழிவு செய்வதாகச் சுக்ரீவனிடம் இராமன் உரைத்ததையும் அவள் அறிந்திருந்தாள் என்பதையும்கூட, இந்தக் காட்சி காட்டுகிறது.

'தன்வலியும் துணை வலியும் மாற்றான் வலியும்' என்பார் வள்ளுவப் பேராசான். மாற்றான் வலி தெரியாமல் போருக்கு எழுதல் நன்றன்று. மாற்றானுக்குத் துணையாக வந்திருப்பவனின் அணுக்கமும் ஈடுபாடும் திறமையும் புரியாமல் போருக்கு எழுவதும் தவறுதலாகவே முடியும் என்பதைத் தாரை சொல்லாமல் சொல்கிறாளோ?

## விளம்ப அஞ்சிய விரைக்குழல்

தாரை கூறியதைக் கேட்ட வாலி, வெகுளியால் கொதித்தான். 'உலகிற்கே அறத்தைக் காட்டும் திறம் படைத்த இராமன், அறமின்மை செய்வானோ? உயிர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கும் தர்மம், தன்னைத்தானே அழித்து'க் கொள்ளுமோ? தன்னுடைத் தாய்க்கு மாற்றாளானவள் ஏவிட, அதன்பொருட்டுத் தனக்கு உரித்தான நிலத்தைத் தனது தம்பிக்கு அளித்த இராமன், இப்போது மட்டும் அறம் தவறத் தலைப்படுவானோ?'

இராமன்மீது வாலி கொண்டிருந்த மதிப்பு, நயவுரை செப்பிய நாயகியைக் கடிந்துகொள்ளவும் வழி செய்கிறது. தொடக்கத்தில், 'மலைக்குல மயில்' என்றும், 'குயில் மொழி' என்றும் அழைத்தவன், இப்போது, அடியோடு மாறி, 'பாவி' என்றே பேசுகிறான். இயல்பற்றன இயம்பினாள் என்று அவள்மீது குற்றம் சுமத்தும் வாலி, பெண்மையின் பேதைமை குணத்தால் அவள் பிழை செய்தாகவும் சுட்டுகிறான்.

தன்னுடைய உரிமை அரசை, பரதனுக்கு ஈந்த தன்மையைப் போற்றாது, இத்தகையதொரு பழி சாற்றுதல் சரியோ?

இராமனுடைய வருகை குறித்து தாரை அறிந்திருந்தாள் எனில், இராமனுடைய சிறப்புகளைக் குறித்து வாலி உணர்ந் திருந்தான். இராமனைப் போற்றித் துதிக்கவேண்டிய தாரையின் வாய், மாறாக, இராமனைப் பற்றித் தீங்குரைப்பதாகவே அவன் கருதுகிறான். அதனால் ஏற்படும் கோபம், தாரையை மட்டுமன்றி, பெண்குலத்தையே சாடுவதாக மாறுகிறது. பெண்மைக்கிருக்கும்

பேதைமைத் தன்மை என்று வேகத்தோடு பாய்கிறான். சொல்லப்போனால், இராமனைப் பற்றிய தனது மதிப்பீட்டைப் படிப்படியாக வாலி உயர்த்துவதற்கும் இந்தக் கோபமே காரணமாகிறது.

'உழைத்த வல் இரு
    வினைக்கு ஊறு காண்கிலாது
அழைத்து அவர் உலகினுக்கு
    அறத்தின் ஆறு எலாம்
இழைத்தவற்கு, இயல்பு அல
    இயம்பி என் செய்தாய்?
பிழைத்தனை; பாவி, உன்
    பெண்மையால்' என்றான்.

.. ................. .................
ஏற்ற பேருலகு எலாமெய்தி ஈன்றவள்
மாற்றவள் ஏவ, மற்று, அவன்தன் மைந்தனுக்கு
ஆற்ற அரும் உவகையால் அளித்த ஐயனைப்
போற்றலை; இன்னன புகறல் பாலையோ?[15]

குயில் மொழியாளாகப் பார்க்கப்பட்ட தான், இராமனைப் பற்றிக் கூறிய மாத்திரத்தே, பிழை செய்தவளாகவும், தான் சார்ந்திருக்கும் பெண்ணினத்திற்கே 'பேதைதை' பட்டத்தைப் பெற்றுத் தருபவளாகவும் மாறிப்போனதைக் கண்டு, தாரை தவித்திருக்க வேண்டும். தவிப்பு, நடுக்கமானது. ஆம், அவள் அச்சமுற்றாள். எதற்கு?

'அருளின் ஆழியான் அம்பிடை தொடுக்குமோ?' என்னும் வாலியின் நம்பிக்கை கலந்த நல்லெண்ணம் கண்டு அவள் நடுக்குற்றாள். எனவே, மீண்டும் இது குறித்து வாலியிடம் வற்புறுத்த அச்சமுற்றாள்.

'இருத்தி, நீ இறை இவண்;
    இமைப்பு இல் காலையில்

**உருத்தவன் உயிர் குடித்து,**
**உடன் வந்தாரையும்**
**கருத்து அழித்து எய்துவென்;**
**கலங்கல்' என்றனன்;**
**விரைக் குழல், பின்**
**உரை விளம்ப அஞ்சினாள்.[16]**

சொல்வதற்கு அவளிடத்துப் பொருளிருப்பினும், சொல்வதற்குத் தயங்குகிறாள். இராமனைப் பற்றி, மிகுந்த மதிப்போடு திகழும் கணவனுடைய கருத்தை மறுதலிக்க அஞ்சுகிறாள். அவன் உள்ளத்தைப் புண்படுத்த அஞ்சுகிறாள். அவள் அஞ்சி நிற்க, அவன் புறப்பட்டுப் போகிறான்.

## விசும்பில் தோன்றும் விண்மீன்

வாலிக்கு நல்லுரை கூறியபின்னர், தாரையை, நாம் மீண்டும் சந்திப்பது வாலியின் மரணத்திற்குப் பின்னரேயாகும். மரணச் செய்தி கேட்டாள்; வந்தவன் மேனி வீழ்ந்தாள். அழுதாள், புரண்டாள், அலறித் துடித்தாள்.

வாலியின் அகன்ற மார்பில் விழுந்து புரண்டாள். அவன் பெருமைகளையும், அவனுக்கும் அவளுக்கும் இருந்த அன்பின் ஆழத்தையும் சொல்லிச் சொல்லிப் புலம்பினாள். வாலியின் உடலிலிருந்து பொங்கிப் பெருகிய குருதி, அவளுடைய உடல்மீது செம்மை காட்டியது.

**குங்குமம் கொட்டி என்ன, குவி முலைக் குவட்டுக்கு ஒத்த**
**பொங்கு வெங்குருது போர்ப்ப, புரி குழல் சிவப்ப, பொன்- தோள்**
**அங்கு அவன் அலங்கல் மார்பில் புரண்டனள் - அகன்ற செக்கர்,**
**வெங்கதிர் விசும்பில் தோன்றும் மின் எனத் திகழும் மெய்யாள்[17]**

வாலியின் அகன்றதான மார்பில் அவள் புரண்டழுதகாலை, அவனுடை மார்பு, அந்திப் பொழுதின் வானம் போல் தோற்றம் தந்தது. மாலைக் கிரணங்கள் செம்மை சேர்த்தாற்போன்று, குருதிக்

கரையால் சிவந்திருந்த மார்பின்மீது, மலைக்குல மயிலான தாரை வீழ்ந்தாள். அந்தி வானத்தில் மின்னல் வெட்டினால் எவ்வாறிருக்குமோ, அவ்வாறே அதுவும் காட்சி தந்தது. குழலும் யாழும் வீணையும் தோற்று நாணும்படியாக அவள் அழுதாள். அழுகையில்கூட, அவளின் குரலினிமை அத்தகைத்தோ என்று வியக்கும்படியாக அழுதாள். இரங்கிக் கதறினாள். இருகைகளையும் சென்னிமேல் கூப்பி அழுதாள்.

**வேய்ங்குழல், விளரி நல் யாழ், வீணை என்றினைய நாண,**
**ஏங்கினள்; இரங்கி விம்மி உருகினள்; இரு கை கூப்பித்**
**தாங்கினள் தலையில்; சோர்ந்து, சரிந்து தாழ் குழல்கள் தள்ளி,**
**ஓங்கிய குரலால் பன்னி, இனையன உரைக்கலுற்றாள்**[18]

நாள்தோறும் வாலியின் தோள்களைச் சார்ந்து நின்றதாகவும், இப்போதோ, துன்பக் கடலின் கரை காணமுடியாது திணறுவதாகவும் கூறுகிறாள்.

**வரைசேர் தோளிடை நாளும் வைகுவேன்**
**கரைசேரா இடர் வேலை காண்கிலேன்**
**உரைசேர் ஆர் உயிரே! என் உள்ளமே!**
**அரைசே! யான் இது காண அஞ்சினேன்**[19]

வாலியைத் தாரை விளிக்கும் பாங்கு உற்று நோக்கற்குரியது. 'உயிரே' என்றாள்; 'உள்ளமே' என்றாள்; பின்னர்தான், 'அரசே' என்றாள். வாலி இறந்து கிடப்பதைக் காண்பதற்குத் தான் அஞ்சுவதாகக் கூறும் அவளுடைய உணர்வோட்டத்தை, இச்சொற்கள் சுட்டுகின்றன. ஒவ்வொரு விளியிலும், தன்னை விட்டுச் செல்வது சாத்தியமா என்ற வினா, மறைமுகமாகத் தென்படுகிறது.

முதலில், 'உயிரே' என்றாள். அப்படியானால், அவள் உடல் என்றாகும். உடல் கிடக்க, உயிர் பிரிதல் கூடுமோ? அடுத்து, 'உள்ளமே' என்றாள். அவளுடைய எண்ணமும், செயலும் அவனே என்றாகும். உணர்வாக இருக்கவேண்டிய உள்ளமின்றி,

அவள் மட்டும் தனியிருக்க முடியுமா? பின்னர், 'அரசே' என்றாள். உயிரும், உள்ளமும், வாலிக்கும் தாரைக்கும் இடையில் இருக்கும் தனிப்பட்ட உறவைக் குறிக்கக்கூடிய சொற்கள். ஆயின், அரசு என்பது அப்படிப்பட்ட சொல்லா? அத்தகைய உறவா? அவன் அந்த நாட்டுக்கே அரசன், பலருக்கும் அரசன்; அவளுக்கும் அரசன்.

அரசன் என்பவன் மக்களின் பாதுகாவலன். தனக்கு வாலி எத்தகைய பாதுகாவலனாக இருந்தான் என்பதை அவள் இவ்வாறு தெரிவித்தாள் எனக் கொள்ளலாம். தனக்கு அவன் இன்றியமை யாதவன் என்பதை 'உயிர்' என்னும் சொல்லால் சுட்டியவள், தனக்கும் அவனுக்கும் இருந்த ஒற்றுமையை 'உள்ளம்' என்னும் சொல்லால் குறிப்பிட்டாள். இவற்றையும் மீறி, அவள் உரைத்த 'அரசு' என்னும் சொல், எதைச் சுட்டமுடியும்?

அவன் நாட்டின் அரசன். அரச கடமைகளை நிறைவேற்றும் காலங்களில், தனிப்பட்ட உறவுகளையும், உணர்வுகளையும் மூட்டை கட்டிவைக்க வேண்டிய கட்டாயங்கள் ஏற்பட்டுவிடலாம். அத்தகைய கட்டாயம் யாதேனும், இப்போது வாலிக்கும் வந்துவிட்டதோ? அரச கடமையை நிறைவேற்றும் பொருட்டு, அவளை மறந்து சென்றானோ? அவளுடைய ஒற்றைச் சொல், ஓராயிரம் தவிப்புகளின் வெளிப்பாடாகத் தோன்றுகிறது.

'யான் இது காண அஞ்சினேன்' என்றுரைக்கும் அவள், 'எது' என்பதை நேரடியாகச் சொன்னாளில்லை. இது எது? அவள் சொன்ன 'அது', எது? அவன் சடலமாகக் கிடந்த கோலத்தைக் காணவே அவள் அஞ்சினாள். அதை வாயால் சொல்லவும் அவளுக்குக் கூடவில்லை. காப்பியத்தையும், பிறரையும் பொறுத்தவரை, அவன் எத்தகையவனாக இருப்பினும், அவளைப் பொறுத்தவரை, அவனே நாயகன்; நற்தலைவன். அவன் மரணமுற்றான் என்பதை, எண்ணத்தளவில் சிந்திக்கவும், சொல்லளவில் உரைக்கவும் அவள் தயங்குகிறாள்.

## அச்சமும் அச்சமும்

வாலியின் மரணக் காட்சியில் தாரையைச் சந்திக்கும் கம்ப வாசகர்கள், அதற்கு முன்னதாக அவளைப் பார்த்தது, அவள் அஞ்சி நின்ற தருணத்திலேயாகும். அப்போதும் அஞ்சினாள்; இப்போதும் அஞ்சுகிறாள். இத்தகைய நிலை வந்துவிடுமோ என்று அப்போது அஞ்சினாள்; வந்துவிட்ட நிலையைத் தனது மனம் மொழி மெய்களால் உள்வாங்கிக் கொள்ள இப்போது அஞ்சுகிறாள். அவனிடம் எதிர்த்துப் பேச அப்போது அஞ்சினாள்; தான் பேசப் பேச, அவன் திரும்பப் பேசவில்லையே என்று இப்போது அஞ்சுகிறாள். இராமன்மீது அவன் கொண்ட மதிப்பு கண்டு அப்போது அஞ்சினாள்; அந்த மதிப்பெல்லாம் சரிந்ததே என்று இப்போது அஞ்சுகிறாள் போலும்!

தொடர்ந்து மற்றொரு அச்சமும் அவளை ஆட்கொண்டிருக்க வேண்டும். கணவனை இழந்த பெருந்துயருக்கு உள்ளான பின்னரும், உயிர் நீங்காமல் இருக்கும் தன்னை, அவன் வெறுத்துவிடமாட்டானோ? பிற தருணங்களிலெல்லாம், தான் எத்தகைய குற்றம் செய்யினும் அதனைப் பொறுத்து, பகைமை பாராட்டாத அவன், இப்போது மட்டும் தன்மீது கோபம் நீங்காமலே சென்றுவிட்டானோ? தெய்வமாக இருந்தவன், இப்போது கொடுமையான ஊழ் என்றே ஆகிவிட்டானோ? உயிரான அவன் நீங்கிய பின்னர், உடலானவள் மாத்திரம் எவ்வாறு இருக்க இயலும்?

> ‘துயராலே தொலையாத என்னையும்
> பயிராயோ? பகையாத பண்பினாய்!
> செயிர் தீரா விதி ஆன தெய்வமே!
> உயிர் போனால், உடலாரும் உய்வரோ?’[20]

அவள் கதறியழும்போது, (இறந்து கிடந்த) அவன் மறுமொழி ஏதும் உரைத்தானில்லை. அது கருதியே, அவள் கேள்வி எழுப்புகிறாள். ‘ஏன் பேசவில்லை? ஒருவேளை வெறுத்துவிட்டாயோ? பிரிவுத் துயர் வந்தபின்னும், வாளா இருத்தல் கண்டு

வெறுத்துவிட்டாயோ? (பயிர்தல் - வெறுத்தல்). உயிர் நீங்கிய பின்னும் உடல் இருப்புகண்டு அருவருத்தாயோ? துயரம் கொல்லாத நிலையில், என்னை நீயே அழைத்துக் கொள்ள மாட்டாயோ? (பயிர்தல் - அழைத்தல்). என் விதியை நிர்ணயிக்க வேண்டியவனே! உன்னைத் தடுத்தபோது என்மீது கொண்ட கோபம் குறையாமலே சென்று விட்டாயோ?'

'பகையாத பண்பினாய்' என்று தாரை உரைக்கும் வாசகம் உன்னற்பாலது. யாரைப் பகையாதவன்? இத்தனை காலம் மனைவியாக வாழ்ந்த நிலையில், தான் செய்த பிழைகளையும் குற்றங்களையும் பொறுத்துக் கொண்டு, பகைமை கொள்ளாத வனாக இருந்தான் என்று அவள் சொல்வது பொருந்தும். ஆயினும், தாரைக்கு மட்டுமே தெரிந்த ஒன்றையும் அவள் இங்கே நினைவுகூர்ந்திருக்கலாம். இராமனைப் பற்றிக் கூறிய மாத்திரத்திலே, இராமனுடைய பெருமைகளையெல்லாம் எண்ணிப் பார்த்த வாலி, சுக்ரீவனுக்குத் துணையாகத்தான் இராமன் வந்திருக்கிறான் என்பதை எடுத்துக் காட்டிய பின்னரும், இராமன்மீது பகைமை கொள்ளாதிருந்தான் என்பதை நேர்முகமாக அறிந்தவள் தாரை ஒருத்திதானே! பகைமை நிலையில் வந்து நின்றவனிடம்கூட, வாலிக்குப் பகைமை தோன்றவில்லைஎன்பது அவனது பட்டமகிஷியான அவளுக்கு மட்டும்தானே தெரியும்.

சுக்ரீவனோடு போருக்கு எழுவதற்கு முன்னர், வாலி எத்தகைய மனநிலையில் இருந்தான் என்பதை உணர்ந்தாலன்றி, இராமனைச் சந்தித்த வேளையில், அவன் நடந்துகொண்டதைப் புரிந்துகொள்ள இயலாது. வாலி, இராமனை நோக்கி என்னதான் ஆத்திரமாகக் கேள்விகளை எழுப்பினாலும், அவற்றில் நையாண்டி இருந்த அளவுக்கு வெறுப்பு இருக்கவில்லை; ஆதங்கம் இருந்த அளவுக்கு ஆவேசம் இருக்கவில்லை. சொல்லப்போனால், உள்ளுக்குள் மதிப்பும் மரியாதையும் இருந்த காரணத்தினாலேயே, சுக்ரீவனைத் தேற்றி இராமனிடம் சேர்ப்பிப்பதும், அங்கதனைச் சமாதானப்படுத்தி அடைக்கலப்படுத்துவதும் நிகழ்கின்றன. வாலி செய்த மேற்கூறிய செயல்கள் நிகழ்ந்தபோது, தாரை அருகே

இருந்தாளில்லை. ஆயினும், வாலியின் மனம் போன போக்கினை அவள் உணர்ந்திருந்தாள். அவனுடைய செயல்கள் எத்திசை நோக்கிச் செல்லும் என்பதை அவள் அறிந்திருந்தாள். தனக்கு இறுதி செய்த காகுத்தனிடம் உறுதி கொள்ளுமாறு அங்கதனிடம் அவன் உரைக்கவேண்டுமாயின், அவன் உள்ளத்தில் பகைமை இல்லையென்றுதானே பொருள்! வாலியைத் தனது உள்ளம் என்று அழைத்த அவளே, இக்கட்டத்தில், அவனது உள்ளமாக நின்று அவனது பண்பையும் புலப்படுத்துகிறாள்.

## பெருமை உரைக்கும் பெருமக மடந்தை

தன்னிடம் இறுதியாக வாலி பேசிவிட்டுப் போன சொற்கள், அவள் நெஞ்சைவிட்டு நீங்காமல் நிற்கின்றன. அவளுடைய எண்ணமெல்லாம் அவற்றைச் சுற்றிச் சுற்றியே வருகின்றன.

தேவாசுரர்கள் பாற்கடலைக் கடைந்தகாலத்து நடைபெற்ற சம்பவங்களை, அவன் குறிவிட்டுச் சென்றானல்லவா?

அவற்றையே அவளும் தொடர்கிறாள். அன்றொரு நாள், தன்னந்தனியனாக நின்று, வாசுகியின் தலையையும் வாலையும் தன்னிரு கரங்களால் பற்றி, வாலி கடல் கடைந்தது தேவர்களுக்கு மறந்து போனதோ? போகட்டும், பிற தேவர்களுக்கு மறந்து போகலாம். ஆனால், யமனுக்கு? அமுதம் அருந்தியதால்தானே யமன் என்றென்றும் உயிர்பெற்றவனாக விளங்கமுடிகிறது! அதை மறந்துவிட்டானோ? யமன், மரணத்துக்கு அதிபதி. கையில் பாசக் கயிற்றைக் கொண்டுள்ள அவனே, உயிர்களை இழுத்துக் கொள்கிறான் என்பது ஐதீகம். இத்தகைய ஐதீகத்தால் மட்டும், தாரை இதைச் சொன்னாள் என்று நம்புதற்கில்லை. உயிர் கொடுத்தவன் உயிரையே பறித்து, யமன் நன்றி கொன்றுவிட்டான் என்பது மாத்திரமே பொருளில்லை.

யமன், தருமத்தின் நாயகன்;[21] நடுவுநிலைமைக்குப் பெயர் பெற்றவன். பிற தேவர்களுக்குப் புரியவில்லையாயினும் பரவாயில்லை, அறம் தலைநிறுத்த வேண்டிய யமனுக்குக்கூடவா

புரியவில்லை? அவனே எவ்வாறு உயிர் பருகப் போயிற்று? தரும நியாயங்களை நிலைப்படுத்துபவனுக்கு, நன்றியின் தரும நியாயங்கள் தெரியாமல் போயினவா?

'நறிது ஆம் நல் அமிழ்து உண்ண நல்கலின்
பிறியா இன் உயிர் பெற்ற பெற்றி, தாம்
அறியாரோ நமனார்? அது அன்று எனின்
சிறியாரோ, உபகாரம் சிந்தியாதார்?'[22]

சிறுமைக் குணம் கொண்டவனோ யமன் என்று ஐயப்படும் அவளுக்கு, பூசைக்கு எழாமல் வாலி படுத்துக் கிடப்பதும் விசனத்தைத் தருகிறது. நாள்தோறும், திசைகள் பலப்பல நண்ணி, சிவபூசை செய்யும் வழக்கமுடையவன் அவளுடைய அன்பு நாயகன். அப்படிப்பட்டவன், இன்று இத்தனை காலம், அசையாமல், ஆடாமல், பூசைக்கும் எழாமல் வீழ்ந்து கிடக்கிறானே! நீண்ட நெடிய நேரம் அவன் வாளாவிருந்து அவள் கண்டதில்லை. இப்படியும் இருக்க முடியுமோ என்றே ஐயமெழுப்புகிறாள்.

'அணங்கு ஆர் பாகனை ஆசைதோறும் உற்று,
உணங்கா நாள்மலர் தூய், உன் அன்பினால்
இணங்கா, காலம் இரண்டொடு ஒன்றினும்
வணங்காது, இத்துணை வைக வல்லையோ?'[23]

'கோல மாமலரோடு தூபமும் சாந்தமும் கொண்டு போற்றி, வாலியார் வழிபடப் பொருந்தினார்' என்றே திருஞானசம்பந்தப் பெருமானும் வாலியின் பெருமையைப் போற்றினாரன்றோ!

வாலியின் பெருமைகளைப் பேசுபவளுக்கு, தான் ஏதும் குற்றம் செய்துவிட்டோமோ என்ற எண்ணம் மீண்டும் மீக்குறுகிறது. அவளைத் தனக்கிணையாக நடத்தியவன் வாலி. அமைச்சாய் ஆலோசனை கூறும் அளவுக்கு, அவளை அனுமதித்தவன். அவள் பேசக் கேட்டிருந்து, அவ்வப்போது தனது கருத்துகளையும் தெரிவித்தவன். அப்படிப்பட்டவன், இப்போது அவள் அழும்போதும் பேசாதிருக்கிறானே! கதறும்போதும், சாந்தம்

உரைக்காமல், காணாது கிடக்கிறானே! இது தகுமோ? முறையோ? தகாதென்றால், முறையன்று என்றால், அதற்குத் தான் ஏதோ பிழை புரிந்திருக்கவேண்டும் - என்ன பிழை? புரியாமலேயே புலம்புகிறாள்.

**'வரை ஆர் தோள் பொடி ஆட வைகுவாய்!**
**தரை மேலாய்! உறு தன்மை ஈது? எனக்**
**கரையாதேன் இடு பூசல் கண்டும், ஒன்று**
**உரையாய், என் வயின் ஊனம் யாவதோ?'**[11]

இதுகாறும் வாழ்ந்த வாழ்க்கையில், அவனது தோள்களில் புழுதி படியவே அவள் விட்டதில்லை; ஆனால், இப்போதோ, புழுதிப் பொடியில் நீராடியே, அவனது தோள்கள் தரைமீது கிடக்கின்றன.

'தீங்கு வரும், செல்லாதே' என்று அவள் தடுத்தபோது, தோள் தட்டிப் புறப்பட்டவனல்லவா அவன்! தட்டிய தோள்களைப் புழுதி தட்டுகிறதே! அப்போது அவள் வாக்குக்கு மறுமொழி சொல்லிப் புறப்பட்டவன், இப்போது மட்டும், அவளுக்கு மறுமொழி கூறாமல் கிடப்பது என்ன நியாயம்? 'பெண்மையால் பிழைத்தனை' என்பதையே இறுதியாகக் கூறிவிட்டுப் போனானே, அந்தப் பிழை கருதியே இப்போதும் பேசாதிருக் கிறானோ?

## பொய்யும் மெய்யாக்கும் பொய்யாக் குலக்கொடி

பேதையாக நிற்கும் அந்தப் பெருமாட்டியின் உள்ளம், பல்லாற்றானும் அலைகிறது; பற்பலவற்றை எண்ணி எண்ணிச் சிதைகிறது. தன்னை, அவனுடைய ஆவி என்றே அவன் குறிப் பிடுவது வழக்கம். அவன் பொய் சொல்லி அவள் கேட்டதில்லை. ஆவி என்று சொன்னதும் பொய்யாக இருக்கமுடியாது. அவ்வாறாயின், ஆவி இருக்க, அவன் எங்குப் போனான்? முன்னதாக, அவனைத் தனது உயிர் என்றவள், இவ்விடத்துத் தன்னை உயிராக அவன் எண்ணியதை நினைவுகூர்கிறாள்.

**'நையா நின்றனென், நான் இருந்து இங்ஙன்,**
**மெய் வானோர் திரு நாடு மேவினாய்;**
**ஐயா! நீ எனது ஆவி என்பதும்**
**பொய்யோ? பொய் உரையாத புண்ணியா!'**[ல]

பூவுலகில் வாழ்ந்த நாட்களில் அவன் பொய்யுரைத்தவன் இல்லை. ஆயின், இப்போது கூறிய கூற்றை மறந்துபோயினான். சொன்ன சொல்லைப் பொய்யாக்கிவிட்டான். எங்குப் போயினான்? வானுலகம் சென்றுவிட்டான். வானுலக தேவர் பொய் சொல்லமாட்டார் என்பது கணக்கு (மெய் வானோர்). பூமியில் பொய் புகன்றுவிட்டு, விண்ணுலகம் சென்றால், அதை அவர்கள் ஏற்பரோ? சரி, அப்படியே ஏற்பர்கள் என்றால், அவர்கள் பொய்யர்களாகிவிடமாட்டாரோ?

'மெய் வானோர்' என்று தாரை குறிப்பிடுவது, அவள் நெஞ்சத் தவிப்பின் நெருப்பு வாசகம். சற்று முன்னர்தான், தங்கட்கு வாலி செய்த நன்மையை நினைக்காமல், விண்ணவர் (குறிப்பாக யமன்) நன்றி கொன்றுவிட்டனர் என்று அவள் குற்றம் சாட்டுகிறாள். அப்படியானால், அவர்கள் இப்போது 'மெய்யர்கள்' ஆகமுடியாது. அமுதத்தைக் கொடுத்தும்கூட அவர்கள் மெய்யர்களாகாத தன்மையைக் கண்ட வாலி, அவர்களை மெய்யர்களாக்குவதற்காகத் தானே அங்குச் சென்றுவிட்டானோ?

கணவனும் மனைவியும் உயிருக்கு உயிராய் இருப்பார்களே யானால், அவர்கள் இருக்கும் இடமே அவர்களுக்கு விண்ணுலகு ஒத்ததாக விளங்கும். தாரையைத் தனது ஆவி என்று சொன்னவனுக்குப் பிறிதொரு வானுலகு வசப்படுமோ? அதுவும், அவள் இங்கு இருக்கும்போது? சாத்தியமா? தவிப்பும், துடிப்பும், ஆத்திரமும், ஆவேசமும், துன்பமும், நோவும், அன்பும், ஆதங்கமுமாக, 'மெய் வானோர்' என்று அவள் குறிப்பிடுகையில், அதற்குள் ஆயிரமாயிரம் அர்த்தங்கள் முகம் காட்டுகின்றன.

வானுலகை மெய்யாக்குவதற்காக வாலி விண்ணுலகு எய்தினான் என்பதை அவளே மேலும் வலியுறுத்துகிறாள்.

பாற்கடல் அமுதம் கொடுத்ததை எண்ணிய தேவர்கள், அதனாலேயே தாங்கள் உய்ந்தோம் என்பதை உணர்ந்து, அந்த உதவிக்கு மகிழ்ச்சி தெரிவிக்கும் முகத்தான், முன் வந்து முகமன் கூறி, வாடா மலர் சொரிந்து வாலியை அழைத்துச் சென்றனர் போலும்!

**'எந்தாய்! நீ அமிழ்து ஈய, யாம் எலாம்**
**உய்ந்தேம்' என்று உபகாரம் எண்ணுவார்**
**நந்தா நாள்மலர் சிந்தி, நண்பொடும்**
**வந்தாரா எதிர், வான் உளோர் எல்லாம்?[26]**

வாலி தன்னைவிட்டுச் சென்றுவிட்டான் என்பதை எண்ணும்போது, அவளுடைய துயரம் பெருகுகிறது. அவன் சொன்னவை யாவும் நினைவில் முட்டுகின்றன. 'ஒருவர் உள்ளத்து ஒருவர் உளோம்' என்றே அவன் உரைத்திருந்தான். ஆயின் அது உண்மையா? அவன் உள்ளத்துள் அவள் இருந்திருப்பாளெனில், பகைவரின் அம்பு அவன் நெஞ்சைத் துளைத்தபோது, அவள் இறந்திருக்கவேண்டும். ஒருவேளை, அவள் உள்ளத்து அவன் இருந்திருப்பானேயானால், அவன் இறந்திருக்க இயலாது. அவள் பிழைத்திருக்க, அவன் இறந்துபட்டான். ஒருவர் உள்ளத்தில் மற்றொருவர் இல்லை என்பதையே இது காட்டுகிறதோ?

**'செரு ஆர் தோள! நின் சிந்தை உளேன் எனின்**
**மருவார் வெஞ் சரம் எனையும் வவ்வுமால்;**
**ஒருவேனுள் உளை ஆகின், உய்தியால்:**
**இருவேமுள் இருவேம் இருந்திலேம்[27]**

வாலி இப்போது இல்லை என்ற எண்ணம், அவளுக்கு இராமனைப் பற்றிய சிந்தனைகளைக் கொண்டு வருகின்றன.[28] இராமன் மறைந்திருந்து அம்பெய்தான் என்பதையும் அவள் அறிந்திருந்தாள். சுக்ரீவனுக்கு உதவவேண்டுமென்று நினைத்த இராமன், வாயால் ஒரு சொல் சொல்லியிருந்தால் போதாதா? கொடுக்கச் சொல்லியிருந்தால், அனைத்து செல்வத்தையும் வாலி சுக்ரீவனிடம் கொடுத்திருக்கமாட்டானா?

*ஓயா வாளி ஒளித்து நின்று எய்வான்*
*ஏயா வந்த இராமன் என்று உளான்*
*வாயால் ஏவினன் என்னின், வாழ்வு எலாம்*
*ஈயாமோ? அமிழ்தேயும் ஈகுவாய்?*[29]

பாற்கடல் அமிழ்தம் கிடைப்பதற்கு வாலி காரணமாக இருந்தான் என்ற நினைவுகளே, தாரையை அதிகமாகச் சுற்று கின்றன. அவளிடம் கோபப்பட்டுக் கொண்டு அவன் செல்வதற்கு முன்னதாக, அதனையே அவன் சுட்டிக்காட்டினான் என்பதே காரணமாகலாம். ஒருவர் மரணமடையும்போது, அவர் கடைசியாகக் கூறிய சொற்கள்தாமே நினைவில் நெருடும்? அவ்விதத்தில், அமிழ்தம் ஈந்தவனாகவே வாலியை அவள் எண்ணத் தலைப்படுகிறாள். அதுமட்டுமன்று, தனக்கு அமிழ்தமாக இருந்தவன் இப்போது இல்லை என்ற வேதனையும் அதில் கலந்து ஒலிக்கிறது.

தேவர்கள் அமிழ்தம் வேண்டியபோதே, அதனைக் கொடுப் பதற்காக முயற்சிகள் எடுத்தவன், இராமன் கேட்டிருந்தால், அமிழ்துக்கு நிகரான தனது உயிரையும் தந்திருப்பான். அவ்வாறி ருக்கையில், சுக்ரீவனுக்குத் தரக்கூடிய செல்வங்கள் எம்மாத்திரம்? சொன்ன சொல்லைக் காப்பாற்றுபவன் என்னும் பெருமைக் குரியவன் இராமன் என்றால், அந்தச் சொல்லைக் காக்கும் பணியை, வாலியும் தலைமேல் கொண்டிருப்பான் என்று சொல்லாமல் சொல்கிறாள் தாரை. வாயால் சொன்னாலே நடக்கும் என்றால், அதற்கு வீணாக ஏன் ஆயுதங்களைப் பயன்கொள்ள வேண்டும்?[30]

சொன்னபடி யாரும் கேட்கவில்லையெனில், 'வாய் பேசாது, கை பேசும்' என்று மிரட்டுவது மண்ணோர் வழக்கம். இராமன் அவ்வாறு மிரட்டக்கூட இல்லை, நேரடியாகவே 'கையால் பேசி'விட்டான். சொல்லைக் காட்டிலும், வில்லும் அம்பும் கூர்மையாக முடியுமா? சுக்ரீவனுக்குத் தான் கொடுத்த வாக்கைக் காப்பாற்றுவதற்காகத்தானே, இராமன் மறைந்திருந்து அம்பு போட்டான்? ஒரு வாக்கைக் காப்பாற்ற, மற்றொரு வாக்கையே

பயன்படுத்தியிருக்கலாமே! ஒரு சொல்லைக் காப்பாற்றுவதற்காகத் தனது வில்லறத்தைத் துறக்க சித்தமாக இருந்த இராமனுக்கு, தான் சொன்னால் நடக்கும் என்பதுகூட தெரியாதா? அல்லது, தனது சொல்லின்மீது நம்பிக்கையில்லையா? தாரையின் வினா, வாலியைக் கேட்பதுபோல் அமைந்தாலும், அந்த ஒற்றை வினாவுக்குள் ஓராயிரம் ஐயங்கள் தொனிக்கின்றன. வாலியிடம் தான் அவள் பேசுகிறாள்; இவற்றை அவள் பேசும்போது, ஆங்கு இராமன் இல்லை; அதற்கு முன்னதாகவே, இராமன் அங்கிருந்து அகன்றுவிட்டதாகக் கம்பர் காட்டுகிறார். இருப்பினும், இத்தகைய வினாக்களை அவள் எழுப்பும்போது, இராமன் ஆங்கு இருந் திருந்தால் என்ற ஐயத்தை வாசகர்கள் எழுப்பிக்கொள்ளாமல் இருக்கமுடியவில்லை. சொல்லப் போனால், இராமன் இல்லாமல் போனானே என்று கவலைப்படாமலும் இருக்க முடியவில்லை.[31]

## உற்றது உரைத்த உயிர்த் தோழி

இராமன் வந்திருப்பதையும், சுக்ரீவனோடு நட்பு கொண்டி ருப்பதையும், வாலியைக் கொல்ல வழி தேடுவதையும், முதன் முதலில் தனது கணவனுக்குக் கூறியவள் தாரையே ஆவாள். அவள் கூறியதைக் கிஞ்சித்தும் நம்பாத அவன், அவளையே அதற்காகக் கடிந்துகொண்டான். அவள் கூறியவை உண்மை என்று அவன் உணர்வதற்குத் தனது உயிரையே பகடையாகத் தரவேண்டி வந்துவிட்டது. வாலி, ஊழிக்கால முடிவுவரை வாழக்கூடிய திறமை கொண்டவன். ஆனால், இராமன் வந்திருக்கும் தன்மையை உணர்ந்து கொள்வதற்காக, நீண்ட வாழ்நாளை, அல்பமாகக் குறைத்துக் கொண்டுவிட்டானோ?

*'சொற்றேன் முந்துற; அன்ன சொல் கேளாய்:*
*அற்றான், அன்னது செய்யான் எனா,*
*உற்றாய், உம்பியை; ஊழி காணும் நீ*
*இற்றாய்; நான் உனை என்று காண்கேனோ?'*[32]

வாலியைத் தான் மீண்டும் என்று காணமுடியும் என்று அலமந்த அந்தப் பெண்மணி, அவனை ஓர் அம்பு கொல்ல முடியும் என்பதை நம்ப முடியாதவளாகவே தவிக்கிறாள். அதுவும் மேருமலையை நெருக்கக்கூடிய வல்லமை கொண்ட வாலியை, ஓர் அம்பு துளைத்துவிட இயலுமா?

உயர்ந்து நிற்கும் மேரு மலையை ஒருவன், தன்னுடைய மார்போடு அணைப்பான் என்றால், அவனுக்குத் துன்பம் நேரும். குறைந்தபட்சம் அவனுடைய உடலில் காயம் படும். ஆனால், அந்த மலையைத் தன்னுடைய அணைப்பால் நெருக்கியவன் வாலி. மலையைப் பொடியாக்கும் வல்லமை பெற்ற அவனுடை மார்பை, ஒற்றை அம்பு துளைத்துவிட்டதே. இது நடக்குமோ? நடப்பதற்குச் சாத்தியமில்லை என்னும் தீர்மானத்திற்கே தாரை வந்துவிடுகிறாள். பின்னர் எப்படி வாலி மாய்ந்தான்? தேவர்கள் ஏதோ மாயம் செய்துள்ளனர். எனவே, அவன் மாய்ந்துவிட்டான். பலவிதமாகப் பரிதவிக்கும் தாரைக்கு, திடீரென்று வேறொரு ஐயமும் தோன்றுகிறது. ஒருவேளை, இங்கு வீழ்ந்துகிடப்பது மற்றொரு வாலியோ? ஒரே பெயரில் இருவர் இப்போது சாத்தியம்தானே. அவ்வாறே, இது இன்னொரு வாலியா?

ஒரே பெயரில் இருவர் இருப்பது நடக்குமென்றாலும், அத்தகையோர் இருவரும் ஒரே உருவத்தோடு இருப்பது அவ்வளவு சாதாரணமானதன்று. அதுவும், கொண்டவனை தெய்வமாகக் கருதும் தாரை, இவ்வளவு நேரம் அவன் உடல்மீது விழுந்து புலம்பிய பின்னர், இத்தகையதோர் ஐயத்திற்கு ஆட்படுவது சரியாகத் தோன்றவில்லை. இருந்தும் இவ்வாறு அவள் உரைப்பதற்கு ஏது காரணம்?

தேவர் மாயமோ என்று கேட்பவள், இராமன் செய்த மாயத்தைச் சுட்டுகிறாளோ? ஆம். சுக்ரீவனுக்கு உதவுவதாகச் சொன்ன இராமன், முதலில் ஏதும் செய்யவில்லை. வாலி-சுக்ரீவப் போர், தொடக்கத்தில் 'ஒத்த போர்' என்றே இருந்தாலும், பின்னர் நிலைமை மாறியது. யானையை அழிக்கும் சிங்கமென,

சுக்ரீவனை வாலி தாக்கினான். வாலியின் நகங்களாலும் கரங்களாலும் குலைந்து ஓடி, இராமனிடம் அணுகி, சுக்ரீவன் வருந்தியபோது இராமன் உரைத்த மாற்றம் யாது? 'இருவருக்கும் தனித்தனி அடையாளம் தெரியவில்லை' என்பதுதானே![33] ஒரே மாதிரியான உருவங்களுக்கு இடையில் அடையாளம் தெரியவில்லை என்று இராமன் கூறியதை நினைவுபடுத்தும் விதமாகவே, தாரையின் புலம்பல் அமைகிறது.

நீறு ஆம் மேருவும் நீ நெருக்கினால்;
மாறு ஓர் வாளி, உன் மார்பை ஈர்வதோ?
தேறேன் யான் இது; தேவர் மாயமோ?
வேறு ஓர் வாலி கொலாம், விளிந்துளான்?[34]

அப்பாவின் தம்பியால் இத்தகைய நிலை நமக்கு நேர்ந்ததே என்று மகன் பெயரைச் சொல்லி கதறும் தாரை, இராமனையும் விட்டு வைத்தாளில்லை. எந்தவொரு வீரனும் செய்யத் தயங்கும் செயலை, இராமன் செய்துவிட்டான். இராமனோ, 'பெரியவன்' என்று பெயர் பெற்றவன். அறத்தைச் சார்ந்தோர்க்கெல்லாம், அவரவர் செய்கையே சாட்சி நிற்குமன்றோ! அப்படியானால், இராமன் செய்தது எவ்விதத்தில் சரி?

பலப்பல உரைத்துப் பதறும் அந்தப் பெருமாட்டி, உணர்வு மறந்தாள். துன்பத்தோடு ஒன்றி நின்றாள்.

பிற பெண்டிரின் மூலம், அவளை அந்தப்புரம் அழைத்துச் செல்வதற்கான ஏற்பாடுகளை, மாருதி செய்தான்.[35]

## அரசமாதா ஆன அருந்தவப் பெண்

வாலி மறைவுக்குப் பின்னர், காப்பியத்தில் நாம் தாரையைச் சந்திப்பது, சுக்ரீவன் அரசாட்சி தொடங்கிய நிலையிலாகும். நண்பர்களும், சுற்றத்தாரும் புடைசூழ அரசு தொடங்கும் சுக்ரீவன், தனக்கு நன்மை கூறிய வாலியின் சொற்களைக் கட்டளைகளாகக் கொள்கிறான்; தாயென்னத் தாரையை வணங்குகிறான்.

ஆரியன் அருளின் போய்த் தன் அகல் மலை அகத்தன் ஆன
சூரியன் மகனும் மானத் துணைவரும் கிளையும் சுற்ற
தாரையை வணங்கி, அன்னாள் தாய் என, தந்தை முந்தைச்
சீரியன் சொல்லே என்ன, செவ்விதின் அரசு செய்தான்[36]

இதற்குப் பின்னர், மீண்டும் தாரை புலப்படுவது, சுக்ரீவன் ஆட்சி நடத்துங்கால், கோபத்தோடு இலக்குவன் வந்த தருணத்திலாகும். அடியெடுத்து வைத்தால் மலைகளே அதிர்ந்து குலையும்படியான வெகுளியோடு இலக்குவன், கிட்கிந்தையின் உட்புக, இளையபெருமாளை ஆற்றுதற்கு வழி கிட்டாத இளவரசன் அங்கதன், அரசனும் தனது சிற்றப்பாவுமான சுக்ரீவனிடம் செல்கிறான். அங்கதன் புகல்வதைக் கேட்கும் நிலையில், சுக்ரீவன் இல்லை. செய்வதறியாத அந்த பாலகன், அடுத்து அனுமனிடம் போகிறான். பின்னர், அங்கதனும் அனுமனுமாகச் சேர்ந்து தாரை இருந்த இடம் அடைந்தனர். அன்னையாம் தாரையே, இலக்குவன் கோபத்தைத் தணிக்கும் பெற்றி பெற்றவள் என்னும் ஆலோசனையை, அனுமன் உரைத்திருக்கக் கூடும்.

மந்திரத் தனி மாருதி தன்னொடும்
வெந்திறல் படை வீரர் வீராய் வர
அந்தரத்தின் வந்து அன்னைதன் கோயிலை
இந்திரற்கு மகன் மகன் எய்தினான்[37]

சிக்கல் மிக்கதான அச்சூழலில், சுக்ரீவனை மட்டுமல்லாது, தனது நாட்டையும் காப்பாற்றுகிற முயற்சிகளில் தாரை ஈடுபடுகிறாள். சொந்தத் துயரத்தை ஒதுக்கி வைத்துவிட்டு, பொது நன்மைக்காகப் பணிசெய்யும் தன்மையில், அரசமாதா என்னும் நிலைக்கே இலக்கணமாகவும் திகழ்கிறாள்.

அவளுடைய இருப்பிடத்தை அடைந்த அனுமனும் அங்கதனும் மேலே யாது செய்வது எனக் கேட்க, அவர்களையும் சுக்ரீவன் செயலையும் அவள் இடித்துரைக்கிறாள்.

''செய்யத்தகாதவையும் தீமை மிக்கவையுமான செயல்களை, மிக எளிதாகவும் விரைவாகவும் செய்து முடித்தீர்கள். அவற்றால் விளையும் கேடுகளிலிருந்து தப்பித்துக் கொள்வதற்காகவும் வழி தேடுகிறீர்கள். செய்ந்நன்றி மறந்த பின்னாலும் உயிர் வாழ்தல் சாத்தியம் என்றா எண்ணுகிறீர்?'' என்று அவள் பேசுவது, சுக்ரீவனை முதன்மைப்படுத்தித்தான் என்றாலும், காலத்தை வெல்லும் கருத்தாகவே துலங்குகிறது.

வாலியை அழிப்பதற்கான திட்டத்தை, இராமனுடைய துணை கொண்டு, மிக விரைவாகவும் துல்லியமாகவும் சுக்ரீவன் தீட்டியதையே அவள் குறிப்பிடுகிறாள். அவ்வாறு செய்த தீமையின் மற்றொரு தொடர் தீமை, இராமனுடன் ஏற்படுத்துக் கொண்ட ஒப்பந்தத்தை மறந்ததாகும். கார்காலம் முடிந்தபின்னர் வருவதாகச் சொன்ன வாக்கைக் காப்பாற்றியிருக்க வேண்டும். அதைச் செய்யாமல், காலத்தால் இராமன் செய்த உதவியை மறந்து, செய்ந்நன்றி கொல்லுதல் என்பதே 'அரும் நெடும் தீயன'வாகும். 'எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்; உய்வில்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு' என்னும் வள்ளுவத்தின் விரிவாகவே தாரையின் கூற்று அமைகிறது. தீயனவற்றுள் கொடிய தீமை, செய்ந்நன்றி கொல்லுதலாகும். அவ்வாறு செய்ந்நன்றி கொன்ற தன்மை யாலன்றோ, தற்போது, சுக்ரீவனும், அனுமனும் அங்கதனும் கிட்கிந்தையும், இலக்குவனின் கோப விளைவை எதிர்கொண்டு நிற்பது! இதன் பின்னரும் உய்தல் கூடுமோ?

எய்தி, 'மேல் செயத்தக்கது என்?' என்றலும்
'செய்கதிர், செய்தற்கு அரும் நெடும் தீயன;
நொய்தில் அன்னவை நீக்கவும் நோக்குதிர்;
உய்திர் போலும், உதவி கொன்றீர்' எனா[38]

இவ்வளவும் பேசிய தாரை, இதன் பின்னர் கூறுவதுதான், அரசமாதா என்னும் நிலையில், அவள் கம்பீரமாக கொலு வீற்றிருக்கிறாள் என்பதை விளங்கச் செய்யும்.

'படை திரட்டி வாருங்கள் என்று இராமன் சொன்ன காலக் கெடு தீர்ந்து போனால், உம்முடைய வாழ்நாளும் தீர்ந்துபோகும் என்று பலமுறை நான் சொன்னதையும் நீர் கேட்கத் தவறினீர்; அதன் விளைவுகளை இப்போது அனுபவிக்கிறீர்'' என்று குறிப்பிடு கிறாள்.[39]

*மீட்டும் ஒன்று விளம்புகின்றாள்: 'படை*
*கூட்டும் என்று உமைக் கொற்றவன் கூறிய*
*நாள் திறம்பின், உம் நாள் திறம்பும்' எனக்*
*கேட்டிலிர்; இனிக் காண்டிர், கிடைத்திரால்*[40]

தொடர்ந்து பேசும்போது, 'வாலிக்குக் காலனாக விளங்கி, மிகப் பெரும் செல்வங்களை உங்களுக்கு வாங்கிக் கொடுத்த இராமனும், தம்பி இலக்குவனும், மலைப் பகுதியில் அமர்ந்துகொண்டு வாளா இருப்பார்களா? உங்களுக்கு அவர்கள் உதவினார்கள்; உதவி செய்தவர்களைப் புறக்கணிப்பது உங்கட்கு மட்டுமே தகும்' என்று சற்று கடுமையாகவே கடிந்து கொள்கிறாள்.

*வாலி ஆர் உயிர் காலனும் வாங்க, வில்*
*கோலி, வாலிய செல்வம் கொடுத்தவர்*
*போலுமால், உம் புறத்து இருப்பார்? இது*
*சாலுமால், உங்கள் தன்மையினோர்க்கு எலாம்*[41]

தாரை இவ்வாறு கூறுவதையெல்லாம் செவியுறுகையில், ஓர் உண்மை விளங்கும். வாலியின் மரணமும், அது குறித்து நடை பெற்ற நிகழ்வுகளும், அவள் உள்ளத்தைக் காயப்படுத்தியுள்ளன. மனரீதியாக அவள் பாதிப்புற்றிருக்கிறாள். இருப்பினும், வாலியின் மரணம் சம்பவிக்கக் காரணமான சுக்ரீவன் மீதும், பிறர் மீதும், அவள் வஞ்சம் பாராட்டவில்லை; காழ்ப்புணர்ச்சி கொள்ளவில்லை; பழி வாங்கத் துடிக்கவில்லை.

தனக்குத் துன்பத்தைத் தந்தபோதிலும், சுக்ரீவனைப் பொறுத்த அளவில், இராமன் உதவி இன்றியமையாதது என்பதை அவள் உணர்ந்துவிட்டாள். சுக்ரீவன் ஆட்சிக் கட்டிலில் இருப்பதற்கும், அனுமன் அமைச்சனாக உதவுவதற்கும், வானரச் சேனையைக்

கட்டி ஆளும் பொறுப்பில் சுக்ரீவன் செயல்படுவதற்கும், இராமன் செய்த பேருதவியே காரணம் என்பதில் அவளுக்கு எள்ளளவும் ஐயமில்லை.

காப்பிய மாந்தர்களுக்கும் சரி, காப்பிய வாசகர்களுக்கும் சரி, யாருக்கும் இதுகுறித்து ஐயமேதுமில்லையே, தாரைக்கும் மட்டுமென்ன என்ற வினா எழலாம். பிறர் இக்கட்டத்தை நோக்குதற்கும், தாரை இதனை நோக்குதற்கும் வேறுபாடு நிறையவே உண்டு. பிறரைப் பொறுத்த அளவில், இது, இராமன் சுக்ரீவனுக்குச் செய்த பேரருள்; அவளைப் பொறுத்தவரையில், இராமன் சுக்ரீவனோடு கூட்டுச் சேர்ந்து அவளுக்கு இழைத்து விட்ட பெருநாசம்.

நாசமிழைத்தவர் மீது பரமகருணை வருதல் கூடுமா? தவசிலர்களுக்கும், மகான்களுக்கும் அத்தகைய கருணையும், மன்னிப்பும் சாத்தியமாகலாம். ஆனால், தாரைக்கும்கூட எவ்வாறு சாத்தியமாயிற்று?

வாலியின் மரணத்துக்கு மிக முக்கிய காரணம் யாரெனில், அது சுக்ரீவன் எனக் கூறிவிடலாம். அவ்வாறாயின், சுக்ரீவன்மீது, தாரை பெருங்கோபத்தோடு இருந்தால், அது நியாயம். அதுவும், சுக்ரீவன் தொடர்ந்து பலமுறை தவறுகள் செய்து துன்பப்படுவதையும் அவள் அறிவாள். 'செய்திர் செய்தற்கு அரும் நெடும் தீயன; நொய்தில் அன்னவை நீக்கவும் நோக்குதிர்' என்று அவள் கூறுவதைச் சற்றே நுணுகிக் காண்டல் வேண்டும். தீமை செய்து, பின்னர் அதன் விளைவுகண்டு அடைக்கலம் தேடுதல், சுக்ரீவனுக்கு வாடிக்கை. முதலில் குகை வாயிலில் காத்திருக்கச் சொன்ன வாலிக்குத் தீங்கிழைத்தான்; அதன் விளைவாக ஏற்பட்ட சிக்கல்களிலிருந்து தப்பிப்பதற்கு வழி தெரியாமல் நெடுங்காலம் தவித்தான்; பின்னர், இராமன் நட்பு கிடைக்க, அவனுக்கு விடிவு கிடைத்தது. இராமன் என்ன சொல்லிச் சென்றானோ, அதனைக் கடைப்பிடிக்காமல், மீண்டும் இப்போதும் சிக்கலுக்குள்ளாகி, அதிலிருந்து மீள்வதற்கான வழியை, அவனுக்காக அங்கதனும் அனுமனும் தேடுகிறார்கள்.

நன்றி மறந்ததைப் பற்றி தாரை சொல்வதில், சிந்திப்பதற்கான செய்தியொன்று ஆழப் புதைந்திருக்கிறது. தான் செய்ய வேண்டியதைச் சுக்ரீவன்தான் மறந்துபோனான்; அனுமனும் அங்கதனும் நினைவுபடுத்தாமல் விட்டுவிட்டார்களா? கடமையையும் தர்மத்தையும் மறக்காத அனுமன்கூட, ஏதோவொரு நிலையில், செய்ய வேண்டியதைச் செய்யாமல் விட்டிருக்க வேண்டும்.[42]

இத்தகைய நிலையில், தன்னுடைய கணவனின் மரணத்திற்கு நேரடிக் காரணங்களாக இலங்கிய சுக்ரீவன்மீதும், இராமன்மீதும் அவள் வன்மம் பாராட்டினாளில்லை. மாறாக, மற்றவர்கள் சுக்ரீவனுக்கு நினைவுபடுத்த மறந்த ஒன்றை, அவள் நினைவூட்டி யிருக்கிறாள். 'இராமன் கொடுத்த கால அவகாசம் முடிவுறுவதற் குள் படைதிரட்டிச் செல்லவில்லையானால், அழிவு நேரும்' என்று அவள் கூறியதைக் கேட்ட பின்னராவது, அதுவரை அதைப் பற்றி எண்ணியிராத அனுமனும் அங்கதனும் சிந்தித்திருக்க வேண்டும். 'துன்பம் வரும், எனவே சரியாக நடந்துகொள்ளுங்கள் என்று சொன்னபோதெல்லாம் கேட்காமல் விட்டுவிட்டீர்களே' என்று அவள் ஆதங்கப்படுகையில், வெகுளி வெளிப்பட்டாலும், அவர்களைக் காப்பாற்ற வேண்டும் என்கிற அவளின் கவலையும் தொனிக்காமல் இல்லை. சொல்லிச் சொல்லி மாளாமல், அவர்களாகத் தேடி வந்த நேரத்தில் இடித்துரைக்கிறாள்.

'சுக்ரீவனுடைய நிலையை மட்டுமல்ல, இராமனின் தவிப்பையும், பிறரைக் காட்டிலும் அவளே நன்கறிவாள். சீதையைப் பிரிந்துள்ள காகுத்தன், எத்தகைய பரிதவிப்புக்கு உள்ளாகியிருக்க வேண்டும் என்பதை மிகத் தெளிவாகச் சுட்டுகிறாள்.

தேவி நீங்க, அத் தேவரின் சீரியோன்<br>
ஆவி நீங்கினன்போல் அயர்வான்; அது<br>
பாவியாது, பருகுதிர் போலும், நும்<br>
காவி நாள்மலர்க் கண்ணியர் காதல் நீர்[43]

சீதையைப் பிரிந்த இராகவன், உயிர் நீங்கியவன் போன்றே துடிக்கிறான் என்பதை இதற்குள் சுக்ரீவனும் அனுமனும் நன்குணர்ந்திருக்க வேண்டும். நேரில் இராமனைக் கண்டு, பழகியுள்ள அவர்களுக்குத் தெரியாத, அன்றியும் புரியாத பேருண்மை, அவளுக்குப் புரிகிறது. 'அவரவர் காதல் வயப்பட்டு, இராமன் பிரிவுத் துயரில் வாடுவதை, உணர்ந்து கொள்ளாது விட்டுவிட்டீர்களே' என்பதாகத்தான் அவள் பேசுகிறாள். இது, அனுமனையும் அங்கதனையும் நேரடியாக்க குறிப்பதற்கில்லை. நைஷ்டிக பிரம்மசாரியான அனுமன், திருமணம் ஆகாத பாலகனான அங்கதன் ஆகிய இருவருக்கும், தாரை கூறும் குற்றச்சாட்டு பொருந்தாது. அவள் சுக்ரீவனை முன்னிட்டுத்தான் கூறுகிறாள். எனினும், அத்தகைய மோகப் பெருவெள்ளத்துள் சுக்ரீவனை மூழ்கவிட்டது சரியில்லை என்பதைத் தெரியப்படுத்துகிறாள்.

இராமன் - சீதை பிரிவுகுறித்து அவள் பகர்வது, வாலியின் பிரிவால், அவளே எவ்வளவு வாடியிருக்க வேண்டும் என்பதையும் உணர்த்துகிறது. இடித்துரைக்கும் அரசமாதா, 'அடுத்து என்ன நேருமோ?' என்றும் வருந்துகிறாள்.

**திறம்பினீர் மெய்; சிதைத்தீர் உதவியை;**
**நிறம் பொலீர்; உங்கள் தீவினை நேர்ந்ததால்**
**மறம் செய்வான் உறின், மாளுதிர்; மற்று இனிப்**
**புறம் செய்து ஆவது என்?**[44]

தாரை இவ்வாறு கேட்டிருக்குங்காலை, இலக்குவன் சீற்றம் கண்டு வானரங்கள் ஓடுவதும், மூடப்பட்ட வாயிலை இலக்குவன் எத்துவதும், போருக்கான சூழல் மூள்வதும் நிகழ்கின்றன.[45] 'என்ன செய்யலாம்?' என்ற வினாவுக்கான விடையை மாருதி பகர்கிறான். 'கோபத்தோடு வரும் இலக்குவனின் வழியில் எதிர்ப்பட்டு, அவன் போக்கைத் தாரை மாற்றினால், சிக்கல் விலகும்' என்பது அனுமனின் அறிவுரை.[46]

## இடைமறித்த அன்னை

மாருதி கூறியதை ஏற்ற தாரை, இலக்குவன் வழி நிற்கப் புறப்படுகிறாள். ஆடவர் யாவரையும் அவ்விடம்விட்டு அகலச் சொல்கிறாள்; இலக்குவன் உள்ளத்திருப்பதைத் தானே வினவுவதாக் கூறிப் புறப்படுகிறாள்.

'நீர் எலாம் அயல் நீங்குமின்; நேர்ந்து யான்
வீரன் உள்ளம் வினவுவல்' என்றலும்
பேர நின்றனர், யாவரும்; பேர்கலாத்
தாரை சென்றனள், தாழ் குழலாரோடும்[47]

அச்சத்தால் குரங்குகள் யாவும் கிட்கிந்தை விட்டகல, நட்சத்திரங்களை இழந்த வானம் போல் ஒளிகுன்றிக் கிடந்த நகரில், அரசர் வீதியைக் கடந்து, அகன்றிருந்த அரண்மனைக்குள் நுழைய இலக்குவன் யத்தனித்தகாலை, எதிர்நின்று தடுக்கிறாள்.

புரசை யானை அன்னான் புகலோடும் அவ்
விரை செய் வார் குழல் தாரை விலக்கினாள்[48]

வெண் நகை கொண்டு, வெள் வளை அணிந்து, நுண்ணிடை தாங்கி, நீள் கூந்தல் ஏந்திய பெண்கள் கூட்டத்தை, இலக்குவன் எதிரில் வரச் செய்து, அவன் போக்கை மாற்றுகிறாள். விற்களும், வாள்களும் போல் அணிமணிகள் பளபளக்க, மேகலை முரசமென அதிர, புருவக் கொடிகள் அசைய, ஒரு பெரும் சைனியம் போன்றே நிற்கும் பெண்களின் கூட்டம் காண்கிற இலக்குவன், முகம் திருப்புகிறான்; அவர்களைக் காணவும் அஞ்சுகிறான்.[49]

கையில் இருக்கும் நெடுவில்லைத் தரையில் ஊன்றி, மலர் போன்ற முகத்தைச்சாய்த்து, மாமியார்களின் கூட்டத்திற்கிடையில் நிற்கும் மருமகனாய் கூச்சத்தோடு இலக்குவன் நிற்க, தாரை, மெல்லப் பேசத் தொடங்குகிறாள்.[50]

சாதாரணமாகப் பேசினாளில்லை; நடுங்கிக் கொண்டே பேசுகிறாள். அவள் நெடுங்கண் தாரை; தூமன நெடுங்கண் தாரை. அன்னிய ஆடவனுடன் பேச நேர்ந்தமைக்காகவோ, நியாயமான

கோபத்துடன் வந்துள்ளவனிடம் பேச நேர்ந்தமைக்காகவோ, நியாயம் மீறி சமாதானப்படுத்த வேண்டி நேர்ந்தமைக்காகவோ, அவள் நடுங்குகிறாள்.[51]

நடுங்கியபடியே பேசுகிறாள் எனினும், தாரை வெளிப் படுத்தும் மென்மையும் பண்பும், அவளின் அமைச்சுத் திறனுக்குக் கட்டியம் கூறுகின்றன. 'இந்திரன் உள்ளிட்ட தேவர் குழாத்தாலும் பெற இயலாத நின்னுடைய வரவை நாங்கள் பெற்றோம். இதற்கு நாங்கள் எத்தனை காலம் நோன்பு நோற்றிருக்க வேண்டும். நின்னுடைய திருப்பாதங்கள், எம் இல்லம் சேர்ந்ததால், வாழ்ந்தோம்; உயர்ந்தோம்; உய்ந்தோம்; வினை யாவும் தீர்ந்தோம். இதைவிட எங்களுக்கு உறுதி வேறுண்டோ?' என்பதாக அவளுடைய உரை தொடங்குகிறது.

அந்தம் இல் காலம் நோற்ற
    ஆற்றல் உண்டாயின் அன்றி
இந்திரன் முதலினோரால் எய்தல்
    ஆம் இயல்பிற்கு அன்றே?
மைந்த! நின் பாதம் கொண்டு எம்
    மனை வரப் பெற்று, வாழ்ந்தோம்;
உய்ந்தனம்; வினையும் தீர்ந்தேம்; உறுதி
    வேறு இதனின் உண்டோ?[52]

கிட்கிந்தையின் இறுதிபோன்றே இலக்குவன் கோபம் தோற்றம் தருகிறது. அவன் வருவதைக் கண்ட வானரங்கள், கிட்கிந்தை விட்டே ஓடிவிடுகின்றனவாம். ஆயினும், அவன் வரவைத் தங்கட்கு உறுதி என்று அவள் மொழிவது, அவளின் வாக்குச் சாதுரியத்தையும், தார்மிக பலத்தையும் மெய்ப்பிக்கிறது.

அடுத்து அவள் தொடர்வது, உளவியல் வல்லமைக்கு ஓர் எடுத்துக்காட்டு!

'சீற்றத்தோடு நீ வருவதைக் கண்டு, வானரச் சேனை, காரணம் புரியாது அச்சமுறுகிறது, வீரனே!' - வரவேண்டிய காலத்தில் வானரச் சேனை வாராததன் விளைவே, இலக்குவன் வரவு.

அவ்வாறிருக்கையில், 'வானரச் சேனை' என்று தாரை குறிப்பிடு வதைக் கேட்கிற இலக்குவனுக்கு யாது தோன்றும்? 'ஓ, சேனை ஆயத்தமாக இருப்பதை அறியாது அவசரப்பட்டு விட்டோமோ?' என்று அவன் நினைக்கக் கூடும். சீற்றத்தோடு இலக்குவன் வருவதற்கான காரணம் புரிந்தாலும், வானரங்கள் அஞ்சத்தான் செய்யும். ஏதோ காரணம் புரியாததால் அவை தவிக்கின்றன என்பதுபோன்ற அம்மாதரசியின் உரை, இலக்குவன் மனதில் சலனங்களை ஏற்படுத்துவது திண்ணம். 'காரணம் புரியாமல் அச்சப்படும் அளவுக்குச் சீற்றத்தை அதீதமாக வெளிப்படுத்தி விட்டோமோ?' என்னும் ஐயம் தோன்றம். சலனங்களும் ஐயமும், மெல்ல மெல்ல சீற்றத்தை மட்டுப்படுத்தும்.

**'வெய்தின் நீ வருதல் நோக்கி,**
**வெருவுறும் சேனை, வீர!**
**செய்திதான் உணர்கிலாது; திருவுளம்**
**தெரித்தி என்றார்;**
**ஐய! நீ ஆழி வேந்தன்**
**அடி இணை பிரிகலாதாய்;**
**எய்தியது என்னை?' என்றாள்,**
**இசையினும் இனிய சொல்லாள்**[53]

இலக்குவன் திருவுள்ளம் யாது எனத் தன்னைத் தெரிந்து சொல்லச் சொன்னதாகக் கூறுகிற தாரை, அடுத்து இயம்புவது, இலக்குவனுக்கு மீதம் இருக்கக்கூடிய சீற்றம் கடுகளவாயினும், அதனையும் காணாமல் போக்கிட வல்லது. அப்படி என்னதான் கூறுகிறாள்? 'இலக்குவன், இராமன் இணையடிகளைப் பிரிகிற வழக்கம் இல்லையே, இப்போது எப்படிப் பிரியப் போயிற்று!'

பிறந்த நாள் தொட்டு, இலக்குவன் இராமனைப் பிரிந்த தருணங்கள் வெகு சிலவே.[54] அதுவும் கானகம் புக்க பின்னர், அத்தகு சம்பவங்கள், வேறு வழியின்றி நிகழ்ந்தவையாகும். சூர்ப்பணகையை இராமன் தனியாகச் சந்திக்க நேர்ந்த கட்டம். கரனோடு போர் புரிந்த தருணம், மாயமான் பின் சென்ற நிகழ்வு, நீர் தேடிச் சென்ற இலக்குவனை அயோமுகி தூக்கிச் சென்ற

சம்பவம் என்பவற்றை விரல்விட்டு எண்ணிவிடலாம். இத்தகு நேரங் களிலும், பிற சமயங்களிலும், ஐயனைவிட்டுப் பிரிகிற மனம் இலக்குவனுக்குக் கிடையாது. இராமனைச் சுற்றியே தன்னைப் பின்னிப் பிணைத்துக் கொண்டுவிட்ட இலக்குவனுக்கு, இராமனை விட்டுப் பிரிவது பிடித்தமானதன்று.

இந்த உண்மையை மட்டுமன்று, இராமன் பெயரைச் சொன்னவுடனேயே இலக்குவன் சீற்றம் மட்டுப்பட்டு விடும் என்னும் உண்மையையும் தாரை உணர்கிறாள். 'இராமனைப் பிரியாத நீ, இப்போது பிரிந்தாயே!' என்னும் விசாரிப்பு, இலக்குவனுக்கு, இராமனை, இராமன் இருக்கும் சூழலை, இராமனை வாட்டுகிற தனிமையை, இன்னும் பலவற்றை நினைவுபடுத்தும். வானரச் சேனையை விரைவாகப் பெற வேண்டும் என்கிற எண்ணத்தை அதிகப்படுத்தும். இவை யாவற்றையும் தாரை சிந்தித்திருந்தாளா? சிந்தித்திருந்தாள் என்பதற்கு, அவளுடைய கூற்று சான்றளிக்கிறது.

அவள் பேசுகிறாள் எவ்வாறு? 'இசையினும் இனிய சொல்லால் பேசுகிறாள்'. இசையினும், அவளுடைய குரல் இனி மையாக இருந்ததா? இனிமையைவிட, இசையின் மற்றொரு தன்மையையும், அந்தக் குரல் பெற்றிருந்தது. என்ன தன்மை? நெஞ்சுக்கு அமைதி தருகிற இசையின் இனிமையை, தாரையும் கொண்டிருந்தாள்.

## தாயாகி நின்று தாங்குகிற தெய்வம்

பெண்கள் கூட்டம் என்பதைக் கண்டவுடனேயே, தலை சாய்த்து நிற்கும் இளவல், தன்னிடம் உரையாடுவது யார் என்றே நிமிர்ந்து பார்க்கிறான். உரையைக் கேட்டபோதே, அருள் வந்துவிட்டது; சீற்றம் அகன்றுவிட்டது. அதனாலே நிமிர்கிறான்.

நிமிர்பவன் என்ன காண்கிறான்? வானத்து நிலவு, அதுவும் வட்ட வடிவ முழு நிலவு - அந்த நிலவு, பகல் பொழுதிலேயே பூமிக்கு இறங்கி வந்ததோ? அழகு பூத்த அணங்கோ? பேரரசியோ?

அன்புப் பெருமாட்டி இவள், இன்று மங்கலம் இழந்த மடந்தையோ? - தாரையை நிமிர்ந்து நோக்குகிற இலக்குவனுக்கு, தனது தாயரின் நினைவு வந்தது. பேரழகு வாய்ந்தவளாகவும், பேரரசிாகவும் விளங்குகிற ஒரு பெண், எத்தகைய கம்பீரம் படைத்தவளாக இருப்பாள்! அத்தகைய ஒருத்தி, திடீரென்று கைம்பெண்ணாக ஆக நேர்ந்தால், எத்தகைய கொடுமை!

தனக்கெதிரே நிற்கிற கிட்கிந்தை அரசமாதாவைக் காண்கிற இலக்குவன், தன்னையும் அறியாமல், அயோத்திக்குச் செல்கிறான். 'தன்னுடைய தாயரும் இப்படித்தானே - தந்தையை இழந்த கைம்பெண்களாக, சோகத்தின் உருவங்களாக நிற்பார்கள்!'

> **'ஆர் கொலோ உரை செய்தார்? என்று அருள் வர, சீற்றம் அஃக**
> **பார் குலாம் முழு வெண்திங்கள், பகல் வந்த படிவம் பேலும்**
> **ஏர் குலாம் முகத்தினாளை, இறை முகம் எடுத்து நோக்கி**
> **தார் குலாம் அலங்கல் மார்பன், தாயரை நினைந்து நைந்தான்[55]**

கானகம் புக்க நாள் தொட்டு நாழிகை தொட்டு, அயோத்தியோ, கோசலமோ, இலக்குவன் உள்ளத்தில் இல்லை. 'அடர் வனமே அயோத்தி, இராமனே தசரதப் பெருந்தந்தை, அன்பின் வழி சீதையே அன்னையர்' என்னும் மனப்போக்கு, இலக்குவனுக்கு[56] ஏற்பட்டுப் பலகாலம் ஆகிவிட்டது. ஏறத்தாழ பதிமூன்று ஆண்டுகளுக்கும் மேலாகச் சீதையையே தனது அன்புத் தாய் என்று எண்ணி வாழ்ந்து கொண்டிருக்கும் இலக்குவன், இத்தனை நாட்களில் என்றாவது ஒரு நாள் (ஒரு நாளென்ன, ஒரு கணம் கூட), தன்னைப் பெற்றவளையோ, சக தாயரையோ நினைத்துப் பார்த்தானா என்பது சந்தேகம். சித்திரகூடத்தில், அவர்களைக் காண நேர்ந்தபோதும், அவனுடைய மனம் அவர்களிடம் பற்றவில்லை.[57] அவ்வாறாகில், இப்போது, தாயரை நினைவுகூரும்படியாக அவனைச் செய்தது எது?

கம்பர் காட்டுகிற தாரையின் தோற்றமே, இதற்குக் காரணம் என்றால் மிகையில்லை. மங்கல நாண் நீக்கப்பெற்று, அணி மணிகள் எதையும் அணியாதவளாக, ஓர் அரசி அணிந்திருக்கக்

கூடிய மலர் மாலைகளையும் அணியாதவளாக, குங்குமமும் சந்தனமும் கலந்த கலவைகளைப் பூசாதவளாக, பாக்குமரக் கழுத்துவரை உடல் வெளித் தெரியாதவாறு மேலாடையால் இழுத்துப் போர்த்தியவாறு நின்ற பெருமாட்டியைத்தான் இலக்குவன் காண்கிறான்.

விதவைக் கோலத்தில் இருந்த தாரையைக் காணும் இலக்குவனுக்குத் தன்னுடைய தாயரின் நினைவு வருகிறது. 'தசரத மன்னரின் மறைவுக்குப் பிறகு, அயோத்தித் தாய்மார்களும் இவ்வாறுதானே இருப்பார்கள்!'

*மங்கல அணியை நீக்கி, மணி அணி துறந்து, வாசக்*
*கொங்கு அலர் கோதை மாற்றி, குங்குமம் சாந்தம் கொட்டாப்*
*பொங்கு வெம்முலைகள், பூகக் கழுத்தொடு மறையப் போர்த்த*
*நங்கையைக் கண்ட வள்ளல், நயனங்கள் பனிப்ப நைந்தான்*[58]

இலக்குவனின் நிலை என்ன என்பதைக் குறிப்பதற்காகக் கம்பர் பயன்படுத்துகிற சொல்லே, இவண் முக்கியத்துவம் பெறுகிறது. 'தாயரை நினைந்து நைந்தான்' 'நயனங்கள் பனிப்ப நைந்தான்' 'நைந்து போதல்' என்பதை, துணிகளுக்கும் பிற பொருட்களுக்கும் பொருத்திச் சொல்லும் வழக்கம் உண்டு. அதன்படி, நைந்து போன துணி எவ்வாறிருக்கும்?[59]

திருமணமாகி முப்பது ஆண்டுகள் ஓடிவிட்டன. திருமணச் சேலையும், வேட்டியும் பெட்டிக்குள் இருக்கின்றன. பெட்டியைத் திறக்க நேரும்போதெல்லாம், அவை கண்களில் படுகின்றன. இன்னமும் மெருகு குலையாத பளபளப்பு, அன்றிருந்தது போன்றே இப்போதும் உள்ள அரக்கு வண்ணம், பழங்காலத்துப் பெருளானாலும் புதுமையாகத் தோனறும் சிறப்பு ஒவ்வொரு முறை அவற்றைக் காணும்போதும், திருமணப் பரவசத்தையும், சொல்லொணாச் சிலிர்ப்பையும் ஏற்படுத்துகின்றன. திடீரென்று ஒருநாள், அவற்றைக் கையில் எடுத்துப் பார்க்கத் தோன்றுகிறது. மடித்து வைத்தது, வைத்ததுபோலிருக்க, கையிலெடுத்துப் பிரிக்கும்போது பளபளப்புக் குறையவில்லையானாலும், சற்றே

வேகமாகக் கைபட்டுவிட்டாலும், அந்தத் துணி கிழியத் தொடங்குகிறதே அதுதான் நைந்துபோதல். வெளிப்பார்வைக்கு எந்த மாற்றமும் தெரியாமல், ஆனால், உள்ளே தார் தாராகக் கிழிந்துபோகும் தன்மை.

இலக்குவன் நைந்துபோகிறான். உள்ளுக்குள் கிழிந்து போகிறான்.[೮] இத்தனை நாட்கள் (பதிமூன்று ஆண்டுக்காலம்) தனது வீடு, தனது குடும்பம், தனது சுற்றம் என்ற எந்த உணர்வும் இல்லாதிருந்த இளவலுக்கு, இப்போது தாயரின் நினைவு வருகிறதென்றால், தாரையின் கோலமும் சீலமும், எவ்வளவு தூரம் அவனை பாதித்திருக்க வேண்டும்!

தன்னுடைய பெருளையும் பிறர் பொருளாகக் கருதுவது வள்ளன்மை. பிறர் துன்பத்தையும் தனது துன்பமாகக் கருதுவதும் வள்ளன்மை. இவ்வகையில், வள்ளன்மை பூண்ட இலக்குவன், 'வள்ளல்' என்றே கவிஞரால் சுட்டப்படுகிறான்.

### மடை மாற்றம் செய்த மாண்புறு மங்கை

சுமித்திரையும் கோசலையுமாகத் தாரையைக் காணும் இளவலின் கோபம், குறைந்துவிடுகிறது. அதுமட்டுமன்று, மற்றொரு சிந்தனையும் உதிக்கிறது. 'இவ்வளவு நேரமாக அவள் ஏதேதோ பேசியிருக்கிறாள்; மதித்துப் பேசியவளுக்கு மறுமொழி சொல்லாதிருப்பது நாகரிகமா?'' என்ற உந்துதலால் அவன் மேலும் செப்பலுற்றான். தான் வந்துள்ள காரியம் என்னவென்பதை உரைக்கலானான். 'சூரிய புத்திரனான சுக்ரீவன், சேனையோடு சேர்ந்து சீதையைத் தேடித் தருவேன் என்று கூறினான்; ஆனால், குறித்த காலத்தில் அவன் வாராமையால், அதுபற்றிக் கேட்டுத் தெரிந்துகொள்ள, ஐயன் ஆணைப்படி வந்தேன்; சுக்ரீவனின் செய்கை யாது?' என்றே கூறுகிறான்.

> இனையர் ஆம் என்னை ஈன்ற இருவரும் என்ன வந்த
> நினைவினால் அயர்ப்புச் சென்ற நெஞ்சினன், நெடிது நின்றான்;
> 'வினைவினாட்கு எதிர் ஓர் மாற்றம் விளம்பவும் வேண்டும்' என்று அப்
> புனை குழலாட்கு வந்த காரியம் புகல்வது ஆனான்

*'சேனையும் யானும் தேடித் தேவியைத் தருவென்' என்று*
*மானவற்கு உரைத்த மாற்றம் மறந்தனன், அருக்கன் மைந்தன்,*
*'ஆனவன் அமைதி வல்லை அறி' என அருளின் வந்தேன்;*
*மேல் நிலை அனையான் செய்கை விளைந்தவா*
*விளம்புக என்றான்*[1]

கிட்கிந்தையின் உள்நுழைகையில், இலக்குவன் கடுங் கோபத்துடன் நுழைந்தான். ஆயின், தற்போது அவன் பேசுவதில், கோபத்தின் சாயலைக்கூடக் கண்ணுற முடியவில்லை. சுக்ரீவன் சொன்னதை மறந்துவிட்டானோ என்கிற ஆதங்கமும், அதனை நினைவூட்டத் தலைப்படுகிற ஆலோசனையும் மட்டுமே தொனிக்கின்றன. வெகுளியின் வசப்பட்டு நின்ற இலக்குவனை, தாரையின் தோற்றமும் செய்கையும் மடைமாற்றுகின்றன.

## அருள் உரைத்த அன்பினாள்

வந்த காரியம் என்னவென்பதை இளையபெருமாள் உரைத்த பின்னர், சுக்ரீவன் செயல்களுக்குச் சமாதானமாகத் தாரை புகலத் தொடங்குகிறாள். 'சிறுவாய் அல்லை' என்று முதலில் கூறுபவள், அடுத்துச் சொல்வதே, சுக்ரீவனுக்கு அளிக்கும் சான்றிதழாக அமைகிறது. 'அயர்ந்தான் அல்லன்' என்றாள். 'ஏதோ செல்வச் செழிப்பில் மூழ்கி, அவன் செய்ய வேண்டியதை மறந்துபோனான் என்று எண்ணினாயோ? அவன் மறக்கவில்லை; பற்பல திசைகளுக்கும் தூதர்கள் சென்றுள்ளனர். ஆயிரக் கணக்கிலும் கோடிக்கணக்கிலும் சென்றுள்ள அவர்கள், ஆங்காங்கு உள்ள வானரக் கூட்டத்தையெல்லாம் திரட்டிக் கொணர்வர்; அவர் வர வேண்டிய நாளும் வந்து விட்டது' என்று இலக்குவனுக்கு நம்பிக்கையும் நல்லெண்ணமும் தோன்றும் வகையில் பேசுகிறாள்.

*சீறுவாய் அல்லை - ஐய! - சிறியவர் தீமை செய்தால்*
*ஆறுவாய்; நீ அலால், மற்று ஆர் உளர்? அயர்ந்தான் அல்லன்;*
*வேறு வேறு உலகம் எங்கும் தூதரை விடுத்து, அவ் வெல்லை*
*ஊறுமா நோக்கித் தாழ்த்தான்; உதவி மாறு உதவி உண்டோ?*

ஆயிர கோடி தூதர், அரிக் கணம் அழைக்க ஆணை
போயினர்; புகுதும் நாளும் புகுந்தது; புகல் புக்கோர்க்குத்
தாயினும் நல்ல நீரே தணிதிரால்; தருமம் அஃதால்;
தீயன செய்யார் ஆயின், யாவரே செறுநர் ஆவார்?[62]

சுக்ரீவன் தூதரைப் பலதிசைகளுக்கும் போக்கினான் என்பதோடு தாரை நிறுத்தியிருப்பாளேயானால், இலக்குவனுக்குக் கோபம் முழுமையும் தணிந்திருக்குமா என்பது ஐயந்தான்! ஆயின், அவள் மேலும் மொழிகிறாள். சுக்ரீவன் தவறு செய்தான் என்று நேரடியாகக் கூறாமல், அவன் செயலுக்கு மன்னிப்புக் கேட்பதாகவும், மன்னிக்க வேண்டியது அருளாளர்களான இராம - இலக்குவர்களின் கடமை[63] என்பதாகவும் பேசுகிறாள். சற்றே காலம் தாழ்ந்துவிட்டது; ஆனால், ஆயிரக் கோடி என்னும் மிகப் பெரும் எண்ணிக்கையில் தூதரும் வீரரும் சேனை திரட்டுகையில், சிறிய கால தாமதம் பொறுத்துக் கொள்ளத்தக்கதன்றோ! சூரியகுமாரன், பல திசைகளுக்கும் தூதரை அனுப்ப வேண்டிய கடமையைச் செய்த பின்னரே, கேளிக்கைகளில் ஈடுபட்டுள்ளது போலவும் தாரையின் கூற்று அமைகிறது.[64]

'அடைக்கலம் என்று தங்களிடம் புக்கவனுக்கு, அனைத்து விதமான செல்வங்களையும் அரச போகத்தையும் தாங்களே அளித்தீர். அத்தகைய செல்வச் செழிப்பால், கொண்ட கடமை யினின்றும் அவன் தவறுவானேயானால், அதுவும் தங்களது செயலேயன்றோ?' - தாரை பேசுகின்ற இந்த விபரீத நியாயம், சுக்ரீவன் போதையிலும் போகத்திலும் மயங்கிக் கிடக்கிறான் என்பதை மறைமுகமாக ஒத்துக் கொள்கிறது. இருப்பினும், அவன் தண்டனைக்குரியவன் இல்லை என்றும் நிலைப்படுத்துகிறது. அதுமட்டுமின்றி, தொடர்ந்து, அச்செய்கைக்கு மன்னிப்புக் கேட்பது போன்ற ஒன்றையும் தாரை செப்புகிறாள். 'தங்களால் நன்மைகள் பெற்றவர்கள், சீதையை மீட்பதற்காக நடைபெற விருக்கும் போரில், தங்களுக்காக உயிர் துறக்கவில்லையானால், நட்புக்குத்தான் ஏது பொருள்? அந்த நட்பு நிலைப்பதாக எப்படிக் கூறுவது?' - தாரை எழுப்பும் இவ்வினாக்கள், இலக்குவன் நெஞ்சில் சிந்தனைப் புயலையே தோற்றுவித்திருக்கும்.

என்னதான் இருந்தாலும் சீதையை மீட்பது மட்டுமே தலையாய கடமை என்னும் எண்ணம் இலக்குவன் மனதை முழுமையாக ஆட்கொள்ளும் வகையில், தாரையன் கூற்று அமைகிறது. சீதையை மீட்பது குறித்துச் சிந்தித்தால், இலக்கு வனுக்குக் கவந்தன் கூற்றும், வானரச் சேனையும், இன்னும் பிறவும் நினைவுக்கு வரும். சுக்ரீவனுடனான நட்பைத் தொடர வேண்டி யதன் அவசியம் நினைவுக்கு வரும். சொல்லாமல் சொல்லி, யாவற்றையும் நினைவுறுத்துவதாகத் தாரையின் உரை இருக்கிறது.

'இன்று உங்களுக்குக் கொடுத்த வாக்கை மறந்து போனாலும், இனிவரும் காலங்களில் சுக்ரீவன் உங்களுக்கு உதவுவான். ஆனால், தொடரவேண்டிய நட்பை, அதற்கு முன்னதாக நீங்களே குலைத்துவிடாதீர்கள்' என்று சொல்வதற்கே தாரை விரும்பு கிறாளோ என்பது போன்ற குறிப்பை, அவளது சொற்களில் காணலாம். இதோடு நிறுத்தாமல், அவள் மேலும் தொடர்கிறாள்.

'பேருதவி புரிந்தீர்; பகைமை தீர்த்தீர்; அரசு வீற்றிருக்கச் செய்தீர்; உங்களுக்கே தீமை செய்தால், இப்பிறவியிலேயே வறுமை வந்துவிடும்; அடுத்த பிறவியிலும் நன்மை கிடைக்காது.

'அடைந்தவர்க்கு அபயம் நீவிர் அருளிய அளவில் செல்வம்
தொடர்ந்து நும்பணியில்தீர்ந்தால்,அதுவும்நும்தொழிலே அன்றோ
மடந்தை தன் பொருட்டால் வந்த வாள் அமர்க்களத்து மாண்டு
கிடந்திலர் என்னின், பின்னை, நிற்குமோ கேண்மை அம்மா?

செம்மை சேர் உள்ளத்தீர்கள் செய்த பேருதவி தீரா
வெம்மைசேர் பகையும் மாற்றி, அரசு வீற்றிருக்க விட்டீர்;
உம்மையே இகழ்வர் என்னின், எளிமையாய் ஒழிவது ஒன்றோ?
இம்மையே வறுமை எய்தி, இருமையும் இழப்பர் அன்றே!'[65]

இதற்குப் பிறகு தாரை பகரும் செய்தி, அவளுடைய அறிவின் பெருமிதத்தையும், கருணையின் விசுவரூபத்தையும் காட்டுகிறது. என்ன கூறுகிறாள்? 'வாலியின் ஆற்றலை அழிக்க உமது ஒன்றை அம்பு போதுமாக இருந்தது. அதே அம்பு உம்மிடம் இப்போதும் இருக்கும்போது, பிறிதொரு துணையும் உமக்குத்

தேவையோ? தேவியானாவளைத் தேடுகிறீர்; அதற்கு உறுதுணையாகவே வானரர்க்குத் தகும்' என்று அவள் முத்தாய்ப்பு வைக்கும்போது, இதற்கு மேலும்இலக்குவனின் கோபமென்ன, இராமனே வந்திருந்தால் இராமனின் கோபமும் தாங்காது என்பது தெளிவாக தெரிகிறது.

**'ஆண்டு போர் வாலி ஆற்றல் மாற்றியது அம்பு ஒன்று ஆயின்**
**வேண்டுமோ, துணையும் நும்பால்? வில்லினும் மிக்கது உண்டோ?**
**தேண்டுவார்த் தேடுகின்றீர் தேவியை; அதனைச் செவ்வே**
**பூண்டு நின்று உய்தற்பாலார், நும் கழல் புகுந்துளோரும்**[66]

தாரை இயல்பாகவே அறிவுத்திறம் மிக்கவள். நல்லதொரு அமைச்சாய், தனது கணவனுக்கு ஆலோசனை உரைத்தாள். அவனுடைய அவசரத்தால், அது பயனற்றுப் போனது. இப்போது மீண்டும் அறவுரை கூறுகிறாள். கேட்பவன் முறையாகக் கேட்டதால், வரவிருந்த பிளவும் சிக்கலும் நீக்கப்பட்டன. கோபத்தோடு வந்தவன், கோபப்பட்டு விட்டோமே என்பதற்காக நாணப்படும்அளவுக்கு அரசமாதாவின் சொற்கள் அமைதியைத் தந்தன. இதன்பின்னர், இலக்குவனை அழைத்துக் கொண்டு அனுமன் செல்ல, அவர்களைச் சுக்ரீவன் மாட்டுச் செல்லவிட்டு, தாரை தனது இருப்பிடம் நாடிப் போனாள்.[67]

## அன்பில் நின்ற அன்னை

இராமாயணத்துத் தாரை, கதைப் போக்கின்படி, ஒருசில இடங்களில் மட்டுமே தலைகாட்டுகிறாள். போர் வல்லானாகத் திகழந்த ஒருவனின் பட்டமகிஷியாக இலங்கிய அவள், துயர்மிக்க அனுபவங்கள் சிலவற்றை எதிர்கொள்கிறாள். சாதாரண சராசரி மனிதர்களாக இருந்தால், இத்தகைய அனுபவங்கள். மன இறுக்கத்தைத் தோற்றுவித்துவிடும். ஆயின், தனக்கேற்பட்ட தனிப்பட்ட நட்டத்தையும் துன்பத்தையும் தொலைவில் தூக்கி வைத்துவிட்டு, அன்பும் கருணையும் மீக்குற்ள தேவதையாகத் தாரை மிளிர்கிறாள். உறவினை ஓங்கி அளக்கும் அவளின் பெற்றி, பெண்மைக்கும், பெண்மைச் சிறப்புக்கும் அரண் சேர்கிறது.

## ஆ. தாரை என்பாள் தகுதியின் மிக்காள்

உலகம் முழுவதும் விரிந்து பரந்து கிடக்கும் இராமாயணப் படிவங்கள் பல. இவற்றுள் சில, தாரையின் பெயரைக் குறிப்பிடக் கூட இல்லை. இராமாயணக் கதைப் போக்கு திசையில், வாலி வதம் என்னும் சம்பவம், மிக வேகமாக நடைபெற்று விடுகிறது. அந்தவேகத்தில், தாரையின் என்னும் ஒளி மங்கிவிடுகிறது. ஆனாலும், பிரதான இராமாயணங்களில், தாரை முக்கிய இடம் பெறுகிறாள்.

போருக்குப் புறப்படும் வாலியைத் தடுப்பதற்காக ஓடிவரும் தாரை, வாலி இறந்த பின்னர் அழுதுகொண்டே வரும் தாரை, கார்காலம் முடிந்த பின்னரும் செல்லாமல் சொல் தவறி நிற்கும் சுக்ரீவனைக் காப்பாற்ற முயற்சி செய்யும் தாரை - இவ்வாறான மூன்று கட்டங்களில், தாரையின் வடிவம் பெரிதாகத் தெரிகிறது. இவை தவிர, ஒரு சில இடங்களில் தாரை தென்படலாம். ஆயின் இவையெல்லாம், விரைவான பயணத்தின்போது, ஓரக்கண்ணில் தென்படும் ஒன்றைச் செடி போலத்தானேயன்றி, வேறு தடங்கள் இல்லை.

## ஆதிகவி படைத்த அழகுமங்கை

எடுத்துத் தொடுத்த பதங்களால் இருபத்துநான்காயிரம் செய்யுள்களை யாத்த ஆதிகவியாம் வான்மீகியார், பேரழகுப் பெண்ணகாவே, தாரையைக் காட்டுகிறார்.

சுக்ரீவன் போருக்கழைக்க, வாலியும் அவனும் போரிடு கிறார்கள். அந்த முதல் போரில், வாலியால் புடைக்கப்பட்ட சுக்ரீவன், மீண்டும் இரலைமலைக்கு ஓடி விடுகிறான். பின்னர், இராமனுடைய ஆலோசனைப்படி, கஜபுஷ்பி கொடியை, மாலையாக அணிந்து, மீண்டும் வாலியை அழைக்கிறான். இந்த முறை, தம்பியின் கர்ஜனை கேட்டுப் புறப்படும் வாலியைக் கட்டி அணைத்துத் தடுக்கிறாள் அந்தப் பேரழகி. சுக்ரீவனுக்குத் தோழமையாக இராமன் வந்ததைப் பற்றி அங்கதன் தனக்குச்

சொன்னதைத் தெரியப்படுத்துகிறாள். இராமனுடைய பெருமைகளைச் சொல்கிறாள். 'இராமர் பிரபலமானவர்; போரில் மிகுந்த வலு கொண்டவர்; எதிரிகளை அழிப்பதில் ஊழித்தீ போன்றவர்' என்று பற்பல பேசுகிறாள்.

**தவ ப்ராதுர்ஹி விக்யாத: ஸஹாயோ ரணகர்கஷ:**
**ராம: பர பலாமர்தி யுகாந்தாக்னிர் இவோதித்த:**[68]

இதன் பின்னர், மிக முக்கியமான ஆலோசனை ஒன்றையும் கூறுகிறாள். 'இனி உங்களுக்குத் தம்பியுடன் பகை வேண்டாம். கம்பீரமான கழுத்துடைய சுக்ரீவன், எப்போதுமே உங்களுக்குத் துணை என்பது என் கருத்து.'

**விக்ரஹம் மா க்ருதா வீர ப்ராத்ரா ராஜன் பலியஸா ....**
**.... .....**
**வைரமேத் ஸமுத்ஸ்ருஜ்ய தவ பார்ஸ்வே ஸ திஷ்டது**
**சுக்ரீவோ விபுலக்ரீவஸ்தவ பந்துஹ¬ ஸதா மதஹ**[69]

சுக்ரீவன் என்ற பெயரே 'அழகான கழுத்துடையவன்' என்னும் பொருள் கொண்டதாகும். அந்தப் பெயரை முதன்மைப் படுத்துவதாக, இங்கு தாரை பேசுகிறாள் என்பது சிந்திக்கத்தக்கது. கதாபாத்திரத்தின் பெயரை, அதன் சிறப்பைச் சுட்டிக்காட்டு வதற்குச் சரியானவளாக, ஆதிகவி அவளை எண்ணினார் போலும்! தாரையின் உரை கேட்டுக் கோபப்படும் வாலி, 'தர்மசீலரான இராமர் பாவம் செய்யமாட்டார்'[70] என்று கூறினாலும், சுக்ரீவன் கோணக் கழுத்துடையவன் என்று திட்டிவிட்டு, தனது உயிர் மீது ஆணையிட்டுப் புறப்படுகிறான்.

**சுக்ரீவஸ்ய ச ஸம்ரம்பம் ஹீனக்ரீவஸ்ய கர்ஜதஹ**[71]

கம்பீரமான கழுத்து என்று தாரை குறிப்பிடுவதை, கோணக் கழுத்து என்று வாலி உரைப்பது, அவனுக்கு எவ்வளவு கோபம் இருந்திருக்க வேண்டும் என்பதைப் புலப்படுத்துகிறது.

**வீழும் வானரமும் வீழாத பெண்மையும்**

வாலி வீழ்ந்துவிட்டான் என்ற செய்தி அவளை அடைகிறது. பற்பல அசுரத் தலைவர்களை அழித்த பெருமைக்குரிய தனது தலைவன், மண்ணில் சாய்ந்து கிடப்பதைக் காண்கிறாள். அருகிலேயே, இராமனும்,அவன் தம்பியும், தனது கணவரின் தம்பியும் நிற்பதைக் காண்கிறாள். பதியின் உடலைக் கட்டி யணைத்துப் புரள்கிறாள் (வாலி இத்தருணத்தில் இறக்கவில்லை; மூர்ச்சித்துக் கிடக்கிறான் என்பது பின்னர் புலப்படும்).[72] மகாவீரன் மண் தரையில் படுக்கலாகாது என்றும், தனது இதயம் கடினமானது. எனவே இன்னமும் வெடிக்காமல் இருக்கிறது என்றும், வேறு உலகில் வசிக்கச் செல்வதால் அங்கதனை ஆசீர்வதிக்க வேண்டும் என்றும் பன்னிப் பன்னிக் கதறுகிறாள். அன்புடன் பேசுங்கள் என்று ஆயிரம் முறை கெஞ்சுகிறாள். அத்தனைக்கும் இடையில், வாலிக்கு நேர்ந்த கதிக்கான காரணத்தையும் கூறுகிறாள். 'சுக்ரீவன் மனைவி உம்மால் அபகரிக்கப்பட்டாள் வானர உத்தமரே! அவரும் நாடு கடத்தப்பட்டார். ஆகையினாலே இந்த கதி தங்கட்கு ஏற்பட்டது.'

**சுக்ரீவஸ்ய த்வயா பார்யா ஹ்ருதா ஸ ச விவாஸிதஹ**
**யத்தத் தஸ்ய த்வயா வ்யுஷ்டிஹி ப்ராப்தேயம் ப்லவங்காதிப**[73]

வாலி மகிஷியின் இந்தக் கூற்றைக் கேட்போருக்கு வியப்பு மிகும். வாலியின் வீழ்ச்சிக்கு எது காரணம் என்பதைத் தாரை மிக நுட்பமாகத் தெரிந்து வைத்திருக்கிறாள்! அப்படியானால், ஏன் அவனை அவள் முன்னேமேயே எச்சரிக்கவில்லை?

அவள் எச்சரித்திருக்கக் கூடும். ஆனால், முன்கோபியான வாலி அதனை உதாசீனப்படுத்தியிருப்பான் என்றே ஊகிக்க வேண்டியுள்ளது.

அனுமன், தாரைக்குப் பலவிதமாகச் சமாதானம் கூறுகிறான். (இராமனும் இலக்குவனும் சுக்ரீவனும் இன்னமும் அங்கேதான் உள்ளனர்). அங்கதனைச் சிம்மாசனத்தில் கண்டு ஆறுதல் தேடச்

சொல்கிறான்.[74] தாரை மறுதலிக்கிறாள். மகனுக்குத் தந்தையே தலைமகன் என்று கூறி, வேண்டுமானால் சுக்ரீவன் தீர்மானிக் கட்டும் என்கிறாள். மாண்டுபோன கணவனின் (வாலி மாண்டு விட்டதாகவே அவள் நம்புகிறாள்) சயனமே தனக்கும் உரித்தானது என்று உரிமை பேசுகிறாள். இதன் பின்னரே, குற்றுயிராய்க் கிடந்த வாலி, மெல்லக் கண்திறந்து, சுக்ரீவனிடம் பேசுகிறான்.

**மிக்ஷமாணஸ்து மந்தாஸுஹு ஸர்வதோ மந்தமுச்சவஸன்**
**ஆதாவேவ து சுக்ரீவம் ததர்ஷானுஜமக்ரதஹ**[75]

தனது மகனான அங்கதனை நம்பி, சொந்த மகனாக பாவிக்க வேண்டும் என்கிற விண்ணப்பத்தை வைத்துவிட்டு, சுஷேணர் (சுடேணன்) புத்திரியான தாரையின் பெருமைகளை எடுத்துரைக் கிறான். 'எத்தகைய இக்கட்டிலும், நுட்பமாக யோசனை கூறுவதில் இவள் வல்லவள்; இவள் நல்லதென்று கூறுவது வேறாகாது; இவள் ஆலோசனைப்படி நடந்துகொள்' என்று அறிவுறுத்துகிறான்.

**ஸுஷேண துஹிதா சேயமர்த்த - வினிஸ்சயே**
**ஔத்பாதிகே ச விவிதே ஸர்வதஹ பரிநிஷ்டிதா**
**யதேஷா ஸாத்விதி ப்ரூயாத் கார்யம் தன்முக்த ஸம்ஷயம்**
**ந ஹி தாராமதம் சிஞ்சித்யன்யதா பரிவர்ததே**[76]

தம்பிக்குத் தனது காஞ்சன மாலையைத் (வாலியின் தனி அடையாளமாக அவனது கழுத்தில் திகழந்த தங்க மாலை) தந்து விட்டு, அங்கதனைச் சிற்றப்பாவுக்குத் துணையாக இருக்கச் சொல்லிவிட்டு, வாலி உயிர் துறக்கிறான். கணவனைப் பார்த்துக் கதறியழுது, மகனைத் தந்தைக்கு அபிவாதனம் (தனது பெயர் சொல்லி வணங்குதல்) செய்யச் சொல்கிறாள்.[77]

இதுகாறும், மனவலிமை மிக்கவனாக நின்று கொண்டிருந்த சுக்ரீவன், மெல்ல நிமிர்ந்து தாரையைக் காண்கிறான். தனது மன வலிமை யாவும் குன்றி, இராமன் அடிபணிந்தான். தாரையைக்

கண்ணுற்று நொந்து, உலகப் பற்றுகளைத் துறந்து, தானும் அண்ணனுடைய சிதையில் மாண்டுபோவதாகக் கூறுகிறான். குலநாசம் செய்ததாகத் துடிக்கிறான்.

**மமாத்ய போகேஷு நரேந்த்ர புத்ர மனோ நிவ்ருத்தம் ஸஹ ஜீவிதேன**

**ஸோஹம் பிரவேஷ்யாம்யதி தீப்தம் அக்னி**

**ப்ராதா ச புத்ரேண ஸக்யம் இச்சன்**

**....... ஸீதாம் நிதேஷே பரிவர்தமானாஹா**

**குலஸ்ய ஹந்தாரமஜீவனார்ஹம் ராமானுஜானீஹி**

**க்ருதாகஸம் மாம்[78]**

கிட்கிந்தையின் மந்திரிகள், தாரைக்கு ஆறுதல் கூறுகிறார்கள். மெல்ல எழுந்தாலும், சோகத்தால் தள்ளாடும் அவள், இராமனின் அருகாமைக்குச் செல்கிறாள். இராமனைப் புகழ்ந்து பேசுகிறாள். பின்னர் தனது வேண்டுகோளை வைக்கிறாள். வாலியைக் கொன்ற அம்பைக் கொண்டு தன்னையும் கொல்லக் கேட்கிறாள்.

**யேனைன பாணேன ஹதஹ ப்ரியோ மே**

**தேனைவ மாம் த்வம் ஜஹி ஸாயகேன**

**ஹதா கமிஷ்யாமி ஸமீபமஸ்ய ந**

**மாம்ருதே ராம ரமேத வாலீ[79]**

இதைக் கேட்கும் இராமன், அவளைச் சமாதானப்படுத்துகிறான். வீரர்களின் பத்தினிகள் அழமாட்டார்கள் என்பதையும், அங்கதன் இளவரசாவதால் அவள் மகிழ்வாள் என்பதையும் எடுத்துரைக்கிறான்.

### தலைமையும் தாரையும்

வால்மீகியின் ஆதிகாவியத்தில், மேற்கூறிய காட்சிக்குப் பின்னர், தாரையைப் பற்றி நாம் அறிவது, சுக்ரீவன் போகத்தில் ஆழ்ந்து கிடந்தான் என்னும் சூழலிலாகும். கொடுத்த வாக்கை

மறந்து பெண்ணிலும் புகழிலும் வசப்பட்டுக் கிடந்த அரசனை எழுப்பிக்க, அனுமன் முனைகிறான். அப்போது, சுக்ரீவன், தனது மனைவியோடும், விரும்பத்தக்கவளான தாரையோடும் களித்திருந்தான் என்னும் குறிப்பைத் தருகிறாள் ஆதிகவி.

**ஸ்வாம் ச பத்னிம் அபி ப்ரேதாம் தாராம் சாபி ஸமீப்ஸிதாம்**[80]

வானரவீரர்கள் பல திசைகளுக்கும் செல்கிறார் (நீலன் வானர வீரர்களை ஒன்று சேர்க்கப் புறப்படுகிறான்; பதினைந்து நாட்களுக்குள் வந்து சேராத வானரவீரன் எவனோ, அவன் அழிவான் என்று ஆணையிட்ட சுக்ரீவன் தனது இருப்பிடத்துள் நுழைகிறான்).[81] இதற்கிடையில், கார்கால முடிவில் சுக்ரீவன் வாராமையால் வெகுளி வயப்பட்ட இராமன், கோபத்தை இலக்குவனுக்கு உரைத்து, கிட்கிந்தைக்கு அனுப்புகிறான்.[82]

இலக்குவன் கிட்கிந்தையை அடையும்போது, வானரவீரர்கள் பலர், அந்தச் செய்தியைச் சுக்ரீவனிடம் தெரிவிக்க முயற்சி செய்கிறார்கள். ஆயின், தாரையுடன் தனியே இருந்த சுக்ரீவன், அதை அசட்டை செய்கிறான் என்று ஆதிகவி தெரிவிக்கிறார்.

**தாரயா ஸஹிதஹ காமி ஸக்தஹ கபிவ்ருஷோ ரஹஹ**
**ந தேஷாம் கபிவீராணாம் சுஸ்ராவ வசனம் ததா**[83]

இதைத் தொடர்ந்து உடனேயே, சுக்ரீவனையும் தாரையையும் உருமையையும் நாம் சந்திக்கும் கட்டமும் நிகழ்கிறது. எப்போது?

சுக்ரீவனுடைய அசட்டையை அறிந்த இலக்குவன், வருத்தத்துடன் அங்கதனை அனுப்புகிறான். சிற்றப்பாவையும், தனது தாயையும், உருமையையும் வணங்கி, இலக்குவன் வரவை அங்கதன் அறிவிக்கிறான். இலக்குவன் கோபத்துடன் வந்திருப்பதை உணர்ந்த சுக்ரீவன், தாரையிடம் பேசத் தொடங்குகிறான்.

'சுந்தரி. இயல்பாகவே இளகிய மனம் கொண்ட இளவல், இப்போது வெகுளியோடு வந்திருப்பது எக்காரணம் பற்றி?

மகாத்மாக்கள், பெண்களிடம் கோபத்தைக் காட்டமாட்டார்கள். அவரைச் சாந்தப்படுத்தி, உனது மென்மையான சொற்களால் கோபம் தணிவித்துவிடு. அவருடைய மனமும் இந்திரியங்களும் சாந்தமடைந்த பின், நான் அவரைக் காண்கிறேன்.'

**தவத் தர்ஷன் விசுத்தாதமா ந ச கோபம் கரிஷ்யதி**
**ந ஹி ஸ்திரிஷு மஹாத்மானஹ க்வச்சித் குர்வந்தி தாருணம்**
**த்வயா ஸாந்த்வைருபகாந்தம் பிரஸன்னேந்திரிய மானஸம்**
**ததஹ கமல்பத்ராக்ஷம் த்ரக்ஷ்யாம்யஹம் அரிந்தமம்**[84]

இந்தக் கட்டத்தில், தாரை, நம்முடைய பச்சாதாபத்துக்கு உரியவளாகிவிடுகிறாள். பெண்ணிடம் இலக்குவன் கோபமுற மாட்டான் என்பதை நன்கு உணர்ந்திருந்த சுக்ரீவன், அது மட்டுமே காரணமெனில், உருமையை அனுப்பியிருக்கலாமே? இந்த வினா, தாரை மீதான பரிதாபத்தை மேலும் அதிகப்படுத்துகிறது.

உருமை சென்றிருந்தால், பெண் என்ற காரணத்தால், இளவலின் கோபம் குறைந்திருக்கக்கூடும். ஆயின், 'வாலியின் அழிவால் இவளும்தானே நன்மை பெற்றாள்' என்று இன்னொரு புறம், ஆத்திரம் அதிகப்பட்டிருக்கலாம். மாறாக, தாரையைக் கண்டால், இலக்குவனுக்கு, முன்னர் நடந்தது நினைவு வரும். தன்னுடைய அண்ணனின் செய்கையால் அவள் துன்பமடைந்தாள் என்னும் பரிதாபம் தோன்றும். மேலும், தாரை, இயல்பாகவே இனிய சொல்லினாள்; இடத்திற்கேற்ப, நிலைக்கேற்ப, தக்க சொற்களைக் கூறி சமாதானம் பேசிவிடுவாள். இதையெல்லாம் கணக்குப் போட்டுத்தான், சுக்ரீவன் அவளை அனுப்பியிருக்க வேண்டும்.

கணவனை இழந்தபின்னர், கணவனுடைய சகோதரனுடைய சேர்ந்து வாழவேண்டிய விலங்கியல் சட்டத்துக்கு உள்ளான் தாரை, அவளுடைய திறமைகளைக் காரணமாகக் காட்டப்பட்டு, அதன் விளைவாகவே 'சற்றே ஆக்கிரமிக்கப்படுகிறாளோ' என்கிற ஐயம் எழாமலில்லை.

கணவனுடன் (இப்போது சுக்ரீவன்) கூடியிருந்ததால் சுழலும் கண்களும், தளர்ந்த உடையும், சரிந்த உடலுமாகத் தன்னைக் காணவரும்[86] தாரையை நோக்கித் தலைசாய்த்து நிற்கிறான் இலக்குவன்; அவனுடைய ஆவேசம் அடங்குகிறது. 'காமம் என்பதன் பக்கல் சாராத அவனுக்குக் காமத்தின் வலிமை புரியாது' என்றே தனது வாதத்தை வைக்கிறாள் தாரை. 'காமத்தில் பற்று கொண்டதால், சுக்ரீவன் கடமையை மறந்தான்; காமப் பற்று கொண்டவன் கால தேச வர்த்தமானங்களைப் பொருட்படுத்து வதில்லை; தர்ம அதர்மங்களை உணர்வதில்லை; உறவுக்கு உரியவன் (இராம இலக்குவ உறவுக்கு) என்பதால் அவன் மன்னிக்கப்பட வேண்டியவன்' என்று தாரை உரைத்த வாசகங்களைக் கேட்கும் இலக்குவன், சீற்றம் தணிகிறான்.

அவனை அந்தப்புரத்துள் அவள் அழைத்துச் செல்ல, மீண்டும் காட்சி மாறுகிறது. அந்தப்புரத்துள், பெண்கள் பலருக்கு நடுவில், உருமையோடு இருக்கும் சுக்ரீவனைக் கண்டு, இலக்குவனுடைய சீற்றம், மீண்டும் பொங்குகிறது (இலக்குவசைச் சந்து செய்விக்கத் தாரையை அனுப்பிவிட்டு, அதையும் மறந்தவனாகச் சுக்ரீகூன் நடப்பதைக் கண்டால், நமக்கும் ஆத்திரம் வருகிறது; காமவயப் பட்டவன் சுக்ரீகூன் என்ற தாரையின் சொற்களை இச்சூழல் மெய்ப்பிக்கிறது). கோபத்துடன் கொப்பளிக்கும் இளவலை, தாரை, மீண்டும் நல்வார்த்தைகளால் மென்மைப்படுத்துகிறாள். சுக்ரீவன் நன்றி கெட்டவன் அல்லன் என்றும், வானர வீரர்கள் பல திசைகளிலிருந்தும் சேகரிக்கப்படுகிறார்கள் என்றும், வானர வேந்தனுடைய காமவெறியை மன்னித்தருள வேண்டும் என்றும் பலவாறு அமைதி கூறுகிறாள். இதன் பின்னர், முழுமையாகக் கோபம் தணிகிற இலக்குவன், சுக்ரீவனுடன் உரையாடுகிறான்; மயக்கம் தெளிந்து மன்னிப்புக் கேட்கும் சுக்ரீவன், தன்னுடைய ஆயத்தங்களை எடுத்துரைக்கலானான்.[88]

ஆதிகவியாம் வால்மீகி மாமுனிவர் காட்டுகிற தாரை, நம்முடைய பரிதாபத்துக்கும் பச்சாதாபத்துக்கும், ஏன், ஆதுரத் துக்கும் உரியவளாகிறாள். ஆனாலும், அவள் ஏய்க்கப்படுகிறாள்

என்ற எண்ணம், எங்கோவோர் மூலையில் தலைகாட்டாமல் இல்லை. பேரழகியும் பேரரசியுமான அவள், அலைக்கழிக்கப் படுகிறாளோ என்ற ஆதங்கமே தோன்றுகிறது.

### மானஸத்தின் மனைவிளக்கு

இராமகதையைக் காப்பியமாக மட்டுமின்றி, பக்திக் கடலாகக் கண்ட கோஸ்வாமி துளஸீதாசர்,[67] பேரோவியமாகத் தாரையைத் தீட்டினார் அல்லர். இருப்பினும், துல்லியமிக்கவளாகவே அவள் துலங்குகிறாள்.

சுக்ரீவனுடைய அழைப்பை ஏற்றுப் புறப்படும் வாலியை அவள் தடுக்க முற்படுகிறாள். கொண்டவன் கால்களைப் பணிந்து பற்றிக் கொள்கிறாள். 'சுக்ரீவனோடு ஒப்பந்தம் ஏற்படுத்திக் கொண்டுள்ள இரண்டு சகோதரர்களும் வீரமும் விவேகமும் மிக்கவர்கள்; கோசல வேந்தர் தசரதரின் மக்களே அவர்கள்; யுத்த களத்தில் யமனைக்கூட வெல்லும் திறம் படைத்தவர்கள்' என்று தெரிந்தது தெரிவிக்கிறாள்.

ஒடுங்கிக் கிடந்த அந்தப்புரப் பதுமையாக இல்லாமல், ஒற்றறிந்த பேரரசியாகப் பிரகாசிக்கும் தாரையின் திறமையை, தெரிந்து சொல்லும் பெருமையைப் பாராட்ட முற்படுகிறோம். ஆனால், இராமபக்தியில் திளைத்துக் கிடக்கும் வாலியின் மறுமொழி, தாரையைச் சற்றே ஒளி குன்றச் செய்துவிடுகிறது. மனைவி கூறியதைக் கேட்டு வானரவேந்தன் ஆத்திரம் கொள்ள வில்லை; ஆவேசப்படவில்லை. மாறாக, நெகிழ்ச்சியின் எல்லையில் நின்று நேர்படப் பேசுகிறான். 'பிரியமான மெல்லியலே, ரகுநாதர் எல்லோரையும் சமநோக்கோடு காண்பவர் ஆவார்; அவர் என்னைக் கொல்வாரென்றால், அவருடைய திவ்வியபதியை யான் அடைவேன்' என்பதாகக் கூறுகிறான்.

கஹ பாலீ ஸுனு பீரு ப்ரிய ஸமதரஸி ரகுநாத
ஜௌம் கதாச்சி மோஹி பாரஹின் தௌ புனி ஹோஊம் ஸநாத[68]

இராமபாணத்தால் அடிபட வேண்டும் என்பதுபோல வாலி காத்திருப்பது, தாரையின் முன்னெச்சரிக்கை, முன் ஆலோசனை, தவிப்பு போன்றவற்றின் முக்கியத்துவத்தைக் குறைத்துவிடுகிறது. வாலி போருக்குச் செல்லும் தறுவாயில், தாரையைவிட, இராமனைப் பற்றி வாலிக்கு அதிகமாகத் தெரியும் என்றே தோன்றுகிறது; தாரையைவிட வாலியின் இராமபக்தி கூடுதலானது என்பதுபோலவும் இருக்கிறது.

இராமபாணத்தால் வாலி வீழ்ந்துபடுகிறான். 'ஏதுபற்றி என்மீது அம்பு தொடுத்தாய் என யான் கேட்டபோது, உனது உயிரைக் காத்துக் கொள் என என் நாதன் கூறினான். கற்பகத் தரு கொண்டு யாரும் கமுகு மரத்துக்கு வேலி கட்டுவார்களோ? ரகுநாதனே! உன் திருக்கண் கொண்டு என்னைக் காண்பாயாக. எப்பிறவி யான் எடுப்பினும், உனது திருவடிகளைக் காதலிக்கும் பேறெனக்கு அருள்வாயாக!'[89] என்று யாசித்தபடியே உயிர் துறந்தான். வாலியைத் தம்முடைய மெய்ப்பதத்திற்கு அனுப்பிவைத்தான் இராமன். கிட்கிந்தை நகரவாசிகள், இங்கும் அங்குமாகச் சிதறினர். கூந்தல் சரிய, குவலயமே எதிரொலிக்கக் கதறினாள் தாரை. அவளுடைய துன்பத்தைக் கண்ட இராமன், யாக்கை நிலையாமை குறித்து அவளுக்கு உபதேசம் செய்கிறான். ஞானத்தை அறிவுறுத்துகிறான். 'பஞ்சபூதங்களால் ஆன இவ்வுடல் அழியும்; நிரந்தர உறக்கத்தில் ஆழ்ந்து இந்த உடல் கிடந்தாலும், ஆன்மா என்றும் நிலைக்கும்' என்கிற உபதேசம் உள்ளத்தைச் சமன்படுத்த, இராமன் பாதம் பணியும் அவள், பரமபக்தி[90] என்னும் வரத்தை வேண்டிப் பெறுகிறாள்.

இராமபக்திப் பேரரசைக் கேட்டுப் பெற்றபின்னர், தாரையைப் பிற செயல்பாடுகளில் ஈடுபடுத்துவதற்குத் துளஸீதாசருக்கு மனமில்லை போலும்! கிட்கிந்தையில், சுக்ரீவன் போக வாழ்க்கை வாழ்ந்தான் என்பதைக்கூட, 'கடமையை மறக்கலாகாது' என்கிற அனும உபதேசத்தால் கோடி காட்டுகிற காப்பியகர்த்தா, இந்தக் கட்டங்கள் யாவற்றிலும் தாரையைப் பற்றிக் குறிப்பிடாமலே விடுகிறார். அனுமனுடைய அறிவுரையால் சுதாரிப்பு பெற்ற

சுக்ரீவன், திசைகள் பலவற்றுக்கும் வானர வீரர்களை அனுப்பிய வேளையில், இலக்குவன் வந்து சேர்கிறான். இளவலின் கோபத்தைத் தணிப்பதற்கு, அரசி தாரையை அழைத்துச் செல்லும்படி அனுமனிடம், வானரமன்னன் ஆணை பிறப்பிக்கிறான். அதன்படியே சென்ற அனுமன், இளவலின் அடி பணிந்து, இராகவன் புகழ் பாடுகிறான். பின்னர், இளவல், அனுமனோடு சுக்ரீவ அரண்மனை செல்கிறான்.

**ஸுனு ஹனுமந்த ஸங்க லை தாரா**
**கரி பினதி ஸமுஜாஉ குமாரா**
**தாரா ஸஹித ஜாயி ஹனுமானா**
**சரன பந்தி பிரபு ஸுஜஸ பகானா**[31]

இதன் பின்னர், தாரையைக் காண்போமில்லை. இராமபக்தி என்னும் பேரரசைப் பெற்ற அவள், அதற்குள்ளேயே பேரரசியாகத் திகழ்ந்தாள் என்று கொள்ளுதற்கு இடமுண்டு.

## கடவுள் சீடராகும் கற்பகச் செல்வி

நரோத்தமனாக (மனித உத்தமன்) வால்மீகி காட்ட முற்படுகிற இராமனை, புருடோத்தமனாக (புருடர்களில் உத்தமன் - கடவுள் தன்மைக்கு உட்படுத்தப்பட்ட நிலையில்) உயர்த்திய பெருமை, அத்யாத்ம[32] இராமாயணத்துக்கு உண்டு. அத்யாத்ம இராமாயணம் தோன்றிய பின்னர் இயற்றப்பட்ட அனைத்து இராமகதைகளும், வால்மிகியை அடியொற்றினாலும், அத்யாத்மத்தின் செல்வாக்கி லிருந்து தப்பியதில்லை. இராமகதையை, பக்தி - தொண்டு - இறைபெருமை ஆகியவற்றின்மீதான கோட்டையாக எழுப்புகிற அத்யாத்மம், தாரையை எவ்வாறு சித்திரிக்கிறது?

வழக்கம்போல (பிற இராமாயணங்களைப் போல), வாலியைத் தடுப்பவளாகவே தாரை அறிமுகமாகிறாள். 'தற்போது தாங்கள் யுத்தத்திற்குச் செல்வது சரியன்று எனக் கருதுகிறேன். ஏதோ சலனங்கள் என் மனதில் எழும்புகின்றன' என்று எச்சரிக்கிறாள்.

**கச்சந்தம் வாலினம் தாரா க்ருஹீத்வா நிஷிஷேத தம்**
**ந கந்தவ்யம் த்வயேதானோம் ஷங்கா மே தீவ ஜாயதே**[34]

சுக்ரீவன் தன்னை ஏதும் செய்ய முடியாது என்று கூறி, தான் விரைவிலேயே வெற்றியோடு வருவதாக வாலி வலியுறுத்து கிறான். பின்னர்தான், தனக்குத் தெரிந்த எல்லாவற்றையும் தாரை சொல்லத் தொடங்குகுறாள். அங்கதன் வேட்டையாடுவதற்காகக் கானகம் சென்றது. அப்போது இராம இலக்குவர்களைப் பற்றிக் கேள்விபட்டது, தண்டகவனத்தில் தங்கியபோது சீதையை இராவணன் தூக்கிச் சென்றது, சுக்ரீவனோடு இராமன் நட்பு பூண்டது, பரஸ்பர உதவிக்காக ஒப்பந்தம் ஏற்படுத்திக் கொண்டது என்று பலவற்றையும் தெரிவிக்கிறாள். இவற்றோடுகூட, அவள் கூறுகிற மற்றொன்று உன்னதற்பாலது. 'நாதனே! சுக்ரீவனுடனான உனது பகைமையை விட்டுவிடு. அவனை அழைத்துவந்து இளவரசனாகப் பட்டம் கட்டு. இவ்வகையில், இராமபாதங்களில் அடைக்கலம் ஆகிவிடு. நாட்டை, சமூகத்தை, அங்கதனை, என்னை, நம்மைக் காப்பாற்ற இதுவே வழி' என்றே யோசனை உரைக்கிறாள்.

**அதஸ்த்வம் ஸர்வதா வைரம் த்யக்தவா சுக்ரீவமானய**
**யௌவராஜ்யே அபிஷிஞ்சாஷு ராமம் தவம் சரணம் விரஜ**
**பாஹி மாம் அங்கதம் ராஜ்யம் குலம்...**[34]

அவளைச் சமாதானப்படுத்தி, பெண்மையின் பலவீனத்தால் அவள் அவ்வாறெல்லாம் அஞ்சுவதாகக் கூறிவிட்டு, வாலி புறப்பட்டுச் செல்கிறான்.

வாலி இறந்த செய்தியைக் கொண்டுவரும் வானரங்கள், நகர வாயில்களை மூடிவிட்டு, அங்கதனை அரசனாகப் பிரகடனம் செய்யும்படி, தாரையிடம் கூறுகின்றன. தவிக்கிறாள்; துடிக்கிறாள்; துன்பத்தில் சாய்கிறாள்; அழுகிறாள்; அலறுகிறாள் - 'அங்க தனாலும், அரசாட்சியாலும், நகரத்தாலும், செல்வத்தாலும் எதைச்

சாதிக்கப் போகிறேன்? எனது கணவனுடன் யானும் இறந்து படுகிறேன்' என்று அரற்றிக் கொண்டே, கலைந்த கூந்தலும் தளர்ந்த நடையுமாக, வாலியின் உடல் கிடந்த இடத்தை அடைகிறாள்.[95]

அங்கிருக்கும் இராமன்மீது அவளுடைய கவனம் பாய்கிறது.[96] 'இராமா! பிரிவுத் துயரலம் நீ அறியாததன்று. என்னையும் எனது கணவனின் இருப்பிடம் சேர்த்துவிடு. அதன்படி, இருவர் இணையும் திருமணத்தைச் செய்துவைத்த பெருமைக்கு உனக்கு உண்டாகும்' என்று பிரார்த்தனை செய்கிறாள்.

**பத்னி வியோகஜம் துக்கமனுபூதம் த்வயானக**
**வாலினே மாம் ப்ரயாச்சாஷு பத்னிதானபலம் பவேத்[97]**

இந்தத் தருணத்தில், வேறு எங்கும் காணாத தாரையை - வேறு எங்கும் கிடைக்காத காட்சியைக் காண முடிகிறது.

தாரையின் துன்பத்திற்கு ஆறுதல் கூறத் தொடங்கும் இராமனின் சொற்கள், தத்துவ- வேதாந்த உபதேசமாகவே மிளிர்கின்றன.

பெண்ணே! உனது கணவனின் மரணத்துக்காக துக்கித்தாலும் மேலும் பலவற்றை எண்ணிப் பார்.

உண்மையை நினை.

உடல் என்பது பஞ்சபூதங்களின் சேர்க்கையேயாகும்.

தோல், தசை, எலும்பு போன்றவற்றால் ஆன அது, காலம், கர்மவினை, குணங்கள் ஆகியவற்றின் தொடர்பால் உண்டாகிறது.

உன்னுடைய கணவன் என்பது யார்? அல்லது அது? உடலா? ஆன்மாவா?

உடலென்றால் அது உன் முன் கிடக்கிறது.

பிரிந்துவிட்ட ஆன்மாவை எண்ணிக் கலங்குகிறாய் என்றால், அது மரணமற்றது. நிரந்தரமானது.

ஆன்மா, எங்குமிருப்பது. ஆணன்று, பெண்ணன்று; அலியுமன்று. அதற்கு இரண்டாவது கிடையாது. அதனை எதுவும் பாதிக்காது. அது தூயது. பின் ஏன் கதறுகிறாய்?

இவையெல்லாம் தெரிந்தும், பற்று என்பது பந்தம் என்பதும் எப்படி வந்தன என்கிறாயா?

உடல் தொடர்பாக 'நான்' என்ற சிந்தனை இருக்கும்வரை, இந்திரியங்களின் சிந்தனை இருக்கும்வரை, பிறப்பு இறப்பு என்னும் சுழலின் சம்சாரம் இருக்கும்வரை, பற்று இருக்கும். கனவின் காட்சி இருப்பதுபோல பற்றும் பந்தமும் இருக்கும். உறக்கம் கலையும்போது, அவை கலையும். கனவுபோன்ற நிலையில், சம்சாரமும் பற்றும், மனதால் தோன்றுபவை.

சிவப்பு நிறப் பொருளின் அருகிருக்கும் படிகம், சிவப் பாகவே காட்சி தரும். அது சிவப்பானது அன்று. ஆயினும், பிரதிபலிக்கும்.

அதுபோன்று, புத்தியால், சம்சாரத்தின் வண்ணம், ஆன்மாவின்மீது ஏற்றப்படுகிறது. இதனால், ஆன்மா, மனதோடு தன்னை அடையாளப்படுத்திக் கொள்கிறது. மனதிலிருந்து தோன்றும் இந்திரியங்களோடு ஒன்றிப்போகிறது.

இத்தகைய தொடர்புகளால், ஆன்மா செயல்படவும் தொடங்குகிறது. சில செயல்கள், தூயவை (சுக்லமானவை); சில, தூய்மையற்றவை (கிருஷ்ணமானவை); இன்னும் சில கலப்படமானவை (லோஹிதமானவை). இவற்றின்படி, ஆன்மா, சம்சார சுழலில் சிக்கிக் கொள்கிறது.

ஏதோ சில நற்பயன்களின் காரணமாக, சம்சார சுழலில் சிக்கிய ஆன்மா, எனது பக்தர்களோடு தொடர்படைகிறது.

என்னை நோக்கி கவனம் செலுத்துகிறது.
எனது கீர்த்திகளைக் கேட்கிறது.

மெல்ல மெல்ல, தனது உண்மை ஸ்வரூபத்தைப் பற்றி எண்ணத் தலைப்படுகிறது.

பின்னர், தக்க ஆசான் ஒருவரால் உபதேசிக்கப்படுகிறது. மெய்ம்மை உணர்ந்தபின், உடனடியாக முக்தி அடைகிறது. பெண்ணே! உனது முற்பிறவிகளில், பக்தி ஆசாரத்தை நீ கடைப்பிடித்தாய்.

எனவே, சம்சார விடுதலை பெற, என்னுடைய இந்த வடிவம் உனக்குக் காட்டப்படுகிறது. இனி என்மீதான உபதேசங்களில் கவனம் செலுத்துவாய். இனி சம்சாரச் செயல்பாடுகளில் நீ ஈடுபட்டாலும், அவை உன்னைப் பிணிக்கமாட்டா.

தாரைக்கு இராமன் அளித்த இந்த உபதேசம், இலக்கிய உலகில், 'தாரா கீதை'[98] என்றே வழங்கப்படுகிறது. கிருஷ்ணா வதாரம் எடுத்த காலை, உபதேசத்திற்குத் தக்க பாத்திரமாக அர்ச்சுனனைத் தேர்ந்தெடுத்த இறைவன், இராமாவதாரம் எடுத்தகாலை, தாரைக்கே அத்தகுதி என்று நிர்ணயித்தார் போலும்!

இதன்பின்னர், தாரை 'ஜீவன் முக்தை' ஆனாள்.

**ராமேண பரமாத்மனா**
**அநாதி பந்தம் நிர்தூய முக்தா ஸாபி விகல்மஷா[99]**

அத்யாத்ம இராமாயணத்தின்படியும், தாரை, வாலி மறைவுக்குப் பின்னர், சுக்ரீவனோடு இருக்கிறாள். சொல்லப் போனால், சுக்ரீவனுக்கு நினைவூட்டல் தரும் அனுமன், 'தாரையை நீ மீண்டும் பெற்றாய்'[100] என்றே குறிப்பிடுவான். இலக்குவன் கோபமாக வரும்போது, தாரையே, சமாதானம் உரைக்க அனுப்பப்படுகிறாள்.

## பற்று தொடாத பற்று

இராம - இராவணப் போர் முடிந்து, புட்பக விமானத்தில் சீதையுடன் அயோத்தி செல்கிற இராமன், கிட்கிந்தையைச் சீதைக்குக் காட்டுகிறான். அப்போது, கிட்கிந்தைப் பெண்களைக் காணவேண்டும் என்னும் விருப்பத்தைத் தெரிவிக்கிறாளல்லவா

சீதை! அத்யாத்மத்தின்படி, சுக்ரீவன் (பிற இராமாயணங்களைப் போல் அனுமன் அல்லன்), தாரை உள்ளிட்ட பெண்களை அழைத்து, புட்பகத்தில் ஏற்றுகிறான். முடிசூட்டுவிழா காண தாரையும் அயோத்திக்குச் செல்கிறாள்.[101]

வாலியின் மறைவுக்குப் பின்னர், கிட்கிந்தை அரசாட்சியில் அவள் வாழ்ந்தாலும், சம்சாரப் பற்று அவளைப் பற்றாது என்று இராமன் கூறியதற்கொப்ப அவள் வாழ்ந்திருந்தாள்.

## போர் நடத்திய பேரழகி

இந்தியாவின் பல்வேறு பகுதிகளில் காணப்படுகிற இராமா யணங்களில், அநேகமாக வால்மீகியோ அத்யாத்மமோ காட்டுகிற தடத்தில்தான் தாரையைக் காணமுடிகிறது. சில இராமாயணங் களில், போகிறபோக்கில் வாலியின் மனைவியாகவோ சுக்ரீவன் பெண்டாகவோ அவள் காட்டப்படுகிறாள். காளிதாசரின் ரகு வம்சம்[102] அவள் பெயரைச் சொல்லவில்லை. தனது மனைவியை வாலி வசம் இழந்திருந்த சுக்ரீவனுக்கு இராமன் உதவினான் என்னும் குறிப்பு உள்ளது.

தெற்காசிய இராமாயணங்கள் பலவும், வாலிக்கும் சுக்ரீவனுக்கும் முக்கிய இடங்களைத் தருகின்றன.[103] இந்தப் போக்கின் தொடர்ச்சியாக, தாரையும் பல இடங்களில் முக்கியத் துவம் அடைகிறாள். ஆயின், இது வேறுவிதமான முக்கியத்துவம்.[104]

'க்வே த்வாரோபி' என்னும் லாவோஸ் பிரதேச இராமாயணம், வாலியோடு தொடர்புடைய துந்துபி கதையை மையப்படுத்து கிறது. அதே பகுதியின் மற்றொரு இராமாயணம் 'ஃபிரக் லா ஃபிரக் லாம்' என்பதாகும். இவை இரண்டும் சிற்சில வேறுபாடு களைத் தவிர, அநேகமாக ஒரே போன்று அமைகின்றன. பாரி (வாலி), சுகிப் (சுக்ரீவன்) ஆகிய இருவரும் சகோதரர்கள் (சில இடங்களில், தசரத புத்திரர்கள் என்று கூறப்படுபவர்கள்); இவர்களின் சகோதரியான நன் காசிரஜ்திதா, மூத்த சகோதரனான வாலியை மணக்கிறாள். (லாவோஸ் பிரதேச வழக்கப்படி).

சகோதரர்களுடன் இணைந்து அவளும் ஆட்சி நடத்துகிறாள். எருமை அரக்கனான த்வாரோபி (துந்துபி) அந்தப் பகுதியைத் துன்புறுத்தியபோது, அவனுடன் கருவுற்றிருக்கும் காசிரஜ்திதா போருக்குச் செல்கிறாள். போரில் காயமடைந்து வீழ்கிறாள். அவள் இறந்ததாக எண்ணி, எருமைகள் சென்றுவிடுகின்றன. அப்போது ஓங்கோட் (அங்கதன்) பிறக்கிறான். வரஹ்யோட் என்னும் மற்றொரு மகனும் காசிரஜ்திதாவுக்கு உண்டு.

எருமைகள் அதிகமாகக் காணப்பட்ட லாவோஸ் பகுதியில், எருமை அரக்கனுடன் சண்டையிடும் வாலியும் வாலி மனைவியும் மிகுந்த தாக்கத்தை ஏற்படுத்தியிருக்க வேண்டும். அதன் விளைவே இப்படியொரு கதை எனலாம்.

## இ. தாரை என்னும் தகையுறு பெண்மை

வால்மீகி முனிவர், 'மஹா கன்னிகைகள்' என்ற சிறப்பு அடைமொழியோடு மூன்று பெண்மணிகளைக் காட்டுவார். மூவரும் ஒருவருக்கொருவர் வேறுபட்டவர்கள். முதலாமவள் அகலிகை; அடுத்தவள் தாரை; மூன்றாமவள் மண்டோதரி. சந்தர்ப்பச் சூழலில் சிக்குண்டு, இராமனால் தூய்மைப்படுத்தப் பட்டவள் அகலிகை; தானே தூய்மையானவள் மண்டோதரி. இவர்கள் இருவருக்கும் இடையில், தாரை எங்கு வருகிறாள்?

தாரை தூய உள்ளம் கொண்டவள்; தொடக்கத்தில் அவளுடைய தூய்மை, வாலியால் மங்கவைக்கப்படுகிறது. இலக்குவனுடைய வெகுளியை மடைமாற்றும்போது, அந்தப் பேரொளி மிளிரத் தொடங்குகிறது.

### தாயாகி நின்றாள்

வால்மீகியின் தாரைக்கும் கம்பரின் தாரைக்கும் வேறுபாடுகள் உண்டு. சுக்ரீவனை ஆற்றுப்படுத்துவதிலும், இலக்குவனுடைய வெகுளியைத் தணிப்பதிலும் இருபெரும் காப்பியங்களிலும் அவளுடைய பங்கு பெரியது. ஆனாலும், வால்மீகியின்

தாரையைக் காட்டிலும் கம்பரின் தாரை, சற்றே தூக்கலாக மிளிர்வதற்குக் காரணங்கள் உண்டு.

வாலியின் மரணத்திற்குப் பின், தாரை வைதவ்யம் பூண்டதாகக் கம்பர் காட்டுகிறார். கழுத்துவரை உடையைப் போர்த்து, மங்கல அணிகளையும் அலங்காரங்களையும் துறந்து நிற்கும் தாரையைக் காணும் இலக்குவன், தனது தாயரை எண்ணுகிறான்.

வாலியின் பேரரசியாக வாழ்ந்துவிட்ட தாரையை, சாதாரண மானவளாக வாழவிட கம்பருக்கு மனம் இல்லை போலும்! அதைவிட, பிறிதொரு காரணம் உண்டு!!

கன்னடத்தில், ஸ்ரீ இராம தர்சனம் என்னும் நூல், கே.வி. புட்டப்பா அவர்களால் (குவேம்பு), *1940*-களில் இயற்றப்பட்டது. இதில், வாலியின் ஈமத்தீயில் தானும் ஏறி மாய்ந்துபோகிறாள் தாரை. உருமையைக் கவர்ந்தாலும், வாலி அவளைத் தொடவில்லை என்பதாகக் கதை நடத்தப்படுகிறது.

தென்னிந்திய வாய்வழி மரபுகள் பலவற்றில், தாரை வாலியோடு இறந்துப்போவாள்; அல்லது கைம்மைக் கோலம் பூணுவாள். கம்பருடைய செல்வாக்காகத்தான், இத்தகைய மரபு இருக்கக்கூடும்.

வாலியின் மரணத்திற்குப் பின்னர், விலங்கியல் நெறிப்படி, சுக்ரீவனோடு தாரை சேர்ந்து வாழ்ந்தாள் என்று சொல்வதில், சட்டச் சிக்கலோ, காப்பியச் சிக்கலோ இல்லை. ஆனால், தார்மிகச் சிக்கல் உண்டு.

இன்றுவரை மிகப் பெரிய வினாவுக்கு உட்படுத்தப்படும் வாலி வதம் நடைபெறுவதற்கான நியாயமான காரணம் என்ன? வாலி, சுக்ரீவன் மனையாளை வௌவினான் என்பதுவேயாகும். பிறன் மனையாளை அபகரித்த இராவணன்மீது போர் தொடுக்க வேண்டுமாயின், அத்தகைய தவறைத் தானும் செய்த வாலியோடு கூட்டு சேர முடியாது; அவனுக்கு மன்னிப்பு வழங்கவும் முடியாது.

இராவணனுக்கே மன்னிப்பு வழங்கத் தயாராக இருந்த இராமன், வாலிக்கும் அதனை அளிக்க முடியாதா? என்று காப்பியத்தை வாசித்து முடித்துவிட்ட நிலையில், இன்றைய வாசகர் வினாவெழுப்பலாம். ஆனால், காப்பிய மாந்தரின் நிலையில்?... வாலிக்கு மன்னிப்புக் கொடுத்துவிட்டால், எந்த முகத்தோடு இராவணன்மீது போர்தொடுப்பது? வாலி செய்த தவறை நியாயப்படுத்திவிட்டால், இராவணன் நிலையையும் நியாயப்படுத்த வேண்டியதாகிவிடும். இராவணன்மீது போர்தொடுத்துவிட்ட பின்னர், ஒரு வேளை அத்தகு நிலையிலும் சீதையை விடுவதாக இருந்தால் இராவணனுக்கு மன்னிப்பு வழங்கலாம் என்பதுதான் இராமனுடைய நிலை என்பதை விளங்கிக் கொள்ளுதல் அவசியம்.

இது கிடக்க, வாலிக்கு மன்னிப்பு வழங்க முடியாத நிலை, தாரையை எவ்வாறு பாதிக்கிறது?

பிறன் மனையாளைக் கவர்ந்தான் என்கிற குற்றச்சாட்டை வாலியின்மீது சாட்டியபின்னர், கிட்டத்தட்ட அதே போன்றதான தவறை, சுக்ரீவனைச் செய்ய விடலாமா?

எனவேதான், தாரையை, ஆதிகாவியத் தாரையிலிருந்து கம்பர் வேறுபடுத்துகிறார். குவேம்பு, தாரையை உடன்கட்டை ஏறச்செய்வதும் இதுபற்றியேயாகும்.

இன்னொன்றையும் இந்நிலையில் சிந்தித்தல் சிறப்பு. உருமையை வாலி கவர்ந்தபோது தாரை என்ன செய்தாள்? சுக்ரீவனை அடித்து விரட்டியபோது என்ன செய்தாள்?

இத்தகு தருணங்களில், தாரை வாலிக்குக் கட்டாயம் அறிவுரை கூறியிருப்பாள். போருக்குச் செல்லும் தருணத்தில் வாலிக்கும், இலக்குவன சீற்றத்தைக் கண்டபோது அனும அங்கதனுக்கும் அறிவுரை கூறியவள், முன்னர் மாத்திரம் வாளா இருந்திருப்பாளா?

அவள் கூறியும், முன்கோபியும் மூர்க்கனுமான வாலி கேளாதிருந்திருப்பான் என்ற முடிவுக்கே வரவேண்டியுள்ளது.

அங்கதனுக்கு அவள் தாய். ஆயினும், கொண்ட கணவனுக்கும்கூட, தேவைப்படும் நேரத்தில், தாயின் அன்பைக் காட்டுவதற்கு அவள் தயங்கவில்லை. சுக்ரீவனுக்கும் இலக்குவனுக்கும் அதனை அபரிமிதமாகவே புரியச் செய்கிறாள். ஆகவேதான், அவளைத் தாயாகித் தாங்கும் தெய்வமாகப் படைக்கமுற்படுகிறார் கம்பச் சக்கரவர்த்தி.



குறிப்புகள் :

1. ஒரு பெண் மூலம் பிறப்பெடுக்காதவர்கள்,அயோனிஜர்கள் -அதுவே, அயோனிசை ஆகிறது. தாரை அயோனிசை என்பதாகப் புராணங்கள் குறிப்பிடுகின்றன. அவளுடைய தந்தை சுஷேணன் என்னும் வானர வீரன் என்று குறிப்பிடப்படும் கதைகளில்கூட, அவளுடைய தாயின் பெயர் சுட்டப்படவில்லை.
2. ஜாவா இராமாயணம்
3. இராமாவதாரம், கிட்கிந்தை, வாலி வதை - 22
4. இராமாவதாரம், கிட்கிந்தை, வாலி வதை - 23
5. வான்மீகத்திலும் பிற இராமகாதைகளிலும், ஒருமுறை சண்டையிட்டு சுக்ரீவன் ஓடிவிட்ட நிலையில், மீண்டும் அரைகூவல் விடுத்தபோது வாலி எழுவான்.அப்போது தாரை தடுப்பாள். கம்பரில், முதன் முறையே தடுக்கிறாள்.
6. இராமாவதாரம், கிட்கிந்தை, வாலி வதை - 24
7. இராமாவதாரம், கிட்கிந்தை, வாலி வதை - 25
8. திருமாலின் தசாவதாரங்களுள் வராக அவதாரம்
9. பாற்கடல் மந்தனத்தின்போது, தேவாசுரர்கள் அயிர்ந்த பின்னர், வாலி தனியொருவனாகக் கடல் கடைந்ததாகச் சிலபுராணங்கள் உண்டு.
10. இராமாவதாரம், கிட்கிந்தை, வாலி வதை - 26, 27
11. இராமாவதாரம், கிட்கிந்தை, வாலி வதை - 28, 29
12. இராமாவதாரம், கிட்கிந்தை, வாலி வதை - 30
13. 'வாய்மையும் மரபும் காத்தவனாக தசரதனைப் பற்றியும், தூயவனாக பரதனைப் பற்றியும் பேசதல்.
14. 'துன்னிய அன்பினார் சொல்லினார்' என்னும் தாரை கூற்று.
15. இராமாவதாரம், கிட்கிந்தை, வாலி வதை - 31 -33
16. இராமாவதாரம், கிட்கிந்தை, வாலி வதை - 36
17. இராமாவதாரம், கிட்கிந்தை, வாலி வதை - 162
18. இராமாவதாரம், கிட்கிந்தை, வாலி வதை - 163
19. இராமாவதாரம், கிட்கிந்தை, வாலி வதை - 164

20. இராமாவதாரம், கிட்கிந்தை, வாலி வதை - 165
21. அந்தகன் (பார்வை இல்லாதவன்) என்றழைக்கப்படுகிற யமன், தருமம் தவறாதிருக்கவே பார்வையற்றவனதாகச் சொல்லப்படுகிறது.
22. இராமாவதாரம், கிட்கிந்தை, வாலி வதை - 166
23. இராமாவதாரம், கிட்கிந்தை, வாலி வதை - 167
24. இராமாவதாரம், கிட்கிந்தை, வாலி வதை - 168
25. இராமாவதாரம், கிட்கிந்தை, வாலி வதை - 169
26. இராமாவதாரம், கிட்கிந்தை, வாலி வதை - 171
27. இராமாவதாரம், கிட்கிந்தை, வாலி வதை - 170
28. தாரை, வாலியின் இறந்த உடலைத் தேடி வந்து அழும்போது, இராமன், சுக்ரீவனோடும், அங்கதனோடும் அவ்விடம் விட்டு அகன்று விட்டதாகக் கம்பர் காட்டுவார்.
29. இராமாவதாரம், கிட்கிந்தை, வாலி வதை - 172
30. பாற்கடலைத் திருமாலே கடைந்ததாகவும் சில புராணங்கள் உண்டு.
31. கம்பர் தவிர, பிற இராமாயணங்கள் பலவற்றில் (வான்மீகம் உட்பட) இராமன், தாரை அழும்போது, அங்குதான் இருக்கிறான்.
32. இராமாவதாரம், கிட்கிந்தை, வாலி வதை - 173
33. 'உமை மேற்றுமை தெரிந்திலம், கொடிப்பூ மிலைந்து செல்க' என்னும் இராமன் கூற்று.
34. இராமாவதாரம், கிட்கிந்தை, வாலி வதை - 174
35. இராமாவதாரம், கிட்கிந்தை, வாலி வதை - 178. அமைச்சர்களும், பிறரும் அவளை அழைத்துச் சென்றதாக மற்ற இராமாயணங்கள் காட்டும்.
36. இராமாவதாரம், கிட்கிந்தை, அரசியல் - 32
37. இராமாவதாரம், கிட்கிந்தை, கிட்கிந்தை - 27
38. இராமாவதாரம், கிட்கிந்தை, கிட்கிந்தை - 28
39. தாரை அறிவுரை கூறியதற்கான குறிப்பு, அவள் வாய்மொழியாகவே வருகிறது.
40. இராமாவதாரம், கிட்கிந்தை, கிட்கிந்தை - 29

41. இராமாவதாரம், கிட்கிந்தை, கிட்கிந்தை - 30
42. அனுமனின் நினைவூட்டல், பிற இராமாயணங்களிலும் உண்டு.
43. இராமாவதாரம், கிட்கிந்தை, கிட்கிந்தை - 31
44. இராமாவதாரம், கிட்கிந்தை, கிட்கிந்தை - 32
45. இராமாவதாரம், கிட்கிந்தை, கிட்கிந்தை - 33 முதல் 40 வரையான பாடல்களின் காட்சி
46. இராமாவதாரம், கிட்கிந்தை, கிட்கிந்தை - 42
47. இராமாவதாரம், கிட்கிந்தை, கிட்கிந்தை - 43
48. இராமாவதாரம், கிட்கிந்தை, கிட்கிந்தை - 44
49. ‘பார்க்கவும் அஞ்சினான், பனையினும் பெரிய தோளான்’
50. ‘மாமியர் குழுவின் வ்நதான் என மைந்தன் நிற்ப’
51. ‘நடுங்குவாள் இனைய சொன்னாள்’ - இராமாவதாரம், கிட்கிந்தை, கிட்கிந்தை - 48
52. இராமாவதாரம், கிட்கிந்தை, கிட்கிந்தை - 49
53. இராமாவதாரம், கிட்கிந்தை, கிட்கிந்தை - 50
54. இராமனை எப்போதும் அண்டியிருந்ததால் இராமானுஜன் ஆனவன்.
55. இராமாவதாரம், கிட்கிந்தை, கிட்கிந்தை - 51
56. அயோத்தியில் சுமித்திரை தந்த அறவுரை
57. இராமாவதாரம், அயோ்தியா, திருவடி சூட்டு படலம் - சித்திரகூடச் சந்திப்பு.
58. இராமாவதாரம், கிட்கிந்தை, கிட்கிந்தை - 52
59. நைதல் - நிலை கெடுதல், கிழிதல், வாடுதல், நசுங்குதல், சுருங்குதல், கெடுதல்.
60. நைதல் என்பது மேற்கூறிய பொருட்களைத் தந்தாலும், புறப்பார்வையில் கேடில்லாமல், அகத்தில் கேடுறுவதைக் குறிக்கும்.
61. இராமாவதாரம், கிட்கிந்தை, கிட்கிந்தை - 53, 54
62. இராமாவதாரம், கிட்கிந்தை, கிட்கிந்தை - 55 - 56
63. தவறு செய்துவிட்டாலும், முந்தி நின்று மன்னிப்புக் கேட்பது, காழ்ப்புணர்ச்சியைத் தவிர்க்கும். இது உளவியல் தத்துவம்.

64. இவ்வாறே சில இராமாயணங்கள் காட்டுகின்றன.
65. இராமாவதாரம், கிட்கிந்தை, கிட்கிந்தை - 57 - 58
66. இராமாவதாரம், கிட்கிந்தை, கிட்கிந்தை - 59
67. இதன் பின்னர், கம்ப காப்பியத்தில் தாரையை நாம் காண்போமில்லை.
68. ஸ்ரீமத் வால்மீகி இராமாயணம், கிஷ்கிந்தா காண்டம், பஞ்சதச ஸர்க : 18 - 19
69. ஸ்ரீமத் வால்மீகி இராமாயணம், கிஷ்கிந்தா காண்டம், பஞ்சதச ஸர்க : 24 - 28
70. இராமன் மீது வாலி கொண்டிருந்த நன்னம்பிக்கை வால்மீகியால் காட்டப்பட்டாலும், கம்பர் அந்த நம்பிக்கையைப் பெரிதும் மேன்மைப்படுத்துகிறார். சகோதரப் போரில் இராமன் தலையிட மாட்டான் என்னும் மதிப்பாகவே அதனை உயர்த்துகிறார்.
71. ஸ்ரீமத் வால்மீகி இராமாயணம், கிஷ்கிந்தா காண்டம், ஷோடச ஸர்க : - 4
72. மூர்ச்சை தெளிந்து எழுந்து, சுக்ரீவனைத் தேற்றி, அங்கதனை அவனுக்குத் துணையாக்கி, தாரையைப் பற்றி நல்வார்த்தை கூறி, பின்னரே வாலி மறைவான்.
73. ஸ்ரீமத் வால்மீகி இராமாயணம், கிஷ்கிந்தா காண்டம், விம்ச ஸர்க: - 11
74. அனுமன் சிம்மாசனத்தில் அங்கதனை அமர்த்தி ஆறுதல் தேடு என்று கூறியபின்னர், சிறிது நேரம் செல்ல, இராமன், அவனை இளவரசனாக்கி உனது துயரம் போக்கு என்று கூறுவான்.
75. ஸ்ரீமத் வால்மீகி இராமாயணம், கிஷ்கிந்தா காண்டம், த்வாவிம்ச ஸர்க: - 1
76. ஸ்ரீமத் வால்மீகி இராமாயணம், கிஷ்கிந்தா காண்டம், த்வாவிம்ச ஸர்க: - 13 - 14.
77. ஸ்ரீமத் வால்மீகி இராமாயணம், கிஷ்கிந்தா காண்டம், த்ரயோவிம்ச ஸர்கத்தின் சம்பவங்கள்.
78. ஸ்ரீமத் வால்மீகி இராமாயணம், கிஷ்கிந்தா காண்டம், சதுர்விம்ச ஸர்க : - 4 - 24.

79. ஸ்ரீமத் வால்மீகி இராமாயணம், கிஷ்கிந்தா காண்டம், சதுர்விம்ச ஸர்க :- 34.
80. ஸ்ரீமத் வால்மீகி இராமாயணம், கிஷ்கிந்தா காண்டம், ஏகோனத்ரிம்ச ஸர்க : - 4
81. வானர வீரர்களைப் பல திசைகளுக்கும் அனுப்பும் சுக்ரீவன், அவர்கள் திரும்பி வருவதற்கான கெடுவும் நிர்ணயிப்பான்.
82. சுக்ரீவன் வீரர்களை அனுப்புவது, இராமனுக்குத் தெரியாது.
83. ஸ்ரீமத் வால்மீகி இராமாயணம், கிஷ்கிந்தா காண்டம், ஏகத்ரிம்ச ஸர்க :- 22
84. ஸ்ரீமத் வால்மீகி இராமாயணம், கிஷ்கிந்தா காண்டம், த்ரயஸ்த்ரிம்ச ஸர்க : - 36 - 37
85. சுக்ரீவனுடன் வாழும் தாரை
86. த்ரயச்த்ரிம்ச ஸர்கத்தின் சம்பவங்கள்.
87. இராம சரித மானசம்
88. மானசம், கிட்கிந்தை 7-1
89. வாலி, பக்திவயப்பட்டவனாகக் காட்சி தருகிறான்.
90. தாரையும், பக்தியை வேண்டுகிறாள்.
91. மானஸம், கிட்கிந்தை- 19 - 2
92. அத்யாதம இராமாயணம், இராம கதையின் ஆன்மிக வழி.
93. அத்யாதமம், கிட்கிந்தை, த்விதீய ஸர்க : - 20
94. அத்யாதமம், கிட்கிந்தை, த்விதீய ஸர்க : - 31 - 32
95. அத்யாதமம், கிட்கிந்தை, த்விதீய மற்றும் த்ருதீய ஸர்க சம்பவங்கள்.
96. அத்யாதமம், கிட்கிந்தை, த்விதீய மற்றும் த்ருதீய ஸர்க சம்பவங்கள்.
97. அத்யாதமம், கிட்கிந்தை, த்விதீய ஸர்க : - 10
98. இராமன் தாரைக்கு உபதேசித்த தாரா கீதை, வேதாந்தத்தின் சாரமாகத் திகழ்கிறது.
99. அத்யாதமம், கிட்கிந்தை, த்ருதீய ஸர்க : - 38
100. த்விதீய மற்றும் த்ருதீய ஸர்கங்கள்.

101. யுத்த காண்ட நிகழ்வு

102. 'ஹத்வா வாலின்' என்று ஒற்றை வரியில், வாலி வதமே முடிந்துவிடும். இரகுவம்சம், த்வாதச ஸர்கம்.

103. வாலியும் சுக்ரீவனும் மிகப் பெரும் வீரர்களாகக் காட்டப்படுகின்றனர்.

104. தாரை, வீராங்கனையாக மதிக்கப்படுகிறாள்.



# மண்டோதரி

மயன் மகள்;
இராவணன் பட்டமகிஷி;
இந்திரசித்தன் தாய்;
வணக்கத்திற்குரியவளாகப்
'பஞ்சகன்னிகை" வழிபாடு
அங்கீகரிக்கும் உத்தமி;

கற்பெனுந் திண்மை தந்த பொற்புடைத் தெய்வம்;

இடை சிறுத்ததனால் 'மந்தோதரி' என்று பெயர் பெற்றாள் எனவும் தன் மேனியில் பூசிய சந்தனமெடுத்து மகாவிஷ்ணு உருவாக்கிய மங்கை எனவும் ஆநந்த ராமாயணம் காட்டும் மண்டோதரி;

சீதையைப் பெற்ற தாய் என்று அத்புத ராமாயணம் படம் பிடிக்கிற மண்டோதரி;

இராவணனுக்காக மனமிரங்குமாறு சீதை யினிடத்தில் தூது சென்று வேண்டியவளாகச் சில சமண இராமாயணங்கள் கூறும் மண்டோதரி;

இராமன் 'தெய்வாம்சம் மிக்கவன்' என்பதைத் தெளிவாக தசமுகனுக்கு உரைப்ப வளாக கோஸ்வாமி துளஸீதாசர் உலவ விடுகிற மண்டோதரி;

காகுத்தனின் அம்புக் கணைகளையே தடுத்து நிறுத்தக் கூடிய வல்லமை படைத் தவளாகப் பிரேமானந்தரின் 'ராமயக்ஞம்' சிறப்பிக்கிற மண்டோதரி;

'மண்டூகம்' எனப்படும் தவளையின் வடிவாய்த் தோன்றியவளாதலால் 'மண் டோதரி' என்று தாய்லாந்து இராமாயணக் கதைகளால் பேசப்படும் மண்டோதரி[2] - இவ்வாறு பற்பல வகைகளில், பலவேறு நிலைகளில் 'மண்டோதரி' என்னும் வான வில்லின் வண்ணங்கள் வசப்பட்டுள்ளன.

## அ. வியன்உறை மயன் மகள்

தலைமுறைகளுக்கு எழுதிவைத்த சீட்டாக, நடையில் நின்றுயர் நாயகன் தோற்றத்தின் இடைநிகழ்ந்த இராமாவதாரக் கதையை, நித்திலப் படிவங்களில் படைக்கிற சித்திரப் கம்பனில், மண்டோதரியின் முகவிலாசம் மிகச்சில இடங்களில் மட்டுமே புலப்படும்; ஆயினும், அவளின் மேதாவிலாசம் விதவிதமாய் வளப்படும்.

### அரக்க வேந்தனும் அன்புடைத் தலைவியும்

இராகவன் அம்பினால் இறந்துபடுகிறான் இராவண வேந்தன். கணவன் மரணச்செய்தி காதில்பட, கதறியோடி வருகிறாள் அந்தக் கார்குழலாள். 'மும்மூர்த்திகளுக்கும், முப்பத்து முக்கோடி தேவர்களுக்கும், திசைத்தேவர்களுக்கும், அஷ்டதிக்கஜங்களுக்கும், யாவர்க்கும் விஞ்சியவனாய், வலிமை மிக்கவனாய், கொற்றம் முற்றி இந்திரன் செல்வம் மேவி நின்ற தன் கணவற்கு இறுதி வர இயலாது'. என்று நினைத்து ஏமாந்ததாக நெகிழ்ந்து அழுகிறாள்.[3]

இராவணன் இயற்றிய அருந்தவமென்னும் பெருங் கடலைத் தாண்டியும் கேடு ஒன்று வந்திடுமோ? தவவலிமை யால் அந்த அரசன் பெற்ற வரங்களின் காவலை மீறியும் தீது நின்றிடுமோ?

இராவணன் என்ன சாதாரணமானவனா? வாரணம் பொருத மார்பு, செஞ்சடைக்கடவுள் வாழும் வெண் பனிச்சூழும்

கைலாய மலையையே எடுத்த தோள்கள், மறைகள் ஓதும் நாரதமுனியின் திறம்போல் நயவுரைகள் நவிலத்தக்க நா, பாரளந்து நின்ற பத்துத்தலைகளிலும் கவிக்கப்பெற்ற புகழ்க்கிரீடங்கள், சங்கரன் கொடுத்த வாள், இவற்றோடும் வீரமும் வரமும் இணைந்தவனல்லவா இலங்கேஸ்வரன்!

ஸாமகானம் பாடிய அந்தத் திருமேனியா,[4] இன்று இராம பாணத்தால் துளையுண்டது? கடுந்தவத்தால் பெற்ற மூன்று கோடி வாழ்நாட்களுமா, இன்று காகுத்தன் வில்லாற்றலால் முடிந்துபோயிற்று? யாரும் நின்னை வெல்லமுடியாது, என்று பிரமதேவன் கொடுத்த வரமா. இன்றமானுடனாய் வந்த கோசலக்குமரன் முன் குறைந்துபோனது?

இவற்றையெல்லாம் எண்ணுகிறாள் - எண்ணித் துடிக் கிறாள் - துடித்துக் கதறுகிறாள் மண்டோதரி.

### திரிந்த பாற்கடல்

பெரியானாய் நின்றவனுக்கும் வலியானாய் வந்தானோ ஒரு மானுடன்? எத்தகைய அறிஞனும் வார்த்தைகளால் விவரித்துச் சொல்லிவிட முடியாத பேராற்றல், எத்தகைய அளவுகோலும் கடைகட்டி அளந்துவிட முடியாத வரபலம் - என்னவாயிற்று? தீஞ்சுவை பால்; நலமிக்க காராம்பசுக்கள் சொரிந்த வளம் நிறைந்த பால்; எத்தனை பெரிய பாத்திரத்தில் பாலிருந்தாலும், சில துளிகள் பிரை குற்றிவிட்டால் போதுமே... இராவணனின் வரம் என்னும் பாற்கடலைச் சீதை என்னும் பிரை விழுந்து அழித்துவிட்டதே! பிரை குற்றியதும் பாற்கடலாக இருந்தாலும் அது திரிந்துதானே போகும்.

''இராவணனின் தவப்பயனையும் வரபலத்தையும் பார்த்துப் பார்த்துப் பெருமைப்பட்டுக் கொண்டிருந்து விட்டேனே தவிர, அதைப் பிரை விழுந்து பழுதாக்கிவிடுமே என்று பார்க்காதிருந்து விட்டேனே!'' என்று நினைத்து நினைத்துச் சாம்புகிறாள்.

அரைகடை இட்டு அமைவுற்ற முக்கோடி
ஆயவும் முன்அறிஞர்க்கேயும்
உரை கடையிட்டு அளப்ப அரிய பேர்ஆற்றல்
தோள் ஆற்றற்கு உலப்போ இல்லை

ஆம்! ஒன்றா, இரண்டா; இராவணனுக்குத்தான் எத்தனை எத்தனை பலங்கள்; அத்தனையும் அழிவு பட்டதன் காரணம் 'பிறன்மனை நயந்த' ஒற்றைத் தீமைதானே! எத்தனை அலைகள் எம்பிஎம்பி வந்தாலும், அந்தப் பெரிய பாற்கடல், ஒற்றைத்தீமையால், பிரை குற்றப்பட்டுத் திரிந்துவிட்டது.

"திரை கடையிட்டு அளப்ப அரியவரம் என்னும்
பாற்கடலைச் சீதை என்னும்
பிரைகடையிட்டு அழிப்பதனை அறிந்தேனோ
தவப்பயனின் பெருமை பார்ப்பேன்?"[5]

## விரிந்த பெருந்தவம்

அதுசரி

இராவணன் இறப்பிற்கு என்ன காரணம்?

மேருமலையாக நின்ற கணவனை இழந்து ஆதரவின்றிக் கலங்குகிறாள். மண்டோதரியின் இழப்பிற்கு என்ன காரணம்?

தன் கலக்கத்திற்கிடையில், சில கணங்கள் சிலிர்க்கும் அவள் சிந்தனை-

பெண்மணிகட்கெல்லாம் பேரணியாக விளங்கும் ஜனகன் 'மகளின் எழில்-

தகைமையில் தலைமை சான்ற அம்மங்கை நல்லாளின் மகத்துவக் கற்பு-

அந்த வாள்விழியாள்மீது தோள்வலி செறிந்த இலங்கை வேந்தன் கொண்ட காதல்-

போற்றாவொழுக்கம் புரிந்து, இராமனிடம் பேசிய வம்புச் சொற்களால் சூர்ப்பணகை இழந்த மூக்கு-

வேந்தர்வேந்தன் தயரதன் சொற்காக்க, வில்லின் வேந்தன் வனமாளப் போந்தமுறை-

நாரணன் நம்பி மானுடச் சட்டை போர்த்துவர தேவேந்திரன் செய்த தவம் - கண்ணீரில் கலங்கிய அவள், பன்னிப்பன்னிப் புலம்பலானாள், ஒன்றா, இரண்டா, எவ்வளவு காரணங்கள்!

எத்தனை முறை இராவணன் செய்த தவறினை எண்ணி எண்ணி வருந்தியிருப்பாள், எத்தனை முறை கணவனைத் திருத்தக் கூடவில்லையே என்று கலங்கியிருப்பாள்.

மண்டோதரி முனிவரினும் தவசீலரினும் முதிர்ந்த ஞானம் கொண்டவள். தீட்சண்யம் மிக்க அவளின் அறிவு. இராவணனுடைய மரணத்திற்கான காரணங்களைத் தெளிவாகப் பட்டியலிட்டுத் துல்லியமாக உணர்வுறுத்துகிறது.

**காந்தையருக்கு அணிஅனைய சானகியார்**
**பேர்அழகும், அவர்தம் கற்பும்,**
**ஏந்து புயத்து இராவணனார் காதலும், அச்**
**சூர்ப்பணகை இழந்த மூக்கும்,**
**வேந்தர்பிரான், தயரதனார், பணியதனால்**
**வெங்கானில் விரதம் பூண்டு**
**போந்ததுவும், கடைமுறையே புரந்தரனார்**
**பெருந்தவமாய்ப் போயிற்றம்மா![6]**

இராவணனால் துயரமுற்ற தேவர் குழாமெல்லாம், மகா விஷ்ணு மனிதவுருவில் வரவேண்டும் என்று செய்த தவத்தின் விளைவுதானே இராமனுடைய பிறப்பும், வளர்ப்பும், வாழ்வும்.[7] முன் செய்த துன்பம் முழு உருக்கொண்டு, தேவர்களின் தவவலிமையோடு கூட்டுச்சேர்ந்து, இராகவன் அம்பாகப் பாய்ந்துவிட்டதன்றோ! எவ்வளவு அழகாக தேவர்தம் தவம்தான் காரணம் என்று ஆணியடித்தாற்போல் முத்தாய்ப்பு வைக்கிறாள் மண்டோதரி.

சூர்ப்பணகை கணவனின் மரணத்திற்குக் காரணமாக இருந்தவன் இராவணன். தன் சோகத்தின் காரணமாகப் பழி தீர்த்துக் கொண்டாள் அவள்- 'பாவி நெடும்பாரப் பழி தீர்ந்தாள்'[8]- என்று இராவணன் மேனிமீது விழுந்து அரற்றுவான் வீடணன். ஆனால், அந்த வஞ்சினத்தைக் காட்டிலும், இராம இலக்கு வர்களிடம் சூர்ப்பணகைத் தவறாக நடந்து கொண்டமையும், அதைத் தொடர்ந்த நிகழ்வுகளுமே இராவணன் உள்ளத்தில் சீதையைப்பற்றிய காமத்தைத் தோற்றுவித்து, இறுதி மரணம் வரை இழுத்துவிட்டுவிட்டது என்பதைத் தெளிவாகப் புரிந்து வைத்திருக்கிறாள் மயன்மகள். வேறு எந்தத் தவறைச் செய்தாலும் ஒருவன் மன்னிக்கப் பட்டுவிடுவான். ஆனால், இன்னொருவன் மனைவி மீது கொள்ளக்கூடிய கூடாக்காதல் எவ்வளவு பெரியவனையும் பாதாளத்தில் அழுத்திவிடும். அதேபோன்று தவறான எண்ணங்களோடு அணுகுகிற அணுக்கமும் கேடு தரும். அப்படித்தான் தவறாக இராமலக்கு வர்களை அணுகி, அதனால் மூக்கறுபட்டு, இராவணனையும் தவறுசெய்யத் தூண்டி விட்டாள் சூர்ப்பணகை.

அதனால்தான், இராவணனின் இறப்பு - அதற்குச் சூர்ப் பணகை இழந்த மூக்கு என்று முடிச்சுப்போடுகிறாள் மண்டோதரி.

## இடுக்கண்ணிலும் இங்கிதம்

துன்பநேரத்திலேயும் பண்பு மாறாதவள் மண்டோதரி என்னும் அந்த மங்கை நல்லாள்.

சாதாரணமாக நாமெல்லாம் துயரம் வந்துவிட்டால் என்னவெல்லாம், எப்படியெல்லாம் பேசிவிடுவோம்; சொற்களைக் கொட்டிவிடுவோம். கோபத்திலேயே சொற்கள் கொந்தளிக்கும்; துன்பத்திலோ அவை கொதித்துக் குழம்பிக் கேட்பவரையும் ரணப்படுத்திவிடும். மகன் படிக்காமல் தேர்வு

பெறாமல் போய்விட்டால்கூட, ஆசிரியரைக் கட்டையில் போகச் சொல்லி சாபமிடுகிற தாய்மார்களையும், கணவன் கையாடிய பணத்திற்காக அலுவலக அதிகாரியை மண்ணோடு மண்ணாகத் தூற்றுகிற மனைவிமார்களையும் நடைமுறையில் பார்த்துக் கொண்டிருக்கிறோமல்லவா!

ஆனால், வாழ்விழந்த வேளையில், இடுக்கண் வந்து நடுக்குகிற நேரத்தில், கடுந்துன்பம் கலக்குகிற காலகட்டத்தில்... வார்த்தையிழக்கவில்லை, அவள் கண்ணியம் தவறவில்லை.

தகாதது என்றாலும்கூட ''இராவணனார் காதல்'' என்று மரியாதையோடு மொழிகிறாள் -அது அவள் கணவன்மீது கொண்ட அன்பின் வெளிப்பாடு.

ஆனால், 'அணி அனைய சானகியார்' என்றும் 'தயரதனார் பணியதனால்' என்றும், எதிரிக்கூட்டத்தினரையும், தன் துன்பத்தின் முக்கிய காரணமான மைதிலியையும் மதிப்போடு விளிக்கின்ற அவளின் பண்பாட்டை என்னென்பது?

தன் துன்பத்திற்கு அடுத்தவர்களை நோகக்கூடாது என்று எல்லோரும், எப்பொழுதும் சொல்கிறார்கள். ஆனால், தலைவலியும் காய்ச்சலும் தனக்கு வந்தால் நோகாமல் யாராவது நின்றுவிடுவோமா? மண்டோதரிக்கு மட்டும் அது எப்படி சாத்தியமாயிற்று?

காரணங்களை வெறுமே பட்டியலிடுகிறாளே தவிர, வெறுப்போடு பட்டியலிடவில்லை.

இராமதூதுவனாய் வந்து நம்பிக்கை கொடுத்த அனுமனிடம், அரக்கிமார்களை அழிக்கவேண்டாம்' என்று கூறிய சீதையின் பெருந்தன்மையைவிட, சிதைவின் விளம்பில்கூட சீர்மை காக்கிற மண்டோதரியின் பெருந்தன்மை சற்றே தூக்கலாகத்தான் தெரிகிறது.

## மலர்க்கூந்தல் சானகி

இராமனுடைய அம்புகள் இராவணனின் உடலைச் சல்லடையிட்டுவிட்டன. துளைக்கப்பட்டுத் துளைக்கப்பட்டுத் துளைக்கப்பட்டு... இராவணன் உடல்மீது வந்து விழுகின்ற மண்டோதரியின் கைகள், மெல்ல மெல்ல அந்தத் துளைகளைத் தொட்டுப் பார்க்கின்றன; தடவிப் பார்க்கின்றன. கணவனின் உடல் துளையிடப்பட்டுவிட்டது. அம்புகள் துளைத்துவிட்டன என்று எண்ண முடியவில்லை அவளால்.

இராவணன் அவள்மீது அன்பு வைத்திருந்தானோ இல்லையோ, மண்டோதரி இராவணன் மீது மாறாத அன்பு பூண்டிருந்தாள். அந்த அன்பின் காரணமாக, அவன் உடல் துளையுண்டாதாகவோ, குத்துப்பட்டதாகவோ அவளால் நினைக்க முடியவில்லை.

'ஐயோ! பார்த்துப் பார்த்துப் பெருமிதம் கொண்ட அந்த மேனி, திருமேனி, இன்று இப்படியானதே!'

எள்ளளவு கூட இடம் விட்டுவிடாமல், இராவணன் திருமேனியை அங்குலம் அங்குலமாக ஆழம் பார்த்திருக் கின்றனவே இராமனின் அம்புகள்.

எதற்கு இப்படி ஆழம் பார்த்திருக்கின்றன? மிதிலைச் செல்வி, மயிலுடைச் சாயலாள் மீது இலங்கைநாதன் காதல் கொண்டானே,[10] அந்தக் காதல் உள்ளிருக்கிறதோ என்று ஒவ்வோர் அணுவாகப் புகுந்து பார்த்தனவா அந்த அம்புகள்? அதனால்தான், இடைவெளி விடாமல், இழைத்து இழைத்துப் பார்த்துள்ளனவா? துளைத்தனவா? இல்லையில்லை.

தான் எண்ணி எண்ணி இறும்பூதடைந்த எழுதவொண்ணாத் திருமேனி துளைக்கப்பட்டுவிட்டது என்று நினைக்கவோ, சொல்லவோ மண்டோதரியால் முடியவில்லை. ஆகவே, வரதனின் புனித வாளி 'தடவியது' என்கிறாள்.

வெள்ளெருக்கஞ் சடைமுடியான் வெற்பெடுத்த
திருமேனி மேலும் கீழும்
எள்ளிருக்கும் இடனின்றி உயிரிருக்கும்
இடன்நாடி இழைத்தவாறோ?
கள்ளிருக்கும் மலர்க்கூந்தல் சானகியை
மனச்சிறையில் கரந்த காதல்
உள்ளிருக்கும் எனக்கருதி உடல்புகுந்து
தடவியதோ ஒருவன் வாளி?"

கடவுளுக்குத்தான் 'திருமேனி' என்ற கூறுவது வழக்கம். மண்டோதரியைப் பொறுத்தவரையில் இராவணனும், இல்லை, ''இராவணன்தான் திருமேனியுடையான்!'' அதுவும் சாதாரணத் திருமேனியா? செஞ்சடைக் கடவுளாம் சிவ பெருமானின் கைலையங்கிரியையே தூக்கிய திருமேனி யல்லவா! 'அந்தத் திருமேனி, இன்று ஒருமேனி என்று கூற முடியாதபடி பற்பலவிடங்களில் அம்பு துளைக்கப்பட்டுள்ளதே!'

'திருமேனி' என்றும் 'அம்பு தடவியது' என்றும் கணவன் மீது தனக்கு இருக்கும் காதலை மட்டுமா வெளிப்படுத்துகிறாள் மண்டோதரி?

எத்தனை எத்தனைச் செய்திகளை அழுகைக்கிடையிலும் அழகாக வெளியிட்டுவிடுகிறாள் தெரியுமா? என்ன சொல்கிறாள்?

சானகி - கார்கூந்தல் சானகி.

மலர் சூடிய கார் கூந்தல் சானகி.

அந்த மலர்கூட, தேன் சொட்டும் மலர்.

கள்ளிருக்கும் மலர் - தேன் சொரியும் மலர் என்றால் அது புத்தம் புது மலராகத்தான் இருக்க வேண்டும்.

என்றைக்கும் வாடாத, எப்பொழுதும் தேன்சொட்டும் புதுமலர் சூடும் மங்கலத்தோடு, மலர்க்கூந்தல் சானகி வாழவேண்டும் என்கிற மறைமுக வாழ்த்து.

தன்னுடைய பூவும் பொட்டும் மறைவதற்கு யார் முக்கிய காரணமோ, அவளையே மலர்க்கூந்தலோடு மங்கலமாக வாழச்சொல்லக்கூடிய மனம், எத்தனை பெரிய மனமாக இருக்கவேண்டும்!

தனக்கு ஒரு கண் போனாலும், பிறருக்கு இரண்டு கண்களும் போகவேண்டும் என்று நினைப்பது இன்றைய சமுதாயச் சூழல். ஆனால், தன் விழியிழந்து திகைக்கும் போதுங்கூட, மொழி மாறினாள் இல்லையே மண்டோதரி.

**மானுடவன் ஊற்றம்**

வரமும் உரமும் அழிந்து, வீரமும் சாரமும் ஒழிந்து, இராவணன் இறந்துபட்டதற்குக் காரணம் ஒரேயொரு அம்புதானா?

தனக்கு நிகர் யாருமில்லையென்னும் ஆணவம், அந்த ஆணவம் தந்த துணிவு, அந்தத் துணிவினால் செய்த தவறு. தவறு என்பதை உணராமல், மனிதரைத் துச்சமாக நினைத்த தன்முனைப்பு - இவையனைத்தும் சேர்ந்தன்றோ அம்புக்குள் நுழைந்து கொண்டன.

**போரில் தோற்று**
**வீரம்போய், உரம்குறைந்து, வரம்குறைந்து,**
**வீழ்ந்தானே! வேறே! கெட்டேன்!**
**ஓர்அம்போ, உயிர்பருகிற்று, இராவணனை?**
**மானுடவன் ஊற்றம் ஈதோ![12]**

**மாரனார் தனி இலக்கு**

இராவணன் இறந்தான் என்பதில் மண்டோதரிக்குத் துயரந்தான்! இருப்பினும் துயரத்தை மீறிய அவளின் சிந்தனைத் தெளிவு நம்மை வியப்படையச் செய்கிறது. இத்தனைத் தெளிவு அவளுக்குள் வரவேண்டுமென்றால், எத்தனை நாட்களாய்

இவற்றையெல்லாம் அவள் எண்ணி எண்ணி மறுகியிருந்திருக்க வேண்டும்.

மன்மதனால் நாளும் மலரம்பு எய்யப்பெற்ற இலக்கல்லவா இராவணன். தோள்வலியும், வாள்வலியும் கண்டு மட்டுமா மன்மதன் அம்பு செலுத்தினான்? பற்பல பலங்கள் பொருந்தப்பெற்ற இராவணனிடத்தில், பிறன்மனை நயக்கும் பலவீனம் இருப்பதைக் கண்டு, அதைச் சாதகமாக்கி மலரம்புகள் எய்தானா மன்மதன்? இல்லை. இப்படியெல்லாம் மலரம்புகளை மன்மதன் எய்ததனாலேயே இராவணன் பலவீனப் பட்டானா?

மண்டோதரியின் ஒரு கருத்துக்குள் எத்தனை கேள்விகள் தொக்கி நிற்கின்றன!

**கண்புக்க வேழ வில்லால்,**
**நார நாள் மலர்க்கணையால், நாள் எல்லாம்**
**தோள் எல்லாம், நைய எய்யும்**
**மாரனார் தனி இலக்கை மனித்தனார்**
**அழித்தனரே, வரத்தினாலே![13]**

மண்டோதரியின் இந்த அழுகைக்குள், மனித குலத்திற்கும் எத்தனை எத்தனை பாடங்கள் பொதிந்து கிடக்கின்றன.

எல்லையின்றிக் காமத்துள் அமிழ்பவன் கட்டாயம் அக்காமத்தாலேயே அழிவான் என்பது நீதி.

உருவும் வடிவும் கண்டு எள்ளி நகையாடி, தன்னைவிட வலு பொருந்தியவர் யாருமில்லை என்று ஆணவப்படுபவன், தான் எதிர்பாராத விதத்தில், சிறியவர் என்று யாரை எண்ணினானோ அவராலேயே அழிக்கப்படுவான் என்பது நியதி.

நீதியும் நியதியும் உணர்த்துவதாய் அமைந்துவிடுகிறது மண்டோதரியின் மொழி. அதனால்தான் மாரனாரின் தனி இலக்காய், பெண்மீது மோகம் கொண்ட பேதையாய் தன் நாதன்

இருந்தான் என்பதைச் சொல்லாமல் சொல்கிறாள் அவள். மன்மதனுக்கு ஒரேயொரு தன்னந்தனி இலக்காய் இராவணன் இருந்துவிட்டான்போலும்; அன்றியும், இராவணன் மீது அம்பு எய்யத் தொடங்கியபின், மற்றவரையெல்லாம் மறந்து அரக்கத் தலைவனிடம் மட்டுமே தன் கவனத்தை அந்த அருவத்தானும் வைத்திருந்தான் போலும். அதனால்தான், யாரும் கண் பார்வையில் கூடத் தவறாகத் தீண்டத்துணியாத சீதையை, மண்ணோடும் பெயர்த்துவரத் துணிந்தானோ நிருதர் தலைவன்![14]

எத்தனையோ விதங்களில் வரங்கேட்ட இராவணன், மனிதவுருவில் தனக்குக்கேடுவரும் என்று எண்ணினான் இல்லை. தன்னைவிடச் சிறிய வடிவம், குறைந்த வலு என்று மானுடத்தைத் தப்புக்கணக்குப் போட்டுவிட்டான். வெறும் உருவிலேயும், நிறைய வலு என்பதிலேயும் இல்லை உண்மை பலமென்பது! நேர்மையும் சீர்மையும் தாமே பலங்கள். எத்தகைய பெரிய உருவமும் அழியும். ஆனால், சீர்மிக்க சிறிய உருவம்கூட சிறப்பாய் வாழும்.

மன்மதனின் மலரம்புகள் என்னவோ, முதலில் நோக்குங்கால், மென்மையானவையாகத் தெரியும். ஆனால், மெல்லமெல்ல, உள்ளத் திண்மையைக் குறைத்து. உயிர்த் திறமையைக் குலைத்து, கூர் அம்புகளும் போர் அம்புகளும் அவசரமாக நுழைவதற்கான அகலப்பாதையை அவை திறந்து விடுகின்றனவே! இதுதானே இன்றும், இராவணன் இறந்து பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்குப் பின்னும், இருபத்தோராம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் உண்மை.

இந்த உண்மையை உள்ளத்தில் தைக்க உரைக்கிறாள் மண்டோதரி.

அதுதான், 'மாரனார் தனி இலக்கை மனித்தனார் அழித்தனரே!'

## வாய்திறந்து அழுதாள்

மரங்களும் மலைகளும் உருக, இராவணன்மீது விழுந்து அழுகிறாளே மண்டோதரி, அவளென்ன எதுவும் தெரியாத வளா, ஏதும் புரியாதவளா?

இப்போது அழுகிறாளே, இத்தனை நாட்கள் கணவனைத் திருந்தும் முயற்சியை அவள் எடுத்தாளா என்ற ஐயம் எழலாம்.

இராவணனிடம் அவள் நல்முயற்சிகளை மேற் கொண்டிருக்க வேண்டும். அவன் அதற்கலெல்லாம் இணங்காத வனாக இருக்க,[15] இவள் வாய்மூடி மௌனியாக அமிழ்ந்து போயிருக்க வேண்டும். இப்போது விளைவுகள் இலங்கேஸ் வரனை வளைத்துவிட்டன என்றவுடன் அவளின் அடக்கப் பட்ட உணர்வுகள் பொங்கி எழுகின்றன. அதனால்தான் இது வரை வாய் மூடி அடக்கப்பட்டிருந்த அவள், இத்தருணத்தில், திருமேனி தீண்டி வாய்திறந்து இரங்கினாள்.

## அன்புத்தாய்

முன்னர் இருமுறையும் மண்டோதரி அழுது புலம்பினாள். ஒன்று, அக்ககுமாரன் மாண்டவுடன் அழுதாள்; இரண்டு, இந்திரசித்தன் இறந்தவுடன் கதறினாள்.

சீதை அசோகவனத்தில் சிறையிருப்பதைக் கண்டுவிட்டு, பஞ்சசேனாபதிகளையும் அழித்துவிட்ட அனுமனுடன் பொருதுவதற்கு எழுந்தான் இராவணன் மகன்களுள் ஒருவனான அக்ககுமாரன். அனுமனால் அழிக்கப்பட்டுவிட்டான் அந்த இளவல். அவன் மரணம் கேட்டு அரக்கிமாரெல்லாம் அழுது அரற்றினர்.[16]

தன் நீண்ட குழல் புழுதியில் புரள, இராவணவேந்தன் காலடிகளில் விழுந்து கதறினாள் மண்டோதரி.[17] நிருதர் வீட்டு நித்திலச்செல்வன், இலங்கேஸ்வரன் இல்ல இளையகுமாரன்[18],

மாருதியுடன் செய்த மற்போரில் மடிந்தான் என்பதுதான், கம்பகாவியத்தில் மண்டோதரி அழுகிற முதல் அழுகை.

## அழும் தாய்

கம்பனுடைய இராமகாதையைப் பொறுத்தவரையில் நான்கு இடங்களில்[19] வருவாள் மண்டோதரி. நான்கில் மூன்று, அவள் அழுவதாகக் காணப்படுகிற அவல நேரங்கள். ஆயினும், அழுகையிலும் கூட பழுதில்லாதாளாக, தொழுது ஏற்கத் தக்காளாக மண்டோதரி மிளிர்கிறாள்.

***அக்ககுமாரன் அழிவில் அலைவுற்றுப் போகிறாள்***
***அயன் மகன் மகன் மகன் அடியின் வீழ்ந்தனள்.***
***மயன் மகள்; வயிறு அலைத்து அலறி மாழ்கினாள்.***[20]

அடுத்தது அவளை இந்திரசித்தன் இறப்பின் போதுதான் சந்திக்கிறோம். அப்போதும் அழுகிறாள்.

## அலறும் தாய்

மகவின் மரணச்செய்தி கேட்டு மார்பில் அடித்துக் கொள்ளும் மாண்புறு தாயாகக் களம் புகுகிறாள்.

***கருங்குழல் கற்றைப் பாரம் கால்தொட, கமலப்பூவால்***
***குரும்பையைப் புடைக்கின்றாள் போல் கைகளால்***
***முலைமேல் கொட்டி***
***அருங்கலச்சும்மை தாங்க, 'அகல் அல்குல் அன்றி, சற்றே***
***மருங்குலும் உண்டு உண்டு' என்ன,-மயன் மகள்-மறுகி***
***வந்தாள்.***[21]

தலைக்கு மேலே தூக்கிய கைகள். தீ மிதித்தாற்போன்று தவித்துத் தடுமாறும் கால்கள், பாசமும் நேசமும் பொங்கிய உள்ளம். குறிவைத்த வேடனின் கூர்மிக்க அம்பு உயிரைக் குடிக்கும் தருணத்தில், துடித்துத் துவண்டு, உருண்டு புரண்டு, மலைப் பாங்கின் மீது விழுமே மயில், அதைப்போல

இந்திரசித்தன் என்னும் மலைமீது அந்தத் தாய்மயில் தத்தளித்து விழுந்தது.

'வளர்பிறையாய் வளர்கின்ற காலத்தே, வில்லாற்றலால் இந்திரனை வென்றவனல்லவா; அதனால்தானே, அவன் இந்திரசித்தன்! தன் மகன், இந்திரனை வெல்லக் காண்பது தாய் செய்த தவமல்லவா; அதே மகன், தலையின்றி வெற்றுடலாய்த் தரணி மீது கிடப்பதைக் காண்பது, அதனினும் பெருந்தவமா?'[23]

மகன் மாண்டு கிடப்பதைக் காண்பதே சோகம். அதுவும் மேரு நிகர்த்த மகன், மேதினியில் வீழ்ந்து கிடப்பதைக் காண்பது பெருஞ்சோகம் உலகமெலாம் வெல்லக்கூடிய வீரமகன், தலையில்லா உடலாய்த் தளர்ந்து கிடப்பதைக் காண்பது மிகப்பெருஞ்சோகம்.[24]

மரணித்த மகனின் முகத்தைப் பார்த்தாவது அழலாம்; அந்தப்பேறுகூட மண்டோதரி பெற்றாளில்லை.

**தலை இலா ஆக்கை காண எத்தவம் செய்தேன்! அந்தோ!**
**நிலை இலா வாழ்வை இன்னும் நினைவெனோ, நினைவு**
**இலாதேன்?**[25]

யாக்கை நிலையாமையைப் புரிந்துகொள்ள இப்படியா ஒரு வாய்ப்பு வரவேண்டும்! நிலையற்ற வாழ்வின் நிச்சயமின்மையை, மகன் தலையை இழந்தா ஒரு மங்கை உணர்ந்து கொள்ளவேண்டும்; என்னே கொடுமை! என்னே கொடுமை!!

**'முளரிஅன்ன நின்முகம் கண்டிலாதேன், உய்வெனோ?'**[26]

## அயிர்க்கும் தாய்

மகன் இறந்துவிட்டான்; மகனின் விளையாடல்களை யெல்லாம் சொல்லிச் சொல்லிப் புலம்புகிறாள் தாய்.

சின்னப்பிள்ளையாய் இருக்கும்போது, அவன் கோலெடுத்து ஆடுவான்; பந்தெடுத்து அடிப்பான்; ஓடி ஒளிவான்; கண்பொத்திச் சிரிப்பான்.

பொம்மை வைத்து விளையாடுவான்.

பிள்ளை இறந்தபின், அந்தப்பிள்ளை வைத்தாடிய பாவையை மடியில் கிடத்திக்கதறும் தாய்போல், முகம் இல்லா மகனுடலை மடியில் போட்டு மறுகுகிறாள் மண்டோதரி.

இவன் வைத்து விளையாடிய பொம்மை என்ன தெரியுமா?

தரையில் தவழ்கின்ற நாட்களில், சிங்கக்குட்டிகள் இரண்டு தாம் இவனின் பொம்மைகள்; அவற்றை மோத வைத்து வேடிக்கைப் பார்ப்பது இவனது வழக்கம். அவற்றுக்குக் கோபம் வரச்செய்து மோதவிடுவது இவனது விளையாட்டு.

**தாள்அரிச் சதங்கை ஆர்ப்பத் தவழ்கின்ற பருவம்தன்னில்**
**கோள்அரி இரண்டு பற்றிக் கொணர்ந்தனை; கொணர்ந்து கோபம்**
**மூளுறப் பொருத்தி, மாட முன்றிலில் முறையின்ஓடி**
**மீளஅரு விளையாட்டு இன்னம் காண்பெனோ**
**விதியிலாதேன்![27]**

சிங்கங்களையே வைத்து விளையாடிய சிங்கக்குட்டி அவன். அவன் வீரத்தில், விலங்குகள்கூட விளையாட்டுப் பாவைகள் ஆகின. சிங்கத்தை வைத்து விளையாடினான், சரி! அவை சோர்ந்து போனால், என்ன செய்வான்? இருக்கவே இருக்கிறது, விண்ணில் நீந்தும் வெண்திங்கள்.

'நிலா நிலா ஓடி வா!' என்றழைப்பான்; நெருங்கிவரும் நிலவைக் கைகளில் ஏந்திச் சிரிப்பான்; அவன் தோளில் தலைசாய்த்து நிலவு கண்ணீர் உகுக்கும்; தன் மீதிருக்கும் மறுவைக் காட்டிக் கண்ணீர் வடிக்கும். அந்தக் களங்கத்தைப் பார்த்துவிட்டு மேகநாதன் சொல்வானாம்; 'கவலைப்படாதே, வெண்ணிலவே! அதுவொரு முயல். அந்த முயலை எடுத்து விடுகிறேன்; உன் களங்கம் காணாமல் போகும்' என்பானாம். அப்படி முயலென்று மதியின் கறையைப் பற்றப் போனவனா, இன்று பற்றின்றிக் கிடக்கிறான்?

**அம்புலி! அம்ம வா! என்று அழைத்தலும், அமர் வெண்திங்கள்**
**இம்பர் வந்தானை அஞ்சல் என இரு கரத்தின் ஏந்தி**
**வம்புறும் மறுவைப் பற்றி, 'முயல்' என வாங்கும் வண்ணம்**
**எம் பெருங் களிறே! காண, ஏசற்றேன்; எழுந்திராயோ![28]**

சிங்கத்திடமே சிரித்து விளையாடிய தங்கமகனா, இப்போது துவண்டு கிடக்கிறான். நிலவின் கண்ணீரையே துடைக்க முயன்றவன், இப்போது தாயின் கண்ணீரைத் துடைக்கமாட்டானா?

மகன் இறந்தே கிடந்தாலும்கூட, உறங்குகிறான் என்று எண்ணிக் கொள்வதுதானே தாய்மையின் வழக்கம்.

இந்திரசித்தன் உறங்குகிறானாம். போர் முடித்த பின் சற்றே ஓய்வெடுத்து உறங்குகிறானா? உடல் வலி காட்டியவன் உடல்வலி நீங்க உறங்குகிறானா?

அவன் மயக்கத்தில் உறங்குகிறானாம். என்ன மயக்கம்? பெண்கள் யாவரும் அவன் பேரழகு கண்டு காதல் கொண்ட தால், அது கண்ட மயக்கத்தில் உறங்குகிறானாம்.

**இயக்கியர், அரக்கிமார்கள், விஞ்சையர், ஏழைமாதர்,**
**முயல்கறை படியாத் திங்கள் முகத்தியர், முழுதும் நின்னை**
**மயக்கிய முயக்கம் தன்னால், மலர் அணை அமளிமீதே**
**அயர்த்தனை உறங்குவாயே?[29]**

வல்லவனுக்கு வல்லவனாய் நிற்கும் மகனை, ஒருவன் கொல்ல முடிந்தது என்பதே அந்தத் தாய் நெஞ்சைச் சுடுகிறது. மும்மூர்த்திகளைக் கூட வெல்லக்கூடிய மகன். இன்று வெல்லப்பட்டானா? ஒரு மலையை மடு உதைத்து விட்டதா? சிகரத்தைச் சின்ன அணு சிதைத்துவிட்டதா?

**முக்கணான் முதலினோரே உலகு ஒரு மூன்றினோடும்**
**புக்க போர் எல்லாம் வென்று நின்ற என் புதல்வன் போலாம்;**
**மக்களில் ஒருவன் கொல்ல, மாள்பவன்? மானமேரு**
**உக்கிட, அணு ஒன்று ஓடி உதைத்தது போலும் அம்மா![30]**

வந்திருப்பவன் மானுடச்சட்டை போர்த்த மாவீரன் என்பது மண்டோதரிக்குத் தெரியாதா, என்ன? வில்லையூன்றிய கையொடும் வெய்துயிர்ப்பொடும் உடன் வந்த இளையவன் இலக்குவன், மனிதமாய் வந்த புனிதம் என்பது அவளுக்குப் புரியாதா, என்ன?

தெரிந்தாலும், புரிந்தாலும் தாய்மை துடிக்கிறது; மகன் தோல்வியறியாதவன்; புக்க போரில் எல்லாம் சிக்கலின்றி வென்று நின்றவன்; முத்தேவரையும் மூவுலகத்தையும் கூட வென்றவன்; இன்றோ இலக்குவன் என்ற மனிதனாலா மாண்டு போனான்?

பன்னிப் பன்னிப் புலம்புகிறாள் அந்தத் தாய்; மகனை, மேரு நிகர்த்த மகனின் பிள்ளைப்பருவத்தை, அள்ளக்குறையா அவனின் விளையாட்டுகளை, சொல்லவொண்ணாச் சுடர்மிகு வீரத்தைச் சொல்லி சொல்லிக் கதறுகிறாள்!*

மகன் இறந்துபோனான் என்பது அவளின் சோகம். ஆயின், அதற்குள் எவ்வளவு ஆழம் புதைந்திருக்க வேண்டும். இறந்தவன், சண்டையில் திணறுகிற சாதாரண மகனல்ல; சிங்கங்களுக்கே சண்டைமூட்டிப் பார்த்தவன்; மும்மூர்த்திகளையும் வெல்லும் முறைமை கொண்டவன்; இறந்தவன், அலைச்சல் சிந்தனைகளின் ஆணவக்காரன் அல்லன்; நிலவின் குறையைக்கூட நீக்க நினைத்தவன்; இறந்தவன், தன்னுடைய அதர்மத்தால் முடிந்தவன் அல்லன்; தந்தையின் ஆசைக்காக, தான் அழிந்தவன்!

மற்றொருத்தியைக் கணவன் நினைக்கிறான் என்பது வேதனையென்றால், அந்த இன்னொருத்திக்கான போரில் தன் மகனை பலி கொடுப்பதென்பது எவ்வளவு கொடுமை! தந்தை

---

* வங்க மொழியில் மதுசூதன் தத் என்பார் இயற்றிய ''மேகநாதவதம்'' என்கிற காவியத்தில், இந்திரசித்தன் இறப்பின்போது மண்டோதரி கதறுவதை உள்ளம் உருகி அடிக்கடிப் படிப்பாராம் சுவாமி விவேகானந்தர்.

பிறன்மனை நயப்பதற்காக, மகன் மடிவது நியாயமா? அதை ஒரு தாய் கண்டு வாழ்வதும் தர்மமா?

இந்திரசித்தன் இறப்பு இராவணனையும் கலங்கடிக்கிறது. ஆனால், அது இந்திரசித்தன் என்கிற இளையவீரனுக்கான சோகம் என்பதைவிட, 'தன் மகன் இறந்தான்' என்கிற ஆணவச்சிதைவு எனலாம்.

தலையற்று வீழ்ந்து கிடந்த இந்திரசித்தன் உடலை எடுத்து வருகிறான் இராவணன். அந்த உடல்மீது விழுந்து அரற்றுகிறாள் மண்டோதரி. அருகில் நிற்கிறான் இலங்கேஸ்வரன் என்று தெரிந்து அவளின் கதறல் ஒலிக்கிறது.

'ஐயகோ! என் மகன் மட்டுமா இறந்தான். யார்க்கும் கிடைக்க இயலாத என் மகன் இறந்தான். அதே மனிதர்களால் அரக்கர் சேனை முழுதுமன்றோ முடிந்துவிட்டது. நெருப்பிடை வைத்த பஞ்சாய் நெகிழ்ந்து போயிற்றே நிருதர் கூட்டம்'.

'சீதையென்ன அமுதா? இல்லையில்லை. அவள் அமுதால் ஆக்கப்பட்ட நஞ்சு. இராமர்க்கும் ரகு குலத்திற்கும் அமுதானவள். அரக்கர்கெல்லாம் நஞ்சாகி நசிக்க வைத்து விட்டனளே!'

'சீதையென்கிற அமுதால் செய்த நஞ்சினால், ஐயோ, அஞ்சினேன், எம்மகன் மட்டுமா அழிந்தான்; என் அன்பு மகனின் அருமைத்தந்தை இலங்கைவேந்தனுமல்லவா இப்படி அழியப் போகிறான்.'

தெரிந்து கதறுகிறாள் - இராவணனுக்குத் தெரியவேண்டிக் கதறுகிறாள். உணர்ந்து கதறுகிறாள். உணர்த்த கதறுகிறாள்.

*பஞ்சு எரிஉற்றது என்ன அரக்கர்தம் பரவை எல்லாம்*
*வெஞ்சின மனிதர் கொல்ல விளிந்ததே; மீண்டது இல்லை;*
*அஞ்சினேன் அஞ்சினேன்; அச்சீதை என்று அமுதால் செய்த*
*நஞ்சினால், இலங்கைவேந்தன் நாளை இத்தகையன்*
*அன்றோ?*[31]

ஒரு அன்றாட நிகழ்வைச் சற்று சிந்திப்போம். மகனுக்குச் சின்னதாக அடிபட்டுவிட்டால், கணவனைப் பார்த்து கவனமாக இருக்கச் சொல்வதுதான் ஒரு மனைவியின் வழக்கம். அதுவே கணவனுக்கு அடிபட்டுவிட்டால், மகனிடம் கவனம் திரும்பும், மகன் இறந்துவிட்டால் கணவனைக் கட்டிக் கொண்டும், கணவன் இறந்துவிட்டால் மகனைப் பிடித்துக் கொண்டும் பெண் அழுவாள்.

ஆனால், மகன் இறந்தவுடன் மணாளனும் இறப்பான் என்று வருமுன் தெரிவிக்கிற மண்டோதரியைக் காண்கையில் மனம் மயங்கத்தான் செய்கிறது.

காரணம் - செய்யாத தவறுக்காகத் தனயன் அழியும்போது, தவறு செய்திருக்கும் தந்தை விளையறுக்க வேண்டிவருமே என்கிற அவளின் அச்சம்.

'அஞ்சினேன் அஞ்சினேன்' என்று அலறுகிறாள்; கெஞ்சிய போதெல்லாம் கிட்டி வராமல், இன்று விஞ்சிப்போன விதியின் செய்கையில் நெஞ்சு பதைத்து நெடிதுயிர்த்து அஞ்சுகிறாள்.

## ஆ. இராமாயணப் படிவங்களில் இராவணன் மனைவி

இராமகாதை, பல்வேறு மொழிகளில் பல்வேறு இடங்களில் பல்வேறு வடிவங்களைப் பெற்றுள்ளது. மற்றைய இராமாயணங்களில் மண்டோதரி எவ்வாறு காட்டப்பட்டிருக்கிறாள் என்பதை நோக்கும்போதுதான், கம்பன் காட்டுகிற மண்டோதரியை மிகத் துல்லியமாகப் புரிந்துகொள்ள முடியும்.

### வான்மீகியின் வண்டாற்குழலி

வால்மீகியின் மண்டோதரி, இராவணன் இறந்த செய்தி கேட்டு, பிற ராக்ஷஸப் பெண்கள் புடைசூழ, இராவணனின் பிறமனைவியர் அடிதாங்க யுத்தகளத்திற்கு ஓடி வருகிறாள்;

இராவணனுக்கு மிகுதியும்[32] பிரியமாயிருப்பவளும், ஜேஷ்ட பத்தினியுமானவளும் பட்டமகிஷியுமான மண்டோதரி அவன் உடலைக் கண்டு அதன்மீது விழுந்து பலவாறு பன்னிப்பன்னிப் புலம்புகிறாள். அந்தப் புலம்பலில் கணவனை இழந்துவிட்ட கவலை இருக்கிறது. மகனும் மற்ற உறவினர்களும் மறைந்த பின்பு, தான் அனாதையாக நிற்கும் அவலம் இருக்கிறது; தன் கணவனின் தவறைச் சுட்டிக்காட்டும் நியாயம் இருக்கிறது; உலகாண்டவன் இப்படியொரு தவறு செய்தாயே என்று தட்டிக்கேட்கும் ஆதங்கம் இருக்கிறது; யாராயினும் தவறுக்குத் தண்டனை பெற வேண்டும் என்றுரைக்கும் நீதி இருக்கிறது; தன்னைவிட சீதை எவ்விதத்தில் உயர்ந்தவள் என்று சல்லாபிக்கும் பெண்மை இருக்கிறது; இராமனும் இலக்குவனும் வெறும் மனிதர்களில்லை என்று தெரிந்துரைக்கும் தீர்வு இருக்கிறது; கூடவே, சோகத்திலும் கண்ணியம் குறையாத சான்றாண்மை இருக்கிறது.[33]

''ராக்ஷஸ ஸ்ரேஷ்டனே! மஹாசூரனாகிய உன்னை அடவிகளில் சுற்றித்திரியும் மனிதனா கொன்றான்? இது எவ்வாறு இயலும்?''

''மஹாபாக்யமுடையவனே! உனக்கு நான் இதை எத்தனை முறை சொன்னேன்? எவ்வளவு நாள் முன்பு சொன்னேன்? எப்படியெல்லாம் சொன்னேன்? இந்திரனைவிட, அக்னியை விட, தருமதேவனை விட இராமன் உயர்ந்தவன். வெறும் மனிதனில்லை என்றேனே, கேட்டாயா? ஜனஸ்தானத்தில் கரனை வதைத்தபோதே, இவன் காகுத்தன் என்றேனே, கேட்டாயா? காற்றும் புகமுடியாத இலங்கைக்குள், கவியொன்று அனுமன் வடிவில் அணுகிப் புகுந்தபோதே, இது காலத்தீர்ப்பு எனறேனே, கேட்டாயா? வானரங்கள் அணை கட்டியபோதே, இது விதியின் விளையாட்டு என்றேனே, கேட்டாயா?''[34]

''மனம் போனபடியெல்லாம் பாபம் செய்த பலனே இது''

''இராமனைப் பகைக்காதே என்று சொல்லியும் கேட்காமல் போனாயே! எக்காரணம் பற்றி சீதையிடம் அபிலாஷை வைத்தாய்; அந்த அயுக்தமல்லவா இப்படியொரு மூலநாசத்தை விளைவித்துவிட்டது; அவள் விருப்பமின்றியே அவளைத்தூக்கி வந்தாயே; உன் விருப்பம் நிறைவேறாமலேயே அவள் தவத்தால் எரிந்து போனாயே; அவளைச் சிறையிலடைத்தபோதே நீ எரிந்திருக்க வேண்டும்; ஆயின், உன் பலத்தால் இவ்வளவு நாட்கள் தள்ளினாய்; நல்லது செய்யுமவனுக்கு நன்மையே உண்டாகும். கெட்டது செய்யுமவனுக்குக் கெடுதியே உண்டாகும்.''

''சீதை குலத்திலும் ரூபத்திலும் வித்யா ஸாமர்த்தியத்திலும் என்னைக்காட்டிலும் மேம்பட்டவளன்று; ஆயினும், நீ மோகம் வைத்தாய்; உன் ம்ருத்யு சீதையின் வடிவிலல்லவா வந்தது. சீதை, இனி இராமனுடன் உல்லாசமாக இருப்பாள்; நானன்றோ உன்னைப் பிரிந்து தவிக்கிறேன்.''[35]

''இந்திரசித்தன் இறந்தபோது பார்த்துக்கொண்டு உயிர்வாழ்ந்த நான் இப்படித் தவிக்கும்படி நேர்ந்ததே! என் கணவனான நீ இருந்துவிட்டால், எனக்கு எந்த மகனும், உறவுக்காரரும் அழிந்தாலும் பெரிதாகத் தெரியாது; ஆனால், நீ இல்லையெனில், தனிமை தவிப்பாய்த் தெரியும்.''

''எத்தனைப் பெண்டிரின் பதிகளைக் கொன்று அவர்களை விதவைகளாக்கியிருப்பாய்; அவர்களின் சோகத்தின் சாபந்தான், இவ்வாறு சத்ரு வசம் சிக்கினாயா? கபட நாடகத்தில்தானே சீதையைக் கவர்ந்தாய். அது உன் நேர்மையின்மை தானே! உன் தம்பிகளும், நண்பர்களும், நல்லவர்களும் சொன்ன நல் வார்த்தைகளைக் கேட்காது வீழ்ந்தாயே!''

''இப்போதும்கூட நிலமடந்தையை ஏதோ உன் பிரியத் திற்கிடமானவளைப்போலக் கட்டிப்பிடித்துக் கிடக்கிறாயே; என்னிடம் ப்ரீதியில்லையா? என்னைப் பாராதும் பேசாதும் பதிலுரைக்காதும் வாளாவிருக்கிறாயே!''[36]

இவ்வாறெல்லாம் கதறும் மண்டோதரி, இராவணன் உடல்மீது மூர்ச்சித்து விழுகிறாள். பிற பெண்டிரும் வீடணனும் சமாதானம் சொல்ல, இராவணனுக்கு ஈமக்கிரியைகளை வீடணன் செய்ய, மற்ற அரக்கப் பெண்களுடன் மண்டோதரி நகர் புகுந்தாள் என்பதாக வான்மீகம் உரைக்கும்.[37]

மண்டோதரியின் அனைத்து உணர்ச்சிகளும் இராவணன் மரணத்தின்போது அவள் அழுத அழுகையிலே அடங்கி விடுகின்றன. 'கணவனின் தவறை அவள் திருத்த முயன் றிருக்கிறாள்; முடியாதபோது கரம் பிசைந்திருக்கிறாள். சீதைக்கும் தனக்கும் ஒப்புமை செய்திருக்கிறாள். சிதைக்கப் பட்ட மனைவியாகச் சிதிலமடைந்திருக்கிறாள்' என்பதை யெல்லாம் இந்தக் கதறலைக் கேட்கும்போது நம்மால் புரிந்து கொள்ள முடிகிறது.

**மஹாகன்னிகை**

மகா வாக்கியங்களைப் படைத்து ''வாக்-சமஸ்கிருதி'' என்கிற சொல் பண்பாட்டைத் தொடங்கியவரான வால்மீகி முனிவர், ''மஹாகன்னிகைகள்'' என்று மூவரை வகைப் படுத்துவார். இராமனால் தூயவளாக்கப்பட்ட அகலிகை, இராமனுடைய ஆசிகளைப்பெற்ற தாரை - இவர்களோடு மண்டோதரி. இந்த மூவருமே மாமுனி காட்டும் மஹா கன்னிகைகள். மண்டோதரியைத் தூய்மைப்படுத்தவும் வேண்டாம். அவளுக்கு ஆசிகளும் தேவையில்லை.

இராவணன் எவ்வளவுதான் தடம் மாறினாலும், தன் திறம் மாறாது அவனை நேசித்துப் பூசித்த நிலை தூயவள்;

சீதையின் கற்பை மிகுந்த மதிப்போடு நோக்கி, மைதிலியை மரியாதையோடு வணங்கிய மனம் தூயவள்;

இராமனின் உறுதியையும் அறத்தையும் பாராட்டி நியாயத்தை ஏற்றுக்கொண்ட மதி தூயவள்: - எனவே தூய்மை யினும் தூயாளாய் நின்ற அவளுக்கு ஆசிகள்கூட அநாவசியமே!

இராவணனைக் குற்றம் சொல்லாமல் அதே சமயம், அவனின் ஆணவப்போக்கை மட்டும் கண்டிக்கிற காதல் மனையாளாகவே மண்டோதரியைப் படைக்கிறார் வால்மீகி.

அதேபோல் இராமனுக்கு மிகுந்த புகழாரங்களைச் சூட்டு பவளாகவும் மண்டோதரி இருக்கிறாள். அது அறத்திற்கு அவள் செலுத்தம் காணிக்கை!

''கொடிய விதியால் கொலைக்களப்பட்டாயே!'' என்று இராவணன் உடல்மீது விழுந்து அவள் துடிக்கும்போது, அவளுடைய நடைமுறை ஞானத்தையும் சமநிலைகொண்ட உள்ளத்தையும் நம்மால் உணர முடிகின்றது.

## நிருதர் வேந்தனும் நிறைமிகு தேவியும்

இராவணன் மண்டோதரி மீது அன்பு காட்டியதாக எந்த அடையாளமும் கம்பனிலும் சரி, வால்மீகியிலும் சரி, நமக்குக் கிடைப்பதில்லை. ஆனால், மண்டோதரி, இலங்கேஸ்வரனை மட்டில்லாது நேசித்திருக்கிறாள். மனதார பூசித்திருக்கிறாள். அவன் நன்மைக்காக முயற்சித்திருக்கிறாள் என்பதற்கான எத்தனையோ தடயங்கள் தென்படுகின்றன.

## இராவணன் மனைவி

ஆதிகாவியத்திலும், வாங்கரும் பாதம் நான்கும் வகுத்த வால்மீகியென்பானின் விளக்கமாகவும் விரிநிலையாகவும் அமைகிற கம்பநாடகத்திலும் மண்டோதரியைப் பார்க்கும் போது மனம் துடிப்பதென்னவோ உண்மையே!

ஏன் தெரியுமா?

அவள் மயன் மகள்.[38]

''தானவர்த் தலைவனான மயன் தன் தந்தை; அரக்கர் தலைவன் இராவணன் தன் கணவன்; தேவேந்திரனை வென்ற

மேகநாதன் தன் மகன்'', என்று தான் பெருமைப்பட்டுக் கொண்டதாக அவளே தெரிவிக்கிறாள்.

மயனுக்கு ஓர் அழகிய மகளிருப்பது தெரிந்ததும் 'அவள் தனக்கு வேண்டும்' என்று ஆசைப்படுகிறான் இராவணன். பிரம்மனையும் வாயுவையும், தேயுவையும், சகல தேவர் களையும் ஆட்டிப் படைக்கிறான் இராவணன் என்று தெரிந்த மயன், தனக்கு 'ஒரு மாமனார் அந்தஸ்துக் கிடைத்தாலாவது தனக்கு அவமானம் நேராது' என்று கணக்குப் போடுகிறான். விளைவு? மண்டோதரி, இராவணன் மனைவியாகிறாள்.

மகளின் மனதைப் பற்றிக் கவலைப்படாத தந்தை; மனைவியின் மனதைப்பற்றி எண்ணியே பார்க்காத கணவன் - இடையில் தன் மனச்சுமைகளைத் தான் மட்டுமே தனக் குள்ளேயே பரிமாறிக் கொள்ள வேண்டிய கட்டாயத்திற்குத் தள்ளப்படுகிற மண்டோதரி.

நியாயத்தைக் கைக்கொண்டு, அந்தத் தலைமகளின் நிலைபற்றிச் சிந்தித்தால்தான், தன் வருத்தங்களை அவள் அழுதுகூட அகற்றிக் கொண்டிருக்க முடியாது என்பது புரியும்.

அசோகவனத்தில் இராவணன் சீதையைச் சிறைப்படுத்தி, தன் இனத்தார் ஒவ்வொருவராக இழந்து கொண்டிருந்தபோது அவள் மனத்திலும் துயரம் மண்டியிருக்கும். அவள் சிந்தனை யிலும் சீற்றம் சிலிர்த்திருக்கும்; அவள் எண்ணத்திலும் ஏக்கம் எழும்பியிருக்கும்.

அவள் அழ நினைத்திருந்தாலும் கூட யாரிடம் அழுதிருக்க முடியும்? தந்தையிடமா? இராவணனுக்குப் பெண் பலவீனம் உண்டு என்று தெரிந்தபின்தானே மயன் மகளைக் கொடுத்தான்.

உற்றார் உறவினரிடமா? 'உன் புருஷன்தானே' என்றுதானே அவர்கள் இடிப்பார்கள்.

மற்றைய ராணியரிடமா? 'நீ தானே பிரதான மனைவி' என்றுதானே அவர்கள் துடிப்பார்கள்.

அவைக்களத்து ஆன்றோரிடமா? இராவணனின் ஆணவத்திற்கும், அகங்காரத்திற்கும் பயந்த அவர்கள், இவளை ஒரு பொருட்டாகவா நினைப்பார்கள்.

யாரிடம் அழுவாள்? யாரிடம் முறையிடுவாள்?

பட்டமகிஷியாக இருந்த அவள், அரசன் செய்யும் தவறைக் கூட வெளியில் தெரியாது, அரியணையின் கௌரவத்தையும் அரசனின் அந்தஸ்தையும் கட்டிக்காக்க வேண்டிய கடமைக்குள் தள்ளப்பட்டிருந்தாளே தவிர, அரசிக்கும் ஓர் அகம் உண்டு என்பதையோ, அந்தக் கிரீடத்திற்குப் பின்னாலும் உள்ளமும் எண்ணமும் உண்டு என்பதையோ யாவரே உணரற்பாலர்?

விந்திய மலையாக நின்ற கணவனிடம் முட்டிப்பார்த்தாள், மோதிப்பார்த்தாள், அவன் காலடியில் கண்ணீர் சிந்திப் பார்த்தாள், அவனோ, தான் மலையென்ற மதர்ப்பில் நின்றானே தவிர, மலையை மலையாகவே உயரவைக்கத்தானே இந்த மகள் துடிக்கிறாள் என்று கிஞ்சித்தும் கொள்ளவில்லை.

**மயன் மகள்**

'மயன் மகள்' 'மயன் மகள்' என்று மட்டுமே அவளைச் சுட்டுகிறார் கம்பநாட்டாழ்வார். மண்டோதரி நேரடியாக இடம்பெறும் இடங்கள் நான்கு. அக்ககுமாரன் மரணித்தவுடன், இந்திரசித்தன் மரணித்தவுடன், இராவணன் மரணித்தவுடன் ஆகிய இம்மூன்றோடு முதன்முதலாக இலங்கைக்குள் சீதையைத் தேடுகின்ற அனுமனின் பார்வையில்... இந்த நான்கு இடங்களிலேயும் அவளை, மயன் மகள்[39] என்றே குறிப்பிடுவார்.

இவை தவிர, இறுதிப்போருக்குப் புறப்படுமுன்பாக சபதம் போடுகிற இராவணன் வாயிலாகவும், வேல் படையை

வீடணன் மீது வீசுகிற இராவணனைப் பற்றிய செய்தியில் அவ்வேல்படை மயன் கொடுத்தது என்று குறிப்பிடுகையில் கவிவாயிலாகவும் ''மண்டோதரி'' குறிப்பிடப்படுகிறாள். அப்போதும் ''மயன் மகள்' 'என்பதே குறிப்பாகும்.[10]

அதிகாயன் மரணித்தபோது அழுகிற தானியமாலினின் புலம்பலில் 'இந்திரசித்தன்' என்று குறிப்பிட 'மண்டோதரி மகன்' என்று சொல்வதாக வரும்போது மட்டுமே அந்தப்பெயர் குறிப்பிடப்படுகிறது.[11]

இந்திரசித்தனை இராவணி[12] என்றழைக்கிற கம்பர், மண்டோதரியை இலங்கைவேந்தன் மனைவி என்றழைக்க வில்லை.

ஏன்? மண்டோதரி என்கிற மேன்மைக்கேற்ற மன்னவனாக, கண்ணியத்திற்கேற்ற கணவனாக இலங்கேஸ்வரன் இல்லை என்பதைக் கவி வாயிலாகக் காட்டுகிறாரா?

சுயநலச் சிந்தனையில் அந்தச் செம்மகளின் சீர்மையை மயன் சிதைத்து விட்டான் என்பதைச் சொல்லாமல் சொல்கிறாரா?

## மைதிலியா? மண்டோதரியா?

இலங்கைக்குள் நுழைந்து சீதையைத் தேடும் அனுமன் மண்டோதரியை அரண்மனையுள் கண்டு வியப்பதான காட்சி, கம்பரிலும் உண்டு, வால்மீகியிலும் உண்டு.

இராவணனின் புட்பக விமானத்தைக்கண்டு, பின் அந்தப்புரத்தைக் கண்டு வருகிற, ஆஞ்சநேயன், மந்தோதரியைக் காண்பதாக வால்மீகியின் சுந்தரகாண்டத்து தஸம ஸர்க்கம் தெரிவிக்கும்.

> ''உத்தமஸ்த்ரீ விம்ருதிதௌ கந்தோத்தம நிஷேவிதௌ.
> யக்ஷபந்நக கந்தர்வ தேவதாநவ ராவிணௌ''[13]

**''காசி தாடம்பரம் நாரீ புஜஸம்யோக பீடிதம்**
**க்ருத்வா கமலபத்ராக்ஷீ ப்ரஸீப்தா மதமோஹிதா''**

''கண்டனன், நளிர் திங்கள் மாய நந்திய வாள் முகத்து ஒரு தனி மயன்மகள் உறை மாடம்'' என்று இந்தச் செய்தியைச் செப்புகிறார் கம்பநாடர்.[45] எரி மணி விளக்கங்கள் எழில் கெடப்பொலிகின்ற தன்னது இன் ஒளி தழைப்புறத் துயில்வுறு தையலாக விளங்குகிறாள் மயன்மகள். 'அன்னள் ஆகிய சானகி அவள்' என்றே நம்பி விடுகிறான் இராகவதூதன். 'இராமன் மனைவி, இலங்கைவேந்தன் அரண்மனையில், அந்தப்புரத்தில், மலரோடும், மலர்மிகு பஞ்சணையோடும் படுத்துறங்கு கிறாளா' என்று அயிர்க்கிறான் அனுமன்.

**''தன் அருந் தெய்வக்**
**கற்பு நீங்கிய கனங்குழை இவள் எனின்**
**காகுத்தன் புகழோடும்**
**பொற்பும், யானும், இவ்விலங்கையும் அரக்கரும்**
**பொன்றுதும் இன்று''[46]**

என்று முடிவெடுத்து விடுகிறான்.

''சீதை இவ்வாறு இருப்பாளேயானால், இன்றே இந் நகரையும் இங்குள்ளோரையும் அழித்து யானும் அழிகிறேன்'' என்று எண்ணுகிறான்.

சற்றே உற்றுப் பார்த்தவுடன், அனுமனின் ஐயம் நீங்குகிறது.

அழகின் அழகாக உறங்கினும் இவள் யார்?

''தான் இயக்கியோ? தானவர் தையலோ?''

வசையில் ஐயனாம் வள்ளல் இராமனின் மனைவியான மருங்கில் சீதை இவ்வாறு இருக்கமாட்டாள்.

இவள் அழகில் இலக்கணங்கள் இருந்தாலும், சில இடர்ப்பாடுகளும் உள்ளன. இவள் கூந்தலில் மலரிருப்பினும்,

அம்மலரில் வாட்டம் உண்டு. எனவே இவள் சீதையாக இருப்பதற்கான வாய்ப்பு இல்லை.

அனுமனின் அன்பு உள்ளம், அவசர அவசரமாக ஆய்வு செய்கிறது.

**மானுயர்த் திரு வடிவினள் அவள்; இவள்**
**மாறு கொண் டனள்;**
**கான் உயர்ந்த தார் இராமன் மேல்நோக்கிய**
**காதல் காரிகையார்க்கு**
**மீன் உயர்ந்தவன் மருங்குதான் மீளுமோ?**
**நினைத்தது மிகை[47]**

என்று சிந்திக்கிறான்.

மண்டோதரியின் தூக்கத்தில் காணப்படுகிற சில மாற்றங்கள், அவளுக்கு வரவிருக்கும் துன்பத்தைப் பறை சாற்றுகின்றன.

**மலர்க்கருங் குழல் சோர்ந்து, வாய்வெரீஇ, சில**
**மாற்றங்கள் பறைகின்றாள்**
**உலக்கும் இங்கு இவள் கணவனும்; அழிவும், இவ்**
**வியன் நகர்க்கு உளது![48]**

ஆராய்ந்து தெளிகிற ஆஞ்சநேயன், ஆய்வு முடிவுக்கு வந்துவிட்டாலும் நமக்கு இன்னொரு கேள்வி பிறக்கிறது.

மலர் கருகியதால் அவள் மைதிலி அல்லள் என்னும் முடிவுக்கு வாயுமைந்தன் வரப்பெற்றான், சரி! ஆனால், முகமும் பொலிவும் அழகும் அருளும் பொருந்திய அவளைக்கண்டு, அவளே சீதையென்னும் நம்பிக்கைக்கு, மறைகள் உணர்ந்த மாண்புறு அனுமனே வந்துவிடுவானென்றால், அத்தகு சிறப்புடையவளாகவன்றோ மண்டோதரி இருந்திருக்க வேண்டும்.

மைதிலிக்கு நிகராக மண்டோதரி இருந்தாள் என்னின் அந்த மயன்மகள் எத்துணை உயர்ந்தவள்?

இந்த எண்ணம் நமக்கு மட்டுமா வருகிறது?

கைலாயத் தலைவி, பரமேஸ்வரன் தாள்பற்றிய பார்வதி யம்மையாருக்கும் இப்படித் தோன்றியதாம்.

''மந்தோதரி ஒரு ராக்ஷஸியன்றோ? அவள் எப்படி சீதைக் கொப்பாவாள்? அவளைக் கண்டு சீதையென்று சந்தேகம் கொண்டு வாயுபுத்திரன் சஞ்சலமடைந்தது எவ்வாறு?'' என்று பார்வதி பரமேஸ்வரனிடம் கேட்க, அதற்கு விடையிறுத்தார் கைலைநாதர்.

''எவ்வாறு சீதையானவள் விஷ்ணுவின் அம்சமோ, அவ்வாறு மந்தோதரியும் மகாவிஷ்ணுவால் சிருஷ்டிக்கப்பட்ட அவரின் அம்சமே. எனவேதான், இருவருக்கும் ஒப்புமை காண முடிகிறது.''

மண்டோதரியை தெய்வாம்சம் நிறைவிக்கும் இத்தகு நிகழ்ச்சியொன்று ஆனந்த இராமாயணத்தில்[19] அமைக்கப் பட்டுள்ளது.

இராவணனுடைய தாய், ஒரு சிவலிங்கம் வைத்துப் பூசித்து வந்தாள். ஒருநாள், அந்த லிங்கம், ஆதிசேடனது ஸ்வாசம் வழியாகப் பாதாளலோகம் போய்விட்டது. விசனத்தில் ஆழ்ந்த அந்தத்தாய், வல்லமை பொருந்திய தன் மகனைப் பார்த்து பரமசிவனிடம் சென்று ஓர் ஆத்மலிங்கம் பெற்றுவரப் பணிக்கிறாள். ஸாமகானம் சிறப்புறப் பொழியும் அந்தவீணை வித்தகனோ, சம்புதேவரிடம் சென்று காம்போதியால் குளிர் வித்து, வரம் வேண்டுகிறான். தாய் கேட்டதை மட்டுமே, தான் கேட்கவில்லை அந்தத்தனயன். சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்கிற அந்த சல்லாபி, இரு வரங்களை இறைஞ்சுகிறான். தாய் பூசிக்க ஆத்மலிங்கம் அருள வேண்டுகிறான். அடுத்து, இறையனாரின் வாமபாகத்திலிருக்கும் பெண்ணை வரமாக்கி, அவள் தனக்கு வேண்டும் என்கிறான்.

கேட்டதைக் கொடுப்பவரல்லவா கைலைநாதர். இரண்டையும் யாசித்தவனுக்குத் தருகிறார். ஆயின், செல்லும் வழியில் எங்கு ஆத்மலிங்கத்தைக் கீழே வைத்தாலும் அங்கேயே அது ஸ்திரமாகிவிடும் என்றும் ஆணையிடுகிறார்.

இராவணன் லிங்கமும் இமவான் மகளும் கொண்டு போகையில், எதிரே ஓர் அந்தணர் தோன்றுகிறார். அவர் அந்தணர் உருக்கொண்டு போந்த மகாவிஷ்ணுமாவார்.[50]

இராவணன் அவ்வழி வருமுன்னர், மகாவிஷ்ணு, தன் சரீரம் முழுதும் பூசியிருந்த சந்தனத்தைத் திரட்டிப் பெண்ணாக்கினார். பொன்னென ஒளிர்ந்த அந்தப் பெண்ணுக்கு 'மந்தோதரி' எனப் பெயரிட்டார். அப்பெண்ணை மயனிடம் கொடுத்து அவனுலகாம் பாதாள லோகத்தில் பாதுகாக்கச் சொன்னார்.

பின், அவ்வழிவந்த இலங்கேஸ்வரனை எதிர் கொண்டார்.

'இது பரமசிவன் பத்தினி', என்று மார் தட்டினான் மன்னன்.

''அட மூடா! பரமசிவன் தன் பத்தினியைப் பாதாளவுலகில் ஒளித்தன்றோ வைத்துள்ளார். இன்னொரு பெண்ணை இமவான் மகளென்று காட்டி உன்னை ஏமாற்றிவிட்டார்'', என்று அவனைச் சலனப்பட வைத்தார் சத்யநாதர். ''பூவுலகிலும் ஸ்வர்க்கத்திலும் பார்வதியை நீ தேடுவாய்; பாதாளவுலகில் நீ தேடமாட்டாய் என்றுதான் இப்படிச் செய்தார்'', என்று மேலும் மயக்கினார். ஆணவத்தின் பாற்பட்ட இராவணன், தனக்கு மீறி எந்த ரகசியமும் நிற்காது என்கிற நினைப்பில் மீண்டும் கைலைக்குச் சென்று, ''நீரே இப்பெண்ணை வைத்துக் கொள்ளும்; நான் அங்கிருப்பவளை அழைத்துக் கொள் கிறேன்'', என்று பார்வதியைப் பரமசிவனிடத்தில் கொடுத்து விட்டு ஓடினான்.

செல்லும் வழியில், மீண்டும் அதே அந்தணரைச் சந்திக்கும் நிலையில், சில கடன்களைக் கழிக்கவேண்டி, ஆத்மலிங்கத்தை அவர் கையில் கொடுத்துப் போனான். ஒரு முகூர்த்தம் அவன்

மீண்டு வராததால், அந்தணரும் ஆத்மலிங்கத்தை மேற்குக் கடற்கரையில் வைத்துத் தன்னிடம் சென்றார். திரும்பி வந்த இராவணன், பூமியில் வேரூன்றிப்போன லிங்கத்தை அசைக்க முயன்று தோற்றான். லிங்கத்தின் மேல்பாகம் செவி போலவும், அதனுள் ஒரு பள்ளம் செவிப்பறை போன்றும் காணப்பட்டது.[51] உலகின் செவி போல் கண்ணுறப் பெற்றதால் அவ்விடம் அப்போது முதல் கோகர்ண க்ஷேத்திரம் என்றானது.[52]

லிங்கத்தை இழந்த இராவணன், பாதாளலோகம் சென்று மயன் மகளாக இருந்த மந்தோதரியைக் கண்டான். இடை சிறுத்தவள். எனவே, 'மந்தோதரி' என்னும் பெயரே பொருத்த முறக் கொண்டவள் என்று எண்ணி, அவளை அழைத்துக் கொண்டு இலங்கை அடைந்தான்.

நீண்ட இந்தக் கதையைப் பார்வதிக்குப் பரமேஸ்வரன் கூறுவதாக ஆனந்தராமாயணம் விவரிக்கிறது. இதனால்தான், சீதைக்கொப்பாக மண்டோதரி விளங்கினாளாம்.

தெய்வாம்சம் பொருந்தியவளாக அவள் இருந்ததற்குக் காரணம், இயற்கைமீறிய இத்தகு நிகழ்வு என்று பக்தி மூலக்கூறுகள் மிக்குமேவிய ஆனந்தராமாயணம் கூறினாலும், திண்ணிய நேர்மையோடும் திறல்மிகு தெளிவோடும் அவள் இராவணன் மீதழுது பற்பலவுரைக்கும்போதே, அவள் ஆன்மபலம் மிக்கவள் என்பதைக் கம்பனைக் கற்போர் உணர்ந்து விட முடியும்.

### துளஸியின் தூயவள்

மானஸ ஸாகரத்தில் நுழைந்து பக்திப் பெருக்கோடும் பரவசத்தோடும் இராம கதையைப் பேசுகிற துளஸீதாசரின் இராமசரிதமானஸம், இலங்கைக்குள் நுழைந்த அனுமன் மண்டோதரியைக் கண்டதாகக் கூறவில்லையெனினும், அவளின் உயர்வை வேறுவிதமாக விரித்துரைக்கிறது.

கடல் கடந்து அணைகட்டி ஸ்ரீராமரின் சேனை வந்துவிட்ட செய்தியைக் கேள்விப்பட்ட மண்டோதரி, தன் நாதனின் கைகளைப்பற்றி, தன் அந்தப்புரம் அழைத்துச் செல்கிறாள்.

**''கர் கஹி பதிஹி பவன் நிஜ ஆனி**
**போலி பரம் மனோஹர் பானி''**[33]

இனிய சொற்களால் இங்கிதம் உரைக்கிறாள். அவன் பாதங்களில் தன் சிரம் பதிக்கிறாள்.

''ஆங்காரம் கொள்ளாது கேளும். ஆருயிர் நாதரே! திண்மையாலோ திறமையாலோ ஒருவரை வெல்லமுடியும் என்றால்தான், ஒருவரைப் பகைக்க வேண்டும். மதுகைடவரைத் தீர்த்தவர். ஹிரணி கசிபுவை, ஹிரண்யாக்ஷதனை ஒழித்தவர். மகாபலியைத்திணறடித்தவர். இப்போது பூபாரம் தீர்க்க பூமி வந்தார். காலமும் கணக்கும் நீத்த காரணனை, விதியின் வித்தகனை, ஆன்ம ஆதாரத்தைத் தாங்கள் எதிர்ப்பது நியாயமில்லையே!''

''தங்களுக்குத் தேவைகள் ஏதும் இனி உண்டோ? தேவர்களை, அரக்கர்களை, உயிருள்ளவற்றை, உயிரற்ற வற்றையாவும் வென்றுவிட்டீர்; இனியென்னவுமக்கு? வாழ்வின் நான்காவது நிலையானபின், ஓர் அரசன் கானகம் செல்வது உசிதம் என்றல்லவா மறைகள் மொழிகின்றன. கோசல நாடுடை வள்ளல், முனிவரும் தேவரும் மும்மை சார்ந்து நாடும் முழுமுதற்பொருள், உமக்கு உண்மையருள தானே நாடி, தான் வந்தடைந்தான். அருள்கூர்ந்து நான் கூறுவதைக் கேளும்; அவன் சரணம் பற்றினால் உம்புகழ் மூவுலகும் பல்கிப் பெருகும்'' என்று மெய்ப்பொருள் உண்மையை மெல்லச் சொல்கிறாள். ''அவன் தெய்வம்'', என்று அவள் கண்ணீரோடும் கவலையோடும் கூற, யாதும் உணராதவனாக இலங்கேஸ்வரன், தன் பெருமை மட்டுமே மீண்டும் உரைப்பான்.

**''தப் ராவண் மயசுதா உடாயி!**
**கனஹ வாக் கல் நிஜ ப்ரபுதாயி!''**[34]

தற்பெருமை பேசி அவன் போனதும், வரவிருக்கிற மரணம் மட்டுமே அவன் தலையை திசை திருப்பி விட்டதென்பதை உணர்கிறாள் அந்த உத்தமி.

தன் வலியும், துணைவலியும், மாற்றான் வலியும் தெரிந்த பின்னரே போரிட வேண்டும் என்கிற வள்ளுவப் பேராசானின் வாய்மொழியின் விளக்கத்தை மண்டோதரியின் கெஞ்சலில் காணமுடிகிறதல்லவா!

மந்திரியாக உரைக்கிறாள்; மனைவியாக உரைக்கிறாள்; மாமுனியாக உரைக்கிறாள்!

## மனைவியென்னும் மந்திரி

இராமன், தன் நண்பர்களுடன் மந்திராலோசனை நடத்திக் கொண்டிருக்கிறான். தெற்குப் புறத்தில் மேகங்கள் புடைசூழ்ந்து மின்னல் பாய்வதுபோல் தெரிகிறது. அதை வீடணனுக்குக் காட்டுகிறான் காகுத்தன்.

மேகமோ மின்னலோ இல்லையாம் அவை; வீடணின் விளக்கம் வருகிறது. இலங்கையின் மலையுச்சியில், ஓர் அரங்கில் அமர்ந்து இசைநடன நிகழ்ச்சியைக் கண்டுகளித்துக் கொண்டிருக்கிறான் இராவணன். அவன் சிரத்தின் மீது சுழலும் கொற்றக் குடையன்றோ மேகம் போல் திரண்டு தோன்றுகிறது. அரசி மண்டோதரியின் காதாடும் குழைகள் மின்னலாய் ஒளிர்கின்றன.

இது கேட்ட இராமன், இராவணனின் ஆணவத்தை அகக்கண்ணில் நோக்குகிறான்; வில்லெடுக்கிறான்; அம்பு தொடுக்கிறான். கோதண்டம் அனுப்பிய கணை, இராவணனின் கொற்றக் குடையையும், முடியையும், மண்டோதரியின் குழைகளையும் நிலத்தில் வீழ்த்துகிறது.

மண்டோதரியின் மனதை நமக்கு மிளிர்த்திக் காட்ட இந்நிகழ்ச்சியை மேலும் மலர்த்துகிறார் துளஸீதாசர்.

''ராவண் ஸபா ஸன்ஸக் ஸப் தேக்கி மஹா ரஸபங்க்''. இலங்கைவேந்தன் அவை இதனால் கலங்கித் தவிக்கிறது. பூகம்பம் இல்லை; புயல் இல்லை; ஆயுதமோ அம்போ இல்லை. இருப்பினும் என்ன நடந்ததென்று எல்லோரும் வியக்கிறார்கள். பத்துத்தலை வேந்தன், இதைப்பார்த்து நகைக்கிறான். கிரீடம் விழுந்தால் கேடு வந்துவிடுமா? என்று கேட்கிறான்.[55]

ஆயின், வரக்கூடிய விசனத்தை உணர்ந்து விடுகிறாள் அவன் மனைவி. கரம் குவித்துச் சிரம் தாழ்த்தி தசமுகனிடம் தன்மை கூறுகிறாள். 'தங்களின் பிடிவாதத்தை வீசிடுங்கள்; வந்திருப்பவன் வேதநாயகன்; மும்மூர்த்திகளும் முழுமை பெறும் மூலமுதல்வன்; மானுடவடிவில் வந்த மாமாயன்; அவன் பதம் பற்றுங்கள்' என்று உண்மை நாடுகிறாள்; 'ரகு வீரனின் பதத்தில் ப்ரீதி கொள்ளுங்கள்' என்று மென்மையாய்ச் சாடுகிறாள்.

'பெண் புத்தி பின் புத்தி' என்று அவளைக் கேலிபேசிக் கனைக்கிறான் நிருதர் கோமான்.

எதிர்கொள்ள வந்துவிட்ட காலன், கணவனின் புத்தியை பேதலிக்க வைத்துவிட்டான் என்கிற கட்டாயத் தீர்மானம் கொள்கிறாள் அந்தக் காரிகை!

ஆயிரம் ஆயிரம் எடுத்துரைத்தும் அருமை நாயகன் உண்மை உணரவில்லை என்பது அவளைப் புண்படுத்துகிறது. புண்ணான அந்தப் பெண்மை, தன் மணாளன் மண்ணாகக் கூடாது என்று மனம் விழைகிறது.

உண்மை உரைக்கிறாள் - உணரப்படவில்லை!

மென்மை உரைக்கிறாள் - மேற்கொள்ளப்படவில்லை!

திண்மை உரைக்கிறாள் - தெரிந்துகொள்ளப்பட வில்லை!

ஆசை உரைக்கிறாள்; அர்த்தம் உரைக்கிறாள்; ஆன்மசுத்தி உரைக்கிறாள்; அன்பு உரைக்கிறாள்; பண்பு உரைக்கிறாள்; எதுவுமே புரிந்துகொள்ளப்படவில்லையென்னும்போது மெதுவாக மனமுடைந்து முடங்கிப் போகிறாள்.

மீண்டும் பிரஹஸ்தனின் மரணத்தின்போது, உற்றது உரைக்கிறாள். அக்ககுமாரனும், பிரஹஸ்தனும் இறந்தபின்னும் இராவணன் தவற்றினைத் திருத்திக்கொள்ளாதது நீதியல்ல என்று சாத்திரம் சாற்றுகிறாள்.[56] அனுமன், அங்கதன் போன்ற மாபெரும் வீரர்களைத் தூதுவர்களாக அனுப்பி ஆட்கொள்ளும் முயற்சி யன்றோ அந்த தெய்வம் செய்தது; அதனையுணராமல் ஆணவ அகங்காரங்களின் பாற்பட்டு நிற்பது மரணம் செய்யும் மயக்கம் - என்று ஞானம் நவில்கிறாள்.

இராவணனா கேட்பவன்? அவளை முட்டாள் என்கிறான். அவளின் சொற்கணைகள் அம்புகளாகி நெஞ்சைத் துளைத் தாலும் கூட, கர்வத்தைக் கைக்கொண்டு அச்சத்தை அகற்றினான், என்று விளக்குகிறார் துளஸீ.

## கணவனைக் காக்கும் காரிகை

அசோகவனத்தில், சோக சாகரத்தில் மூழ்கியிருக்கும் ஜானகியிடம், கோலாகலமாக வந்து மாயச்சொற்கள் பேசிப் பார்க்கிறான் இராவணன்.

அவன் வரும்போது அவனுடன் பல மாதர் சூழ்ந்து வருகின்றனர்; அவர்களுள் மண்டோதரியும் வருகிறாள்.

இராமனைக் குறித்து நீச வார்த்தைகளையும் மோச வார்த்தைகளையும் பேசுகிற இராவணன், இராம இலக்குவர்கள் அழிவர் என்றும், தான் எல்லாவிதச் செல்வங்களையும் சீதைக்குக் கொடுப்பதாகவும் கூறுகிறான்.

இத்தகையதொரு காட்சி இராமசரிதமானஸம், ஆனந்த ராமாயணம், அத்யாத்மராமாயணம் மற்றும் சமண இராமாயணங்கள் பலவற்றிலும் காணப்படுகிறது.

**''பவத்ரீலங்காயாம் த்ரிதசவனக்லானி ரசிராத்**
**ஸராமோபி ஸ்தர்தா நயுதி புரதெ லக்ஷ்மணஸக:**
**ததா யாஸ்யத்யுச்சைர் விபதமனு ஜெனா த்ரஜடில:**
**ஜயஸ்ரீராம ஸ்யோன்ந மம பஹிதோஷாத்ர துபவேத்''**[57]

என்று சொல்லி இலங்கையிலும் மற்ற இடங்களிலும் உள்ள தேவர்கள் முகங்கள் வாட்டமுறும்படியாக இராம இலக்கு வர்கள் யுத்தத்தில் தோற்றுப்போவர் என்றும், தான் வெல்லப் போவதாகவும் உரைக்கிறான், ஆனந்தராமாயணத்து தசானன். மேலும், காடுகளில் தபஸ்வியாக ஏகாங்கியாகத் திரிகிற இராமனை மறந்துவிட்டு, பராக்ரமசாலியாகவும் பலமுள்ள வனாகவும், செல்வந்தனாகவும் உள்ள தன்னை அடைந்தால், மண்டோதரி முதலான தன் அரசிகள் யாவரையும் சீதையின் பணிப்பெண்களாகும்படிச் செய்வதாகவும் கூறுகிறான்.

மானஸ இராவணன் ஒருபடிமேலே போகிறான். சீதை ஒரேயொரு கடைக்கண் பார்வை வீசிவிட்டால் கூடப் போதும்; மண்டோதரி முதலானோரைக் கைப்பாவைகளாய்த் தருவதாய்ச் சூளுரைக்கிறான்.

**கஹ் ராவணு - ''ஸுனு ஸுமுகி ஸ யானி:**
**மண்டோதரி ஆதி ஸப்ராணி**
**தவ் அனுசரண் கரூன் பன் மோரா**
**ஏக்பார் பிதிலோகு மம ஓரா''**[58]

கேட்டதும் துடிக்கிறாள் மிதிலைச் செல்வி. தகாத சொற்கள் சொன்ன தசமுகனை, தசரதன் மருகி, சீறிப்பாய்ந்து கடிகிறாள். இராமனின் வீரம் பற்றியும், அம்புகள் பற்றியும் யாதொன்றும் அறியாத அற்பப்பதராக அவன் இருப்பதைச் சுட்டித் திட்டுகிறாள். சீதையின் சுடுமொழி கேட்டுப் பரிதவிக்கும் அந்தப்பாவி, வெகுளி தலைக்கேற அவளை வெட்டி வீழ்த்த வாளெடுத்துப் பாய்கிறான்.

பாயும் அவனைப் பாய்ந்து தடுக்கிறாள் மண்டோதரி. மயன் மகள் நன்மை சொல்கிறாள்; நீதிசொல்கிறாள். 'ஆழகான

பெண்கள் பலரிருக்க, வாடித் துரும்பாய் வதைந்து கிடக்கும் மைதிலி ஏன்? விட்டுவிடும்' என்று சமாதானப்படுத்துகிறாள். ''பெண்ணைக் கொல்லுதல் பெரும் பாவம் தரும்'' என்று சாந்தப்படுத்துகிறாள்.

மண்டோதரியின் சொற்கள் கோபம் தணிவிக்க, அரக்கி மாரைப்பார்த்து, சீதையைத் தன்வழிக்குத் திருப்பச் சொல்லி விட்டு, இடம் நீங்குகிறான் இராவணன்.

இந்தத்தருணத்தில் மண்டோதரியின் நிலையைச்சற்றே சிந்திப்பது அவசியம்.

இலங்கேஸ்வரன் சீதையிடம் உவர்மொழிகள் பேசும்போது உடனிருக்க வேண்டிய கட்டாயம் அவளுக்கு; 'மண் டோதரியைக் கைப்பாவை ஆக்குவேன்' என்கிற அவனுடைய கர்வமான சொற்களுக்கு அவளுமே சாட்சி; அதைக்கேட்டு வாளாவிருக்க வேண்டிய வடிவில்லா அவஸ்தை; சீதையிடம் காமவார்த்தைகள் பேசுவதையும் கேட்டிருந்து, உடனேயே சீதையின் அவமதிப்பால் கோபமுறுபவனை சமாதானப் படுத்தும் சூழல்- 'இருதலைக்கொள்ளி எறும்பு' என்பார்களே, அது எப்படித் தவிக்குமோ, அதைவிட அதிகமாகவன்றோ மண்டோதரி தவித்திருக்க வேண்டும். இலங்கைநாதன் சொல்கேட்டு எவ்வளவு துடித்திருப்பாளோ; ஆயின், அவள் முகமோ, கண்களோ அந்தத் துடிப்புகளை வெளிக்காட்ட முடிந் திருக்காது. அவன் கோபத்தைத் தணிக்கும்போது தத்தளித் திருப்பாள்; ஆயின், அவனைத் தணிவிப்பது முக்கியமேயன்றி, அவளின் உணர்வுகளுக்கு அப்போது இடம் இருந்திருக்காது. இராவணனே குறைத்துப் பேசுவதைக் கேட்ட மற்றையர், அவளை எவ்வளவு இழித்தும் பழித்தும் இடித்திருப்பார்கள்.

கம்ப காவியத்தில் இராவணன் சீதையிடம் சென்று உரைநிகழ்த்தும் போது மண்டோதரி உடனில்லை; வான் மீகத்தில், அவள் உடனிருந்தாளா இல்லையா என்பது தெரியவில்லையாயினும் இராவணனைச் சமாதானப்படுத்து

பவள் தானியமாலினி ஆகிவிடுகிறாள். இருந்தபோதிலும், இவ்வாறு ஒரு கட்டம், எந்தப் பெண்ணின் வாழ்வில் வந்திருப்பினும், அது பெருத்த சோகத்திற்கு மட்டுமல்ல, மிகுந்த சோதனைக்கும் உரியது என்பதை உணரவேண்டும்; அந்தச் சோதனையில் சத்திய சோதனை நடத்தி, மண்டோதரி சரித்திரமாகியிருக்கிறாள் என்பதையும் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும்.

## கன்னடம் நாட்டும் கவின்மங்கை

மண்டோதரியின் பொறுமையும், தன்னையே புடம் போட்டுக் கொள்ளும் மேன்மையும், கன்னடத்தில் இராமனுடைய கதையை யாத்துக் கொடுத்த நாகசந்திரர்[59] உள்ளத்தை உருக்கியிருக்க வேண்டும். சமண முறையான பௌமசரிய மரபை அடியொட்டித் தன்னுடைய இராம கதையை வழி நடத்துகிறார் ஆசிரியர். மண்டோதரி இராவணனிடம் அன்பு மிகுந்தவள்; அது மட்டுமன்றி, அவனிடம் மதிப்பு பூண்டவள். அவள் மைதிலி மீது விருப்பு கொண்டு விட்டான் என்றவுடனே அசோகவனத்தில் இருக்கும் சீதையை அணுகு கிறாள். இராவணனுக்காகப் பரிந்து பேசி அவள் மனதை மாற்ற உருக்கமிகு முயற்சிகளை மேற்கொள்கிறாள். தன்னிடம் ஒரு சொந்த சகோதரி போல நடந்து கொள்ளும் மண்டோதரியிடம் மைதிலிக்கும் மதிப்பேற்படுகிறது. அவள் பேசியதற்காகக் கோபப்படாமல், குலப்பெண் ஒருத்தி இவ்வாறு இன்னொரு பெண்ணைக் கணவனின் விருப்பம் கருதிக்கூட அணுகுவது அபத்தம் என்று திருத்துகிறாள் தர்மத்தின் தலைவி.

## நெருப்பு யக்ஞத்தில் அவளின் துடிப்பு

இந்திரசித்தன் இறந்தபின், தன் பலத்தையும் வலுவையும் சேகரித்துக்கொண்டு, இராமனை எதிர்க்க நினைக்கிற இராவணன், நெருப்பு யக்ஞம் செய்யத் தொடங்குவதான

தொரு செய்தி, சில இராமாயணங்களில் விரித்துரைக் கப்படுகிறது.

ஒரு குகைக்குள் நுழைந்துகொண்டு, குகைக்கு வெளியே காவல் வைத்துவிட்டு, சதுர் சாஸ்திரங்களையும் பரப்பி, சத்ருநாசம் குறித்து ஆபிசாரஹோமம் செய்யத் தொடங்குகிறான் தசமுகன். அவன் செய்யும் ஹோமப்புகை மேலெழும்பி விண் மறைப்பதைக் கண்ணுற்ற வீடணன், அதன் உண்மையுணர்ந்து, ஹோமத்தை உடனடியாகக் கலைக்கவில்லையெனில் இராவணனை அழித்திடல் அரிது என்னும் செய்தியை இராமனுக்குத் தெரிவிக்கிறான். வீடணன் சொற்கேட்டு நடக்க வானர வீரர்களுக்கு இராமன் ஆணையிட, அங்கதன் தலைமையிலான குழு இலங்கை நகர்புகுந்து, குகை நுழைந்து யக்ஞத்தைக் கிளர்த்த முயல்கிறது.

தியானத்திலமர்ந்திருந்த தசமுகனை எப்படியும் எழுப்ப முடியவில்லை. தட்டினால், குத்தினால், அடித்தால், உதைத் தால் எவ்வாறும் அவன் கவனத்தைக் கலைக்க முடியவில்லை. வழிதேடிய அங்கதன், வழியொன்று காண்கிறான்.

இராவணன் மனைவி மண்டோதரியின் அந்தப்புரம் நுழைந்து, அவள் கூந்தல் பற்றியிழுத்து, ஆடையைக் குலைத்து, மேகலை நழுவிக் கீழாடை கழல அழும் அவளை இழுத்துக்கொண்டு இலங்கை நாதன் இருந்த இடம் அடைந்தான் அங்கதன்.

கதறினாள்; கதறித்துடித்தாள்; துடித்துச் சிதறினாள் அந்த அபலை. ''மனைவியை இன்னொரு கை தொட்டு இழுத்து ஆடையைக் குலைத்து அவமானப்படுத்துவதைப் பார்த்துக் கொண்டிருக்கிறாயே!'' என்ற அவளின் அழுகுரல் இராவணனை தியானத்திலிருந்து எழுப்பியது; அவனின் யக்ஞம் கலைந்தது; வானரங்கள் நிம்மதிப் பெருமூச்சுடன் நீங்கியோடின.

மண்டோதரிக்கு அவமானம் இழைக்கப்படும் இந்தக்காட்சி அத்யாத்ம இராமாயணத்திலும், ஆனந்த இராமாயணத்திலும்

விரிவாகக் காட்டப்பட்டுள்ளது. பாதாளஹோமம் செய்கிற இராவணனிடம் அங்கதன் மண்டோதரியை இழுத்துப்போவது தெலுங்கு இரங்கநாத இராமாயணத்திலும் உண்டு.[60]

செங்கம்[61] என்னும் ஊரிலுள்ள அர்ச்சுனசாரதி[62] திருக் கோயிலில் இருக்கும் இராமாயண ஓவியங்களில் இந்த நிகழ்வு தெளிவாகச் சுட்டப்பட்டுள்ளது. தளவாய் நாயக்கரால் பதினாறாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் கட்டப்பட்டதாகக் கருதப்படும் இவ்வாலயத்தின் முகப்பு மண்டபக் கூரையில் இராமாயண ஓவியங்கள் உள்ளன. இலக்குவன்-இந்திரசித்தன் போர், நிகும்பலை யாகம், இந்திரசித்தன் மரணம் ஆகிய வற்றோடு கூட இராவணனின் பாதாளஹோமம், அனுமனும் அங்கதனும் பிற வானரங்களும் அவன் தியானத்தைக் கலைக்க முயன்று முடியாதது, மண்டோதரியை இழுத்துவரும் அங்கதன் அவளை அடித்து உதைப்பது, அவள் கூந்தலைப் பற்றியிழுப்பது, தன் ராணியின் அழுகுரலால் எழுந்திருக்கும் இராவணன் என்று காட்சிகள் கண்ணுறப் பெறுகின்றன. தெலுங்கிலும் தமிழிலும் இந்த ஓவியங்களுக்கான விளக்கங்களும் எழுதப்பட்டுள்ளன.

இதே போன்றதொரு காட்சி, பண்டைய வடமொழி இராம நாடகமான 'க்ருதராவணன்' என்பதிலும் கூறப்பட்டுள்ளதாக வல்லுநர்கள் விளக்குகிறார்கள்.

மண்டோதரி அவமதிக்கப்பட்டாள் என்பதோடு நம் சிந்தனை நின்றுவிடவில்லை. ஆனால், அதன்பின் அவள் எப்படி நடந்து கொள்கிறாள்?

தான் அவமதிக்கப்பட்டவுடன் பழிக்குப்பழி வாங்கும் உணர்வு யாருக்கும் ஏற்படும்; அதுவும் ஒரு பெண்ணுக்கு, ஓர் அரசிக்கு 'அது ஏற்பட்டால்' அந்த வஞ்சம் தீர்க்கும் உரிமையை எளிதாக நியாயப்படுத்தியும் விடலாம்.

ஆயின், மண்டோதரி ஒரு சாதாரணப் பெண்ணுமல்லள். சராசரிப் பெண்ணுமல்லள். மெய்மையுணர்ந்து மேன்மை உரைப்பவள் அன்றோ!

தன் சொந்த அவமானத்தை ஒதுக்கிவிட்டு, அந்தத் துயரத் தருணத்திலும் நீதிவழுவாது நினைத்துப் பார்க்கிறாள். சீதைக்கு நேர்ந்து கொண்டிருக்கும் கொடுமையை அசை போடுகிறாள்.

''சீதையை விட்டுவிடுங்கள். இலங்கைக்கு வீடணனை அரசனாக்குங்கள்; நாம் கானகம் சென்று தவம் புரியத் தொடங்குவோம்; இப்போது இதம் கேளுங்கள்'', என்று விருப்பு வெறுப்புகளை ஒதுக்கி வைத்துவிட்டு சமநிலையோடு சமர்ப்பிக்கிறாள்.

கம்பரிலும் வால்மீகியிலும் இந்தக் காட்சியைக் காண முடியவில்லையென்றாலும் கூட, இதுவரை நாம் பார்த்திருக்கக் கூடிய மண்டோதரியின் குணத்திற்கு மேலும் மேன்மை சேர்ப்பதாகவே இதுவும் அமைகிறது.

### சீதைக்குத் தாய்

சீதையை முதன்மைப்படுத்திப் பெருமை சேர்க்கிற இராமாயணங்கள் பலவற்றில், மண்டோதரியைச் சீதையின் தாயாக மொழிந்திருப்பதைக் காணலாம்.

மண்டோதரிக்கும் இராவணனுக்கும் ஒரு பெண்மகவு பிறக்கிறது. அந்தப் பெண்ணால் இராவணன் குலநாசம் அடைவான் என்கிற சாபமிருப்பதால், அந்தக் குழந்தையை ஒரு பெட்டியில் வைத்து வீடணனிடம் (அல்லது வேறு ஒருவரிடம்) கொடுக்கிற மண்டோதரி, நாவலந்தீவான பாரதத்திற்குச் சென்று அந்தப் பெட்டியை மண்ணுக்கடியில் புதைத்துவிடச் சொல் கிறாள். அப்படிப் புதைக்கப்பட்ட பெட்டியை, ஏர் உழும்போது விதேக நாட்டினர் கண்டுபிடித்து விதேக மன்னன் ஜனகனிடம் கொடுக்க, பெட்டியிலிருக்கும் பெண்ணைத் தன் மகளாக வளர்க்கிறான் ஜனகன். வைதேகியாக வளர்கிற அந்தப் பெண், பின்னர் இராவணன் முடிவுக்குக் காரணமாகிறாள்.

இந்த அடிப்படைக் கதையில், சிற்சில மாறுதல்கள் இராமாயணத்துக்கு இராமாயணம் காணப்படுகின்றன.

''இந்தப் பெண் குழந்தை ஆபத்தானவள். எனவே, பெட்டியைக் கடலில் விட்டுவிடு'' என்று மண்டோதரி வீடணனிடம் சொன்னதாகவும், பெட்டியைக் கொண்டு சென்றவன் வீடணனல்லன் - ஒரு வேலைக்காரன் எனவும், கொண்டு சென்றவன் கொண்டு போய் ஜனகனிடம் கொடுத்த தாகவும், யாகம் நடத்திய இராவணன் கொடுத்த வேதப்பொருளைப் பருகியதால் மண்டோதரி வயிற்றில் சீதை உதித்தாள் எனவும் ஆங்காங்கு மாறுதல்கள் உள்ளன.

சமண இராமகதைகள் பலவற்றில், சீதை மண்டோதரியின் புதல்வியேயாவாள். குறிப்பாக, குணபத்திரர் எழுதிய திகம்பரமரபு உத்தரபுராணத்திலும்[௬௩] ஜாதகக் கதைகளிலும் இவ்வுறவு கையாளப்பட்டுள்ளது.

காஷ்மீர ராமாயணங்களான[௬௪] சங்கம இராமாயணம், பிரகாச இராமாயணம், விஷ்ணு பிரதாப இராமாயணம், சர்ம இரா மாயணம், அமர இராமாயணம் ஆகியவற்றிலும் மண்டோ தரியே, மைதிலியின் மெய்யன்னையாவாள். பதினாறாம் நூற்றாண்டில், அஸ்ஸாமிய மொழியில், இராமகதையைப் பாடல்களாக்கினார் துர்காவர காயஸ்தர். ''ஓஜா-பாலி'' என்ற முறையில் ஒரு தலைவர் பாட, தொண்டர்கள் தொடர்ந்து பாடும் வகையில் அமைந்துள்ள இந்த கீத இராமாயணத்திலும், சீதை மண் டோதரியின் மகளேயாவாள்.

சங்கதாஸ கனியினுடைய வாசுதேவஹிந்தி இராமா யணத்தின்படியும் மயன்மகளான மண்டோதரியின் முதல் மகள் குடும்ப அழிவுக்குக் காரணமாவாள் என்பதனால் பெற்றோரால் புறந்தள்ளப்படுகிறாள்.[௬௫]

தேவர்களுக்காக வால்மீகி எழுதியதாகக் கருதப்படுவது அத்புத இராமாயணம். மகாலட்சுமியால் மனம் புண்படுத்தப் படுகிற நாரதர் சாபம் கொடுக்க, அதன் விளைவாக பூமியில் பிறக்கும் லட்சுமி, மண்டோதரியைத் தன் தாயாகத் தேர்ந் தெடுக்கிறாள்.

தேவிபாகவதத்தின் இராமோபாக்யானத்திலும் மண்டோதரியின் மகள்தான் சீதை.

தெலுங்கு மொழிப் பகுதிகளில் இருக்கக் கூடிய நாட்டுப் புறப் பாடல்களிலும் இதையொட்டிய தழுவல்கள் உள்ளன.

மகாவிஷ்ணுவை விட்டுப்பிரிந்த மகாலட்சுமி, இலங்கையிலுள்ள தாமரைக் குளத்தில் நுழைந்து ஒரு மலருக்குள் அமர்ந்து விடுகிறாள். அங்கு வருகின்ற இராவணன், அம்மலரைக் கொய்து தன் மனைவிக்காக எடுத்துச் செல்கிறான். மலருக்குள்ளிருந்து அசரீரி ஒன்று கேட்கிறது.

பயந்துபோய் மண்டோதரியிடம் அதைக் கொடுக்க, அவள் உன்னிப்பாகப் பார்த்து உள்ளே ஒரு குழந்தையிருப்பதைக் காண்கிறாள். சோதிடர்களிடம் கலந்தாலோசிக்கும் மண்டோதரி. அக் குழந்தையால் கேடுவரும் என்பதைத் தெரிந்துகொண்டு வீடணனை அழைக்கிறாள்.

அக்குழந்தை ஆதிலட்சுமியின் அவதாரம், இராமனை மணக்கப் போகின்றவள் என்பதைத் தன் மைத்துனனிடம் கூறிப் பெட்டியில் வைத்துப்பிள்ளையைப் புறமிடச் சொல்கிறாள்.

சீதையின் பிறப்பை இப்படிச் செப்புகிறது ''சாந்த கோவிந்த நாமமுலு'' என்னும் பாடல்.

சீதையை இராவணனின் மகள் என்று விவரிக்கிற ஒரு கோட்பாடு. வால்மீகியின் ஒரு சாயலிலிருந்து பெறப்பட்டிருக்க வேண்டும். கிருதயுகத்தில், குஸத்வஜன் மகளான வேதவதியிடம் முறை கேடாக நடந்து கொள்கிறான் இராவணன். அவள் நெருப்பில் குதித்து இறக்கிறாள்.

**''ஏஷா வேதவதி நாம பூர்வமஸித் கிருதயுகே:**
**த்ரேதாயுகமனுப்ரப்யா வதார்த்தம் தஸ்ய ராக்ஷஸஸ:**
**உத்பன்ன மைதிலாகுல ஜனகஸ்ய மஹாத்மன:''**[66]

மீண்டும் பிறந்து இராவணனைக் கொல்வதாகச் சூளுரைத்த வேதவதி, திரேதாயுகத்தில் சீதையாகப் பிறந்தாள் என்பார் வால்மீகி; ஆனால் எப்படியமைந்தது சீதையின் தோற்றம் என்று வால்மீகி விரித்துச் சொல்லவில்லை.[எ]

ஊகத்திற்கு இடம் கொடுக்கிற இந்த இடம், பலருடைய எண்ணங்களைத் தூண்டியிருக்க வேண்டும். சீதையை பூமியில் தோற்றுவித்தால் யாருடைய மகளாகப் பிறப்பிக்கலாம் என்று யோசிக்கிறார்கள் - யாருக்கு அந்தத் தகுதியிருக்க முடியும்? யார் அப்பேறு பெறமுடியும்? மண்டோதரியை விட மேன்மை மிக்கவள் யாருமிருக்க முடியாது என்பதனால், சீதை மண்டோதரி மகளானாள் போலும்![ஈ]

இன்னொன்றையும் ஆழ்ந்து கவனிக்க வேண்டும். கணவனுடைய நன்மைக்காக, பெற்ற குழந்தையை விட்டு விடுகிற துணிவும், தியாகமும் மண்டோதரிக்கு மட்டுமே கைக்கூடும் என்றும் இந்த ஆசிரியர்கள் எண்ணியிருக்க வேண்டும். பெற்ற மகளையே காமுறுகிற மனோதத்துவ மீறலை இராவணன் செய்தான் என்றும், அறந்தவறினான் என்றும் கூறவந்த அதே வேளையில், அந்தக் கொடியவனின் மனைவியைக் கொடுமையின் சாயல் படியாதவளாகவும், மேன்மை மிகக் கொண்டவளாகவும் படைப்பதற்குப் படைப் பாளிகள் முயன்றிருக்கிறார்கள்.

மண்டோதரி என்கிற பொறுமைத் தேவதை, காவிய கர்த்தர்களின் சிந்தனைகளை இந்த அளவு சீர்படுத்தியிருக்க வேண்டும் என்றால், சமுதாய மக்களின் மனங்களை அவளின் நினைவு மேம்படுத்தியிருந்தால் மட்டுமே முடியும்.

### மண்டூகமா? மதியா?

''ஃபாலக் ஃபாலம்''[ஐ] என்கிற லாவோஸ் நாட்டு இராமாயணத்தில் மண்டோதரி ''மந்தோ'' என்றே அழைக்கப் படுகிறாள்.

முனிவர் ஒருவர் தவளையொன்றைப் பிடித்து மாயச் சொற்களால் அழகிய பெண்ணாக்க, அதன் மூலம் உருவானவள் மந்தோ என்பதாக ஒரு கிளைக் கதை அங்குள்ளது. மண்டுகம் என்னும் தவளையினின்று தோன்றியவள் மண்டோதரி என்கிற நமது நாட்டுப் புறக்கதைகளோடு ஒத்துப்போகிறது இது!

## ''மண்டோதரி'' என்ற பெயர் எவ்வாறு ஏற்பட்டது?

'மந்த்' என்றால் மெல்ல, மெல்லிய என்னும் பொருட் களிலிருந்து 'மெல்லிய இடைப்பகுதியை உடையவள்' (நுண்ணிடை யாள்) என்பதாக இப் பெயர் தோன்றியுள்ளது - 'மந்தோதரி' (ஆநந்த இராமாயணம் இடை சிறுத்ததனால் மந்தோதரி என்று மகாவிஷ்ணு வால் பெயரிடப் பெற்றனள் எனக் குறிப்பதை கண்டோம்) வடமொழி மற்றும் ஹிந்தி இராமாயணங்களில் ''மந்தோதரி'' என்ற பெயரே வழங்கு கிறது.

இதுவொரு வடமொழிப் பெயர்.

பாலேடு போன்ற மெல்லிய இடையையுடையவள் என்று விளக்கம் கொடுப்பாரும் உளர்.

நாயன்மார்களால் ''வண்டோதரி'' என்ற பெயர் பயன் படுத்தப்படுகிறது. வண்டின் நுண்ணிடை நிகர்த்தவள் என்று கொள்ள இடமுண்டு.

கம்பர், மயன்மகளின் பெயரைச் சுட்டும் ஒரே யொரு இடத்திலும் ''மண்டோதரி'' என்றே சுட்டு கிறார். பல பெயர்களைத் தமிழ் ஒலிவடிவிற்கேற்ப வழங்கும் கம்பர் (எ.கா.: வீடணன், சம்பாதி, சானகி) வண்டோதரி என்று வழங்கவில்லை. எனவே, வண்டோதரி என்பது தமிழ் வடிவம் என்று கொள்ள இடமில்லை.

'மண்டுக்' என்ற சொல் தவளை எனப் பொருள்படும் எனவே, தவளையினின்று தோன்றி யவள் என்பதான கதைகள் பிற்காலக் கற்பனைகளாக இருக்கவேண்டும்.

நேபாள நாட்டின் ஆத்ம இராமாயணத்தில், ஞானத்தின் அடையாளமாகக் காணப்படுகிறாள் மண்டோதரி.

திபெத், லாவோஸ், இந்தோனீசியா மற்றும் மலேசியா இராமாயணக் கதைத் திரட்டுகளில் யாவும் மண்டோதரியின் மகளாகவே சீதை காட்டப்படுகிறாள் என்பதும் இங்கு குறிப்பிடத்தக்கது.

## தூயவன் வில்லும் தொழுத தெய்வம்

இராமனது அம்பினைத் தடுத்து நிறுத்தும் வல்லமை வாலிக்கு இருந்ததைக் கிட்கிந்தையில் கண்ணுறலாம். ஆனால், இராமனது அம்பு தானாக நின்று மரியாதை செலுத்துவது மண் டோதரிக்கு மட்டுமே என்பதாகப் படைக்கிறார் பிரேமானந்தர், என்கிற ஆசிரியர்.

**இராமனின் கணைகள் கனன்று பாய்ந்தன**
**இலங்கைவேந்தன் ஓடினான்**
**கணைகள் துரத்தக்**
**கதறியோடினான்**
**தசமுகங்கள் கொண்டவனால் கணைகளின்**
**திசையைக்காணக் கூட முடியவில்லை.**
**பாவாத்மாவைத் துரத்துகிற யமதூதர்கள்போல்**
**பத்துத் தலையனைத் துரத்தும் புண்ணியக்கணைகள்**
**அத்தாணி மண்டபம், அரச பூந்தோட்டம்,**
**குகை, குறுகிய பரண், மேல்மாடங்கள், மேட்டுச் சந்துகள்,**
**எங்கும் ஓடினான், இடமும் தேடினான்,**
**ஏறிப்பாய்ந்து...**
**இறங்கி மீண்டும்...**
**எழுந்து ஓடி....**
**மூச்சிழுக்க**
**முற்றமுழுதும் வியர்வை நனைக்க**
**''யார் என்னை ஆதரிப்பார்? ஐயகோ!''**

மகனும், மருமகளும்,
செவிலியரும்,
உற்றவராய் நின்ற சுற்றத்தவரும்
பதவி நாட்களில்
பரிவாய் நடந்தவரும்
கதவுகளைக் கடிதுமூடி காற்றாய்ப் பறந்தார்.
சொந்த மக்களும்
சார்ந்த அமைச்சும் சார்புடை நட்பும்
அவனைக் கண்டதும்
முகம் திருப்பி முக்காடிட்டனர்.
கணைகள் மட்டும்
கட்டாயமாய்த் துரத்த...
ஏழுலகும், ஏழுகடலும், தீவாய் நின்ற திட்டுநிலங்களிலும்
எங்கு போகினும்
அணுகித் தொடர்ந்த அந்தக் கணைகள்
இடிந்துபோன இலங்கை வேந்தன்
நல்லமனைவி நின்ற இடம் தனை நாடி...

'காப்பாற்று, மண்டோதரி!'...
அந்த ஆணவக்காரன் அவலமாய் அலறினான்.
..................................................
மண்டோதரியைக் கண்ட மகத்துவக் கணைகள் அவள்
வாயிலிலேயே நின்று வணக்கம் செய்தன.
மெல்ல நிமிர்ந்து மெதுவாய்க் கேட்டாள்:
''மைதிலி கேள்வன் மாபெரும் ஆற்றல்
மண்டினாயா மன்னவனே?''[70]

இராவணனைத் துரத்திய இராகவன் கணைகள், யாருக்கும் கட்டுப்படாமல் மண்டோதரிக்குக் கட்டுப்பட்டதாக இந்த எழில்மிகு காட்சியில் எடுத்துக்கூறுகிறார், யுத்தகாண்டத்தை மட்டுமே ''இராம-யக்ஞம்'' என்னும் குஜராத்தி மொழி நூலாக்கித் தருகிற பிரேமானந்தர்.

''இராவண-மண்டோதரி சம்வாத்''[71] என்று ஸ்ரீதர், லாவண்ய முனி, ஷாமல் ஆகியோர் குஜராத்தியில் பற்பல விதமாக மண்டோதரியின் பெருமைகளைப் பேசியுள்ளனர். இருப்பினும் பிரேமானந்தரின் படைப்பு அவற்றிலெல்லாம் பண்பு சிறக்கிறது.

மெய்மை தெரிந்து, மேன்மை புரிந்து, வருகின்ற விளைவு களின் பிரிவுகளையும் தீர்க்கமாக உணர்ந்து, தன் கண்ணியம் குறையாது சோகத்தை எதிர்கொள்ளச் சொல்லொணாத் துணிவுடன் நிற்கும் மண்டோதரியைக் கண்டு வரதனின் கணைகளே வணங்கின என்றால், அந்த வித்தகியின் திறம் கண்டு கை பிசைகிறான் காகுத்தன் என்பதுதானே பொருள். எவனை அழிப்பதற்காக அவதாரம் எடுத்தானோ, அவனை அழிக்கத் தயங்குவது மண்டோதரி அவன் மனைவியென்பதாலன்றோ? மண்டோதரிக்காகத் தன் அவதார நோக்கத்தை மாற்றிக் கொள்ளக்கூடக் கடல்வண்ணன் தயாராகவிருக்கிறான் என்றால் மண்டோதரியின் மகிமையை என்னென்பது!

## இ. மண்டோதரி என்னும் மாண்புறு மங்கை

### உயிரும் நீங்கினாள்

இராவணன் இறந்து கிடக்கும் போர்க்களத்தில் வந்து அவனுடல்மீது விழுந்து அழுகிற மண்டோதரி என்ன ஆகிறாள்?

துளஸீயின் மானஸத்திலும், வால்மீகியின் ஆதி காவியத்திலும், அத்யாத்ம இராமாயணத்திலும், வீடணன் சமாதானப்படுத்த மண்டோதரியும் மற்றைய அரக்க மாதர்களும் நகருக்குள் மீண்டும் சென்றுவிடுகிறார்கள்.[72]

ஆனால், கம்ப காப்பியத்தில் மண்டோதரி என்ன செய்கிறாள்?

கணவனின் உடலைத் தழுவுகிறாள்.

ஏக்கமுடன் அவன் முகம் பார்க்கிறாள்.

அவள் பார்த்துப் பார்த்துப் பெருமிதமுடன் கண்ட அவனின் பெருந்தோளை, அவனின் பரந்த மார்பை, அளவிலா அன்புடன் ஆரத் தழுவுகிறாள்.

அவனைச் செல்லமாக அழைக்கிறாள்.

உயிர்ப்புடன் அழைப்பவள், அவன் மீதே விழுந்து ஆவி பிரிகிறாள்.

**ஏங்கி எழுந்து, அவன்**
**பொன்தழைத்த பொருஅரு மார்பினைத்**
**தன் தழைக் கைகளால் தழுவி, தனி**
**நின்று அழைத்து உயிர்த்தாள், உயிர் நீங்கினாள்[73]**

என்பார் கம்பர்.

கணவனுடன் மனைவி தனித்திருக்கும் தருணங்களில், அன்பின் மிகுதியால் எத்தகு பெயர் சொல்லித்தன் மணாளனை அழைப்பாளோ. அத்தகு பெயரால் இலங்கைவேந்தனை அழைத்து அவனுடல்மீது விழுந்து தானும் உயிர் நீங்கினாளாம் மண்டோதரி.

கொண்டவன் உயிரோடிருக்கும்போது கொண்டிருக்க வேண்டிய உரிமையை, அவன் உயிரும் உணர்வும் நீங்கிக் கிடக்குங்கால் கொள்ளவேண்டிய பரிதாபகரமானச் சூழல்! அவள் அன்போடு நெருங்கி ஆயிரம் பேசியபோதெல்லாம் ஆத்திரம் மிக்கு அச்சுறுத்திய அவன், இன்று ஆதரவின்றி வீழ்ந்து கிடக்கையில், அவனை அணைத்துக் கொள்ளவேண்டிய அவலநிலையில் அவள்!

வாழ்வில் அவனோடு சேர்ந்து, இணைந்து அவளால் வாழ முடிந்ததா?

மிகப்பெரிய கேள்விக்குறிதான்!

வாழ்வில் அவர்களை எது பிரித்தது?

மணக்கயிறு இணைத்திருந்தாலும், பட்டமகிஷி என்னும் பதவியிருந்தாலும், மனமும் மகிழ்வும் இணையாத வாழ்வு தானே அவளுடைய வாழ்வு?

எது பிரித்தது?

இராவணனின் ஆணவமா? அகங்காரமா? பெண் மோகமா? பதவி மதர்ப்பா? தவ வலிமையா? எது? உன்னிப்பாகப் பார்த்தால், இவையாவுமே அவளிடமிருந்து இராவணனை அகற்றிவைத்த அவலங்கள் ஆகும்.

'மயன் மகள்' என்கிற அவளின் அந்தஸ்து, அங்கீகாரத்தைக் கொடுத்ததே தவிர, அவளுக்கொரு அந்தரங்கத்தைத் தந்ததாகத் தெரியவில்லை. 'இராவணன் மனைவி' என்கிற நிலை, அவளுக்குப் பிறரிடமிருந்து மதிப்பை, ஒரு சிலகாலங்களில் பெற்றுக் கொடுத்திருக்கலாம். ஆனால், அவளுக்கான சுயமதிப்பையோ, கணவனின் அன்பு அணைப்பையோ வளர்த்துக் கொடுத்ததாகத் தெரியவில்லை.

காதலின் சிலிர்ப்பில் அவனோடு சேர முடியாத அவள், கடைசி உயிர்ப்பில் சேருகிறாள் போலும்; அதுதான்.. தனி நின்றழைத்து உயிர்த்தாள்; உயிர் நீங்கினாள்!

**'தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவந்தானே**
**தமருகந்த தெப்பேர் மற்றுஅப்பேர்-தமருகந்தது**
**எவ்வண்ணம் சிந்தித்து இமையாதிருப்பரே**
**அவ்வண்ணம்'**[74]

என்று ஆண்டவனுக்கு, ஆழியானுக்குச் சொல்வார் பொய்கை யாழ்வார். எண்ணிப் பார்க்கின், மண்டோதரிக்கும் இது சாலப்பொருந்தும். தான் உகந்த இராவணன் உருவை, தான் உகந்த அவன் பெயரை, தான் உகந்த அவன் வடிவை, போர்க்களத்தே வாழ்நாளும், வரபலமும், பெருந்தவமும்,

புயவலியும் இழந்து வீழ்ந்து கிடக்கும் வண்ணத்திலேயே திருமேனியாய், தனிப்பெயராய், பெருவடிவாய்க்கண்டு அவனுடன் இரண்டறக் கலக்கிறாள் இலங்கைத் தலைவி. கணவனுடன் உயிர் நீங்கிய அத்தலைமகளின் கற்பினுக்கு உலகமே வணக்கம் செய்ததாம். எப்படித் தெரியுமா?

**வான மங்கையர் விஞ்சையர், மற்றும்அத்**
**தான மங்கையரும், தவப் பாலவர்,**
**ஆன மங்கையரும், அருங் கற்புடை**
**மான மங்கையர் தாமும் வழுத்தினார்[75]**

## திருவாசகம் போற்றும் திறம்

வாழ்வில் செல்வம் வரும்; சுகம் வரும்; சுற்றம் வரும்; போகம் வரும்; பற்று வரும்; மங்கையர் உறவு வரும் - இவற்றின் எல்லைகளை உணராது இவற்றையே தொல்லைகளாக மாற்றிக்கொண்டால், அது எத்தனை பெரியவனையும் பாதாளத்தில் தள்ளிவிடும்.

''மாடும் சுற்றமும் மற்றுள போகமும் மற்றையர் தம்மோடும் கூடி அங்கு உள குணங்களால் ஏறுண்டு குலாவியேதிரிய''[76] என்பாரே மாணிக்கவாசகர். அது போன்று தள்ள வேண்டியவற்றையே கொண்டுத் தள்ளாடிச் சரிந்தவன் இராவணன்.

''உற்றாரை யான்வேண்டேன்; ஊர்வேண்டேன்; பேர்வேண்டேன்; கற்றாரை யான் வேண்டேன்; கற்பனவும் இனிஅமையும்'' என்று பற்றற்று நின்று, குற்றாலத்து அமர்ந்து உறையும் கூத்தனின் குரை கழலைமட்டும் கசிந்துருகிக் கேட்ட மணிவாசகப்பெருமான், தென்பாண்டி நாடனாம் தில்லையுட் கூத்தனாம் எந்நாட்டவர்க்கும் இறைவனாம் மெய்ப்பொருளாம் சிவப் பரம்பொருளைக் கூவச் சொல்லிக் குயிலை அழைத்தார். பெருந்துறை பிரானின் பெருமையைப் பாட அழைத்தார்; அந்தப் பெருந்துறை பிரானுக்கு எது பெருமை தெரியுமா?

மாணிக்கவாசகர் மொழிந்தார்:- ''அவன் மண்டோதரிக்கு அருளியவன்!''

ஒரு வாசகத்துக்கும் உருகாதாரைக்கூடத் தன்னுடைய திருவாசகத்திற்கு உருகவைத்த மணிவாசகரையே உருக வைத்தவள் மண்டோதரி.

**ஏர்தரும் ஏழுலகேத்த எவ்வுருவும் தன்னுருவாய்**
**ஆர்கலிசூழ் தென்னிலங்கை அழகமர் வண்டோதரிக்குப்**
**பேர்அருள் இன்பம் அளித்த பெருந்துறைமேய பிரானைச்**
**சீரியவாயாற்குயிலே! தென் பாண்டி நாடனைக் கூவாய்!**[77]

என்பது மணிவாசகப் பெருமானின் குயிற்பத்து.

தெளிவோடு தெய்வபக்தியும் மிக்கவள் மண்டோதரி என்பதற்கு, ஞானவடிவாகி ஞான சொரூபத்தோடு இணைந்த மணிவாசகர் சாட்சி சொல்கிறார்.

இந்த இடத்தில், அத்யாத்ம இராமாயணத்தின் அழகுக் காட்சி ஒன்றை எண்ணிடத் தோன்றுகிறது. இந்திரசித்தன் இறந்த பின்னால், தன்னுடைய இறுதிப்போரைத் தொடங்குவதற்கு முன், நெருப்புயக்ஞம் செய்கிறானல்லவா இராவணன். அந்த நெருப்பு யக்ஞத்தைக் கலைக்க, மண்டோதரியின் சிரம்பற்றி யிழுக்கிறானல்லவா அங்கதன். அதைத் தொடர்ந்து மண்டோதரி இராவணனிடம் பேசுகிறாள். வந்திருக்கும் இராமன், முன்னிருந்த யுகங்களில் என்னென்ன அவதாரங்கள் எடுத்தான் என்பதை, வைவசுவத மனுவைக்காக்க மீனமாய், பொன்மலை தாங்கிய ஆமையாய், உலகம் உந்நிய வராகமாய், பிரக லாதனுக்காக நரசிம்மமாய், நாராயணன் நல்லவதாரங்கள் நல்கியதை, இப்போது தன் கணவனை, குழந்தைகளை, குலத்தை மூலநாசம் பெற முடித்திடத்தான் கோதண்டராமனாய் கோமளத்தான் வந்துள்ளான் என்பதை, இந்த நேரத்திலாவது சீதையை விட்டுவிட்டால் சீர்மை கிட்டும் என்பதை, கானகம் சென்று தவம் செய்யலாம் என்பதை, படிப்படியாகச் சொல்கிறாள்.[78]

அவற்றையெல்லாம் கேட்டுவிட்டு இராவணன் மீண்டும் உறைக்கிறான்; ''என் தம்பியும், பிள்ளைகளும், உற்றாரும் உறவினரும் இறந்து பட்டபின் நான் மட்டும் கானகம் சென்று தவம் செய்து பிழைத்துக் கொள்வது நியாயமா? ஸ்ரீமகா விஷ்ணுதான் ரகுகுலத் தோன்றலாய்த் தோன்றியுள்ளான் என்பது தெரிந்துதானே நான் சீதையை அபகரித்து வந்தேன். இராகவன் அம்பால் நற்கதி அடைய இதனினும் ஒரு நல்லுபாயம் உண்டோ, என் அன்பே?''

மண்டோதரியின் மகத்துவம், திருக்கோளூர்ப் பெண் பிள்ளைக்கும் தெரிந்திருந்தது போலும். அதுதான் அவள் உரைத்தாளாம்:-

**''அந்தரங்கம் சொன்னேனோ திரிசடையைப் போலே**
**அவன் தெய்வம் என்றேனோ மண்டோதரியைப் போலே''**[79]

**மங்கல மங்கை**

இராவணனை, விந்திய மலையென்றும் மேருமலை யென்றும் சிறப்பிப்பது வழக்கம். புவியியல் படிவுகளின் படியும், அறிவியல்படியும், விந்தியமும் மேருவும் இன்று உருவில் சிறுத்து வலுவில் குறுகி, இதோ இவைதாம், இவை யாகத்தாம் இருக்க முடியும், என்று ஏதோவொரு பொம்மை அடையாளம் மட்டுமே காட்டப் பெறுகின்றன.

இராவணன் விந்தியம் என்றால், மண்டோதரியை என்னென்பது?

எழுத்தாளர் ஆர்.கே. நாராயணனைப் பொறுத்தவரை, இராவணன் தன் வாழ்வில் செய்திருக்கக்கூடிய ஒரே நல்ல செயல், மண்டோதரியை மணந்ததுதான்![80]

உலகப்புகழ் பெற்ற ஓவியம் மோனாலிஸா.[81] ஒப்புமையற்ற எழில்மிக்க புன்னகை, மோனாலிஸாவின் புன்னகை என்று கூறுவதுண்டு. மோனாலிஸாப் புன்னகை, தன் காதலிக்கு இருக்க

வேண்டுமென விழையும் காதலர்கள் பலருண்டு. ஆயின், உற்றுநோக்கிடின், அந்த மோனாலிஸாவின் முறுவலில் மகிழ்ச்சியைவிட மெலிதான சோகம் இழையோடுவதைக் காணலாம். தன்னுள்ளத்தின் சோகத்தை மறைத்துக்கொண்டு, அகத்தையே அழகுத்திரையாக்கிப் புறவுலகிற்கு ஒரு புன் முறுவலைக் காட்டும் பெண்மையின் சோகத்தை, மண்டோ தரியின் முகத்தை நம் மனத்திரையில் விரிக்க முயலும்போதும் சந்திக்க முடிகின்றது.

இராவணன் விந்தியமென்றால், மண்டோதரி என்ன? விந்தியம் உயரம் குன்றலாம்; மலை மடுவாகலாம்.

எத்தனை எத்தனைப் புதுமைகளும் நவீனங்களும் கலந்தாலும், இந்த மண்ணின் மங்கலம் காக்கும் மஞ்சளன்றோ மண்டோதரி!

### பற்றும் துறந்த பெண்மை

**''ததா பரமஹம்ஸாநாம் முனிநாம் அமலாத்மநாம்**
**பக்தி யோக விதாநார்த்தம் கதம் பஸ்யேம ஹி ஸ்திரியா!''[82]**

என்று குந்திதேவி ஸ்ரீகிருஷ்ணனிடம் கேட்டதாக ஸ்ரீமத் பாகவதம் காட்டும். பரமஹம்ஸர்களாகவும், முனிவர்களாகவும், மனம் தூயவர்களாகவும் உள்ளவர்களுக்கும் பக்தி சிறந்த வர்களுக்குமே முழுமையாகப் புலராத பரம்பொருளைப் பெண்கள் எப்படி மொத்தமாய் முழுமையாய்ப் புரியமுடியும்? என்பதான ஐயம் குந்திதேவிக்கு எழுகிறதாம். பெண்மையின் கள்ளமற்ற உள்ளத்திற்குக் கட்டாயம் புரிபடும் கடவுள் தன்மை என்பதைச் சொல்லாமல் சொல்கிற மறைமுகச் சந்தேகம் அது!

***யதா யதாஹி தர்மஸ்ய க்ளானிர் பவதி பாரத அப்யுத்தாநம்***
***அதர்மஸ்ய ததாத்மாநம் ஸ்ருஜாம்யஹம்![83]***

எப்போதெல்லாம் தர்மநெறிகள் குறைந்து அதர்மங்கள் அதிகப்படுகின்றனவோ, அப்போதெல்லாம் இறைமை இறங்கி

வரும் என்பதற்கொப்ப, இராவணனின் ஆளுகையில் அதர்மங்கள் அதிகரித்து தர்மங்கள் குறைந்தவுடன், இறைமை இராமன் வடிவில் இலங்கைக்குள் நுழைந்தது. இதனைத் தெளிவாக உணர்ந்து கொண்டாள் மண்டோதரி.

**அதா விஸ்வேஸா விஸ்வாத்மன்**
**விஸ்வமூர்த்தி ஸ்வகேஸி மே**
**ஸ்நேஹ பாசம் இமம் சிந்த்தி**
**அர்தம் பாண்டுக விருஷ்னிகக[4]**

என்று மீண்டும் கேட்பாள் குந்தி. பாண்டு குலத்தினின்றும் விருஷ்னி குலத்தினின்றும் தனக்குள்ள பந்தபாசத்தை நீக்கிவிடும்படிக் கோருகிறாள். பந்த பாசமும் பற்றும் நீங்கியவுடன் இறைவன் மீதான பக்தியும் சிந்தையும் கூடும் என்பதாகக் குந்திதேவியின் சித்தாந்தம்.

மண்டோதரியை இப்போது, இந்தப் பின்புலத்தில் எண்ணிப்பார்க்க வேண்டும்.

குடும்பத்தின் மீதும் குலத்தின்மீதும் பற்றோ பாசமோ வைத்திருந்தாளா மண்டோதரி?

இராவணனின் குணத்தையும் செயல்களையும் பார்த்தால், மண்டோதரியின் பாசமும் பற்றும் முன்னரே இறுகியிருந்திருக்க வேண்டும்.

இராவணனின் கொடுஞ்செயலால் மண்டோதரி பெற்ற மகன் அக்ககுமாரன், அனுமனால் அழிக்கப்படுகிறான். மகனுடைய மரணச் செய்திகேட்டுக் கணவனின் காலடியில் வந்து வீழ்ந்து கதறுகிறாள் அந்தத்தாய். அவளின் ஓலம் நம் காதில் விழுகின்றது. அவளின் மனம் துடித்திருக்க வேண்டும் என்பது புரிகின்றதே தவிர, அவள் என்ன எண்ணினாள் என்பதற்கான தடயம் இல்லை. ஒரு மகன் இறந்தாலும், இன்னொரு மகனும் கணவனும் இருக்கிறார்கள் என்கிற தைரியம் அவளுக்கு அப்போது இருந்திருக்க வேண்டும்.

இராவணனின் தீச்செயல் தொடரத் தொடர, மண் டோதரியின் மனம் சிறிது சிறிதாகச் சிதைவுபடுகிறது.

அடுத்து, மேகநாதன் மறைகிறான். அதுவரை நிலைமை கருதியும் சூழல் கருதியும் கட்டுப்படுத்தி வைத்திருந்த தாய்மையின் உணர்வுகள் கட்டுடைத்துப் பொங்குகின்றன. இலங்கையும் அரக்கர்குலமும் சிக்குண்டு கிடக்கும் சோகம் முழுமையாய் மனதைக் கவ்வ, பொங்கிப் பாய்கிறது அவளின் அழுகை. இது நாள் வரைக் கணவனை வெளிப்படையாகவோ பிறர் எதிரிலோ கடிந்து பேசியிராத அவள், உணர்ச்சி வேகத்தில், வரவிருக்கும் தீமையை முன்மொழிகிறாள்.

மகனின் பிள்ளைமை விளையாட்டை நினைந்து நினைந்து புலம்புகிறவரை அவளின் தாய்மை முன்னிற்கிறது. பாலனாய்த் தன் மகனை நினைக்கிற தாயின் கண்களில், பயனின்றிக் கிடக்கும் அவனின் இளமைப் பேரெழில் தெரிகிறது. உடனே அவன் இளமையின் சிறப்பால் பெற்ற மனைவியர் நினைவும் வருகிறது. அவன் தோளின் அழகு, ஆற்றலை நினைவு படுத்துகிறது; அவன் இந்திரனை வென்றவன் என்பது சிந்தையில் உதிக்கிறது. மாமேருவாய் நின்றவன் மனிதரால் வீழ்ந்தான் என்பது உறைக்கிறது. தொடர்ந்து, அதன் காரணங்கள், இராவணன் கடுஞ்செயல் யாவும் உணர்வில் நெருடுகின்றன. இவை நினைவில் தட்டத்தட்ட, உள்ளிருந்த மனைவி எட்டிப் பார்க்கிறாள். 'ஐயகோ! கணவனின் நிலை யென்ன?' என்று கதறுகிறாள்.

தாய், மனைவி ஆகிய இரண்டு நிலைகளும் சிந்தனையைச் சுழற்ற, இன்னமும் ஆழத்தில், அகத்தில் நிறைந்து கிடக்கும் நியாயவுணர்வும் மெதுவாய் எட்டிப் பார்க்கிறது.

இலங்கேஸ்வரன் என்கிற நிருதர்வேந்தனின் பட்டமகிஷி வெளிப்படுகிறாள்.

'மகன் இறந்தான்' என்கிற புத்திரசோகத்தை, 'இலங்கை வேந்தனின் துணை அழிந்து விட்டதே' என்கிற அரசசோகம் விஞ்சுகிறது.

அவளின் அழுகை நம் காதில்படப்பட, அது தாய்மையின் ஓலமாகத் தொடங்கி, மனைவியின் கதறலாகத் தொடர்ந்து, முடிவில் அரசியின் அவலமாக வெடித்துச் சிதறுவதை உணர முடியும்.

படிப்படியான இந்த மனமாற்றங்களில், மண்டோதரியின் பற்றும் பாசமும் அறுந்து, நியாயத்தின் பதைப்பும் நேர்மையின் பரிதவிப்பும் மட்டுமே மிச்சமிருப்பதையும் கண்ணுறலாம்.

''நாளை இலங்கை வேந்தன் இத்தகையனன்றோ?'' என்கிற வேதனை வெடிப்பில், அந்த ''நாளை'' வராமலே இருந்து விடலாகாதா என்கிற நப்பாசை நிறையவேவுள்ளது; சீதையை இனியாகிலும் விட்டுவிட்டால், அந்த நாளை யென்பது நன்னாள் ஆகிடுமே என்கிற அவாவுள்ளது; ''அஞ்சினேன், அஞ்சினேன்'' என்கிற அழுகையில், அந்த அச்சம் பொய்யாகி விடக்கூடாதா என்கிற ஆசையுமல்லவா உள்ளது!

தன் மரணத்திற்குப் பிறகாவது சீதையை விட்டுவிட்டு மனிதரைச் சரண்புகச் சொல்லி, இந்திரசித்தன் தந்தையிடம் சொல்லிப் போனது, 'தாய்' என்ற முறையிலும், 'அரசி' என்ற முறையிலும் ஏற்கெனவே மண்டோதரிக்குத் தெரிந்துதான் இருக்கவேண்டும். அதை லேசாகக் கணவனுக்கு நினைவு படுத்துகிற செயல்தான் 'நாளை இந்நிலை' என்கிற அவளின் அவலமொழி.

அக்கன் மாய்ந்தான்; அதிகாயன் பட்டான்; கும்பகருணன் கெட்டான்; படைத்தலைவரும் மூலபலப் படையும் முடிந்தனர். இருந்த நம்பிக்கையாம் இந்திரசித்தனும் இறந்தான்; எஞ்சி நிற்பவன் இலங்கேஸ்வரன் ஒருவனே என்னும் நிலையில்

பற்றற்றுப் போன பக்குவ நிலையும், வருவது உணரும் தீர்க்கதரிசனமும் அவளிடம் கைவரப் பெற்றுவிடுகின்றன. சீதையின் கற்பும் தசரத குமாரர்களின் திறலும் வெல்லும் என்பதை தெற்றெனத் தெரிந்து விடுகிறாள்.

## முற்றும் தெளிந்த மேன்மை

போர்க்களத்தே இராவணன் வீழ்த்தப்பட்டபோது, அவனிடம் சீதைமீது கொண்ட காமமும் காதலும் இல்லை.

வீழ்ந்த அவனின் பத்து முகங்களும், செயல் அடங்க, மயல் அடங்க, அவன் வாழ்ந்த நாளைக் காட்டிலும் மும்மடங்கு பொலிந்த முகங்களாகவே இருந்தன.

அவ்வளவு ஏன்? இறுதிப் போருக்குப் புறப்படுமுன்பே அவனிடம் சீதையை மனச்சிறையில் கொண்ட மையல் இல்லை. ''ஒன்று, சீதை மங்கலம் இழக்கவேண்டும்; அல்லது மயன்மகள் மங்கலமிழந்து உழல வேண்டும். இன்று இரண்டில் ஒன்று ஆக்குவென்'' என்றுதான் சபதமிட்டுப் புறப்படுகிறான்.

எப்படி இது ஏற்பட்டது? சீதையைப் புறக்கணிக்கும் மாற்றம் எப்படி ஏற்பட்டது?

மேகநாதன் இறந்தவுடன், ''மகனை இந்நிலைக்கு ஆளாக்கி விட்டோமே!'' என்கிற சுயபச்சாதாபம்தான் இராவணனிடம் மிகுகின்றது.

ஆனால், அந்த சுயபச்சாதாபம் எப்படிக் காமத்தையும், காதலையும் அழித்தது?

முன்னதாக அதிகாயன் இறந்தபோது, அதிகாயனின் தாய் தானியமாலினி, கணவன் கால்பற்றிக் கதறுகிறாள். உதிரம் கொட்டும் கண்களோடு ஓடி வந்தவள், 'இந்திரனுக்கும் தோற்காத மகனைப் பெற்றேன். இன்று அவனை மனிதனின் வில்லுக்கு உணவாகத் தந்தேன்; ஐயோ! வீரம் மீட்டாயோ?

தோள் ஆற்றல் மெலிந்தாயோ? என் கண்மணியைக் காட்டாயோ?' என்று கேட்கிறாள். 'காமத்தைப் பெரும் பிடிப்பாய்ப் பற்றிக் கொண்டவனே, இனியும் நீ பிழைப்பாயா? சீதையால் வருவ இன்னும் சிலவேயோ? கும்பகர்ணனைக் கொல்வித்து, அதிகாயனைக் கொல்வித்து, நீ மட்டும் அரசு ஆள்கிறாயா?' என்று கடுமையான சொற்களால் இலங்கை வேந்தனைக் கலங்கடிக்கிறாள்.[85]

தன் சோகத்தில் சுற்றுமுற்றும் பார்த்துவிட்டுச் சூடாக வேயும் ஒரு சொல் சொல்லிவிடுகிறாள். எல்லோரும் இறந்த பின்னால், இனி மீதமிருந்து மண்டோதரியின் மகனான மேகநாதன் என்பதை நினைப்பிக்கிறாள்.

**மக்கள் இனி நின்று உளான், மண்டோதரி மகனே;**
**திக்கு விசயம், இனி, ஒருகால் செய்யாயோ?**[86]

இராவணன் தோள்களைப் பற்றியுலுக்கி, அவன் உணர்வுகளை உலைத்து, அறிவை அடித்துக்கேட்கும் தானியமாலினியின் இந்தக் கோபக் கதறலோடு ஒப்பிடும்போது, மேகநாதன் இறப்பின்போது அழும் மண்டோதரியின் கதறலில் குத்தலும் கொந்தளிப்பும் குறைவாகவேயுள்ளன.

தானியமாலினி தட்டிக்கேட்பதுபோல் மண்டோதரி கேட்கவில்லை. அதுபோல் மிரட்டவில்லை, விரட்டவில்லை.

ஆனாலும், மண்டோதரியின் சோகத்தில், மிகப்பெரும் மடைமாற்றம் ஒன்று நிகழ்ந்து விடுகிறது.

தானியமாலினி கதறலால் குற்றவுணர்வுக்குள் தள்ளப் படுகிறான் இராவணன். இந்திரசித்தன் மரணத்தைக் கண்டு அவனுடலைத் தாங்கிவரும்போதும் இந்தக் குற்றவுணர்வு அப்படியே இருக்கிறது; கூடவே தம்பியையும், மகன்களையும் 'இப்படி பலி வாங்கிவிட்டோமே' என்கிற சுயபச்சாதாபமும் சேர்ந்து கொள்கிறது. 'நினைத்ததை நடத்திய தன் சொந்த பராக்கிரமம் சோர்ந்து விட்டதே!' என்கிற அகங்காரக் குழப்பமும்

இருக்கிறது. ஆனால் இவற்றோடும்கூட, சீதைமீது கொண்ட மையலும் அப்படியே இருக்கிறது.

**சினத்தொடும் கொற்றம் முற்றி இந்திரன் செல்வம்மேவி**
**நினைத்தது முடித்து நின்றேன், நேரிழை ஒருத்தி நீரால்,**
**எனக்கு நீ செயத்தக்க கடனெலாம், ஏங்கி ஏங்கி**
**உனக்கு நான் செய்வதானேன்![87]**

என்று அழும்போது ஆணவச்சிதைவு தெரிகிறதேயன்றியும், காதல் அழிவு தெரியவில்லை.

ஆனால்...

மண்டோதரி வந்து மகனைப்பார்த்து அழுது, இந்தச் சீதையால் நாளை இராவணனுக்கும் இந்நிலைமையன்றோ! என்று கூக்குரலிட்டவுடன்... அதுவரை மண்டிக் கிடந்த காதல், உருத்தெரியாமல் குன்றிவிடுகிறது. 'இத்துயர் நமர்கட்கு எல்லாம் சீதையால் புகுந்தது' என்று வாளெடுத்து அவளை வெட்டப் புறப்பட்டு விடுகிறான் அரக்கர் கோமான். மகோதரன் தடுக்க அவன் சினம் தணிகிறது. காதலாக அதுவரை இருந்தது, கடுஞ்சினமாக அப்போதைக்கப்போதே மாறியது எதனால்? மண்டோதரி யின் சொற்கள் செய்த சீரமைப்பு! அவள் குத்தவில்லை; கொந்தளிக்கவில்லை; குறைகூறவில்லை; குற்றம் சொல்லவில்லை; ஆனால், 'நாளை இதுதானே நிலை' என்று அவள் சொன்ன ஒரு சொல்லிலேயே, தான் அதுவரை செய்த அத்தனை தவறும் அழிய, கொண்ட கூடாக் காதல் மாய, மனமாற்றம் செய்யப்பட்டு விடுகிறான் இராவணன்.

மயிலுடைச் சாயலாளை மனச்சிறையில் கரந்த காதல் வெயில்முன் பனியாய் உருகியோடிட, அம்புதேடியும் அகப் படாமல்,[88] மரணத்தில் முகம் பொலிய மாண்டு போயினன்.

மண்டோதரியின் நாகரிகச் சொற்கள்தாம் அவனை மடைமாற்றம் செய்தவை என்பதில் எள்ளளவும் ஐயமிருக்க முடியாது.

வாழ்ந்த நாட்களில் திருத்தமுடியாத கணவனை, வாழ்வின் விளிம்பில் நிற்கும்போது வந்த அவளின் வார்த்தைகள் மாற்றி விடுகின்றன.

மற்றைய இராமாயணங்களுக்கும் கம்பனின் இராமாவதாரத்திற்கும் ஒரு வேறுபாடு உண்டு. வான்மீகம் உட்பட்ட பற்பல இராமாயணங்களில், கணவனைத் திருத்த பற்பல தருணங்களில் பல்வேறு முயற்சிகள் மேற்கொண்டு இங்கிதம் உரைப்பவளாகக் காட்டப்படுகிறாள் மண்டோதரி. ஆயின், கம்பனில், இராவணனுக்கு இதம் உரைக்கும் மண்டோதரியைக் காணமுடியவில்லை; மாறாக, மிகுந்த துயர்மிகு கட்டங்களில், திருப்புமுனைகளில், சோகச் சித்திரமாக மட்டுமே அவளைக் காண்கிறோம். கணவனை மாற்ற முயலும் மனைவிதான், இயற்கை நியதி. ஆயின், மண்டோதரி இதைப் பலமுறை முயன்று, இறுதியில் இறுகிப்போயிருந்திருக்க வேண்டும் என்று எண்ணுகிற கம்பர், பக்குவநிலையில், துயரங்களைத் தனக்குள்ளேயே புதைத்துக்கொண்டு, உறுதிப்பாட்டுடன் நிற்கிற உத்தமப் பெண்மையை மண்டோதரி வாயிலாக நமக்குக் காட்டுகிறார். சராசரி நிலைகளிலிருந்து உயர்ந்து, வாழ்வின் அக்கினி பிரவேசத்தில் புடம் போடப்பட்ட கற்பின் கனலியாக அவள் மிளிர்கிறாள்.

## அழகமர் அணங்கு

ஆதிகாவியத்தில் அழகுக்குச் சிறந்தவளாக மண்டோதரி படைக்கப்பட்டுள்ளாள்.

நுணுகிப்புகுந்து அவளின் பன்முக ஞானத்தை நெருங்கிப் பார்க்கும்போதுதான், வெறும் உருவ அழகு மட்டுமல்லாது, குணஅழகு, சொல்லழகு, சிந்தை அழகு என்று அவள் அழகுகளின் உறைவிடமாகவே விளங்குவது புரியும். அவளுக்கு அழகுகள் அணிகலன்களா? அவளே அழகுகளின் அணிகலனா? அவள்தானே ''அழகமர் வண்டோதரி!''.



குறிப்புகள் :

1. இந்திய மரபில், தினந்தோறும் காலையில், பெண்களால் வழிபடப்பட வேண்டிய ஐந்து பெண்கள். அகலிகை, தாரை, மண்டோதரி, திரௌபதி, குந்தி ஆகிய ஐவர். குந்திக்கு பதிலாகச் சீதை என்று கூறுவாரும் உண்டு. எப்படியாயினும், நிலம், நீர்அ நெருப்பு, காற்று, ஆகாயம் என்ற கணக்கில் குந்தி அல்லது சீதை, அகலிகை, திரௌபதி, தாரை, மண்டோதரி என்று முறை அமையும்.
2. தெற்காசிய இராமாயணங்கள் என்றும் சொல்லலாம்.
3. இராமாவதாரம், யுத்தம், இராவணன் வதை - 235, 236
4. இராவணன், ஸாம வேத இசையில் சிறந்தவனாகச் சித்தரிக்கப்படுகிறான். அவன் பாடியதைக் கேட்டு, கைலாயமும் கைலை நாதரும் உருகினதாக ஐதிகம்.
5. இராமாவதாரம், யுத்தம், இராவணன் வதை - 241
6. இராமாவதாரம், யுத்தம், இராவணன் வதை - 239
7. இராமாவதாரம், பால காண்டம், திரு அவதாரப் படலம் - வசிட்டன் திருமால் அருள்குறித்துச் சிந்திக்கும் கட்டம் - 5 முதல் வகை வரையான பாடல்கள்.
8. இராமாவதாரம், யுத்தம், இராவணன் வதை - 223 (வீடணன் புலம்பல்)
9. இராமாவதாரம், யுத்தம், மீட்சி - 30 முதல் 36 வரை
10. 'மயிலுடை சாயலாளை வஞ்சியா முன்னம், நீண்ட எயிலுடை இலங்கை நாதன், இதயமாம், சிறையில் வைத்தான்'.
11. இராமாவதாரம், யுத்தம், இராவணன் வதை - 237
12. இராமாவதாரம், யுத்தம், இராவணன் வதை - 238
13. இராமாவதாரம், யுத்தம், இராவணன் வதை - 242
14. 'கீண்டான் நிலம்' - நிலத்தொடும் சேர்த்துத் தூக்குதல்
15. அவ்வப்போது, பற்பல பெண்களிடம் வம்புதும்பு செய்தவனாகவே இராவணன் சித்திரிக்கப்படுகிறான்.
16. இராமாவதாரம், சுந்தர, அக்குமாரன் வதை - 42 - 47
17. இராமாவதாரம், சுந்தர, அக்ககுமாரன் வதை - 48
18. மண்டோதரியின் இரண்டு புதல்வர்களில் இளையவன் அக்கன்; மூத்தவன் இந்திரசித்தன். இராவணுடைய மற்றொரு மனைவியான தானியமாலியின் மகன் அதிகாயன்.

19. சுந்தர காண்டத்தில், அனுமன் சீதையைத் தேடும்போது மண்டோதரியைக் காண்டல், அக்கன் மரணம், இந்திரசித்தன் மரணம், இராவணன் மரணம் ஆகிய நான்கு இடங்கள்.
20. இராமவதாரம், சுந்தர, அக்ககுமாரன் வதை - 48
21. இராமாவதாரம், யுத்தம், இராவணன் சோகம் - 44
22. இராமாவதாரம், யுத்தம், இராவணன் சோகம் - 45
23. இராவணன் மகன், பிறந்தவுடன் அழுதான், அழுகை, மேகம் கர்ஜிப்பது போன்று கேட்டது; எனவே, மேகநாதன் என்று பெயரிடப்பட்டான். இந்திரனை வென்றதால், பின்னாட்களில், இந்திரசித்தன் என்னும் காரணப் பெயர் பெற்றான்.
24. இலக்குவனுடைய பிறை முக அம்பு, இந்திரசித்தன் தலையைத் துண்டித்துவிட்டது.
25. இராமாவதாரம், யுத்தம், இராவணன் சோகம் - 47
26. இராமாவதாரம், யுத்தம், இராவணன் சோகம் - 48
27. இராமாவதாரம், யுத்தம், இராவணன் சோகம் - 49
28. இராமாவதாரம், யுத்தம், இராவணன் சோகம் - 50
29. இராமாவதாரம், யுத்தம், இராவணன் சோகம் - 51
30. இராமாவதாரம், யுத்தம், இராவணன் சோகம் - 52
31. இராமாவதாரம், யுத்தம், இராவணன் சோகம் - 53
32. ஜேஷ்ட பத்தினி - மூத்த மனைவி
33. ஸ்ரீமத் வால்மீகி இராமாயணம், யுத்த காண்டச் செய்திகள்.
34. அனுமனால் கேடு ஏற்பட்டபோதே, இராவணனுக்கு மண்டோதரி அறிவுரை கூறுகிறாள். அவ்வப்போது அவள் நன்மை உரைத்ததாக வால்மீகி காட்டுவார்.
35. சீதை எந்தவிதத்தில் தன்னைவிட உயர்ந்தவள் என்று மண்டோதரி கேள்விகள் எழுப்புவாள். சீதைமீது பொறாமை கொண்டவளாகப் பேசுவாள். கம்பருடைய மண்டோதரி, 'அமுதால் செய்த நஞ்சு' என்று சீதையைக் குறிப்பதை ஒப்பிடலாம்.
36. நிலமடந்தை என்னும் பெண்மீது மையல் கொண்டவனாக அவனைக் காட்டுவது, அவன் பெண் பித்தன் என்ற கூற்றுக்கு வலு சேர்க்கிறது.
37. இராவண மரணத்திற்குப் பின், இலங்கையில் மண்டோதரி வாழ்வதாக ஆதிகவி உரைப்பார்.

38. மயன் - ஹேமை ஆகியோரின் மகள்; இதே பெற்றோர்க்குப் பிறந்தவர்கள்தாம். மாயாவி மற்றும் துந்துபி ஆகிய அரக்கர்கள் (வாலியோடு போரிட்டு மடிந்தவர்கள்.)
39. அனுமன் கண்டது -மயன் மகள் உறை மாடம்; அக்கன் மரணம் - வீழ்ந்தனள் மயன் மகள்; இந்திரசித்தன் இறப்பு - மயன் மகள் மறுகி வந்தாள்; இராவணன் மரணம் - இரங்கினள் மயன் மகள்.
40. 'மயன் மகள் அத்தொழில் உறுதல்' யுத்தம், இராவணன் தேர் ஏறு - 26; 'மயன் கொடுத்தது மகளோடு' யுத்தம், வேல் ஏற்ற - 26.
41. இராமாவதாரம், யுத்தம், அதிகாயன் வதை - 270
42. இராவணன் மகன் - இராவணி
43. ஸ்ரீமத் வால்மீகி இராமாயணம், சுந்தர, தஸம ஸர்க : 20
44. ஸ்ரீமத் வால்மீகி இராமாயணம், சுந்தர, தஸம ஸர்க : 44
45. அனுமன் காண்டல் - சுந்தர காண்டத்து ஊர்தேடு படலம் - 195
46. இராமாவதாரம், சுந்தர, ஊர்தேடு படலம் - 200
47. இராமாவதாரம், சுந்தர, ஊர்தேடு படலம் - 201
48. இராமாவதாரம், சுந்தர, ஊர்தேடு படலம் - 202
49. 15ஆம் நூற்றாண்டில் தோன்றியதாகக் கருதப்படுகிற இராமாயணம். 9 காண்டங்கள், 109 ஸர்கங்கள் கொண்ட இதில், சிவ - பார்வதி உரையாடலாக இராமாயணக் கதை கூறப்படுகிறது. வால்மீகியே இதன் ஆசிரியர் என்னும் வல்லுநர்கள், காலத்தால் இன்னும் முந்தையது என்பர்.
50. சகோதரியின் துயரத்தைப் போக்குவதற்காகத் தமையன் வந்தார் என்றும் இது விவரிக்கப்படும்.
51. இராவணன் வலிமை கொண்டு இழுத்ததால், வளைந்து, காது போன்று குழைந்தது.
52. வளைவு காரணமாக, பசுவின் செவிபோன்று தோற்றம் தந்ததால், கோகர்ணம் என்னும் பெயர் தோன்றியதாகவும் சொல்லப்படும். கோ - பசு; கர்ணம் - காது. மேற்குக் கரையில் உள்ள பாடல் பெற்ற சிவத்தலம்.
53. மானஸம், லங்கா காண்டம் - 5 - 2
54. மானஸம், லங்கா காண்டம் - 7 - 1
55. மானஸம், லங்கா காண்டம் - 12 - 3, 4; 13 - 12; 14; 15
56. மானஸம், லங்கா காண்டம் - 16; 17, 35. பிரஹஸ்தன் இராவணனுடைய மகன்களில் ஒருவன்.

57. ஆனந்த இராமாயணம் போன்றே, பிற வடமொழி இராமாயணங்களிலும் இதற்கொப்பான காட்சி உண்டு.
58. மானஸம், சுந்தர காண்டம் - 8 - 2
59. 12ஆம் நூற்றாண்டில், சமண புராண மரபை அடியொட்டி, இராமகதையைப் படைத்தவர்களுள் நாகசந்திரர் ஒருவர். 4ஆம் நூற்றாண்டில் எழுந்த விமலசூரியின் பௌமசரியம் (பிராகிருத மொழியில் இயற்றப்பட்ட இதற்கு பதமசரிதம் என்றும் பெயர்) மற்றும் 10ஆம் நூற்றாண்டில் எழுந்த ரவிசேனரின் சமஸ்கிருதப் பத்மபுராணம் ஆகியவை நாகசந்திரரிடம் தாக்கத்தை ஏற்படுத்தின.
60. கோண புத்த ரெட்டியால் 13ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்டது. ஆசிரியர், தனது தந்தை பாண்டுரங்க விட்டலநாதருக்கு மரியாதை செய்யும் முகமாக, ரங்கநாத என்றே அழைத்தார்.
61. திருவண்ணாமலைக்கு அருகே உள்ள ஊர்.
62. அர்ச்சுனசாரதி கோயில் என்று செல்லமாக அழைக்கப் பெறும் ஸ்ரீவேணுகோபால பார்த்தசாரதி பெருமாள் கோயில்
63. 9ஆம் நூற்றாண்டில் குணபத்திரால் சமஸ்கிருதத்தில் இயற்றப்பட்டது. அத்புத இராமாயணத்தையும் ஜாதகக் கதைகளையும் அடிப்படையாகக் கொண்டது.
64. காஷ்மீர மொழியில் பல இராமாயணங்கள் உள்ளன.
சங்க இராமாயணம் - முதல் காஷ்மீர இராமாயணம் - கி.பி. 1843 வாக்கில் எழுதப்பட்டது.
பிரகாச இ - கி.பி. 1846ல் இயற்றப்பட்டது - மிகப் பிரபலமானது.
விஷ்ணு இ - கி.பி. 1913ல் விஷ்ணு கௌல் அவர்களால் இயற்றப்பட்டது.
சர்ம இ - நீலகண்ட சர்மாவால் கி.பி. 1919 முதல் 1926க்குள் எழுதப்பட்டது. துளஸீயை அடியொட்டியது.
அமர இ - அமர்நாத் எழுதியது - 1940
65. இவளே சீதையானாள்.
66. ஸ்ரீமத் வால்மீகி இராமாயணம், உத்தர காண்டச் செய்திகள்
67. சீதை அயோனிசை - தாய் வயிற்றில் தோன்றாதவள்; நிலமாதாவின் மகள்.
68. புவியில் மானுடனாகப் பிறந்தால், தசரதனே தனக்குத் தந்தை என்று திருமால் கூறியது ஒப்புநோக்கத்தக்கது.

69. லாவோஸ் பிரதேச இராமாயணமான இதற்கு, பல வடிவங்கள் உண்டு. ஆங்காங்கு, சிற்சில வேறுபாடுகளும் உண்டு.
70. குஜராத்தி மூலத்தின் ஆங்கில மொழிபெயர்ப்பிலிருந்து மீட்டும் தமிழில் பெயர்க்கப்பட்டது.
71. இருவருக்குமான உரையாடல் என்று பல நூல்கள் உள்ளன.
72. முன்னரே குறிப்பிட்டபடி, மண்டோதரி நகரில் வாழ்கிறாள்.
73. இராமாவதாரம், யுத்தம், இராவணன் வதை - 243
74. திவ்வியப் பிரபந்தம், பொய்கையார் பாசுரம்
75. இராமாவதாரம், யுத்தம், இராவணன் வதை - 244
76. திருவாசகம், அற்புதப் பத்து - 5
77. திருவாசகம், குயில் பத்து - 2
78. அத்யாத்மம்அ தசம ஸர்கம் - 35 - 43, 44 - 61.
79. திருக்கோளூர்ப் பெண் பிள்ளை ரகசியம்
80. காட்ஸ், டெமன்ஸ், அன்ட் அதர்ஸ் என்னும் நூலிலிருந்து.
81. லியார்னாடோ டா வின்ஸியின் ஓவியம்
82. குந்தி - கிருஷ்ண உரையாடல், ஸ்ரீமத் பாகவதம்
83. பகவத் கீதை, ஞான கர்ம ஸந்யாஸ யோகம் - 7
84. குந்தி - கிருஷ்ண உரையாடல்.
85. இராமாவதராம், யுத்தம், அதிகாயன் வதைப் படலச் செய்திகள்.
86. இராமாவதாரம், யுத்தம், அதிகாயன் வதை - 270
86. இராமாவதாரம், யுத்தம், இராவணன் சோகம் - 39
88. உடல் புகுந்து தடவியதோ? என்னும் வினா.



# தாய் தன்னை அறியாத...

**தா**ய் - மகவு உறவை விளக்குகிற கம்பரின் பாடல் மிகப் பிரசித்தமானது.

**தாய் தன்னை அறியாத கன்றில்லை; தன் கன்றை**
**ஆயும் அறியும்; உலகின் தாய் ஆகின் ஐய!**
**நீ அறிதி எப்பொழுதும் அவை உன்னை நிலை அறியா:**
**மாயை இது என்கொலோ? - வாராதே வர வல்லாய்'**

கானகத்தில் இராமனைக் கண்ட விராதன், தன் சாபம் நீங்கித் துதிப்பதாக அமைந்தபாடல் இது.

அண்டபகிரண்டத்திற்கே தாயாக விளங்குகிற பரம் பொருளை நோக்கி, உலக உயிர்கள், அந்தப் பரம்பொருளைச் சரியாக உணர்ந்து கொள்வதில்லை என்று கூறுவதுபோன்று அமைந்த பாடல். உயிர்களுக்கெல்லாம் தாயாக விளங்குகிற பரம்பொருளை உணர்ந்து கொள்வது கிடக்கட்டும் - உடன்பயிலும் உயிர்களை, ஒட்டி உறவாடும் உயிர்களை எவ்வளவு புரிந்து கொள்கிறோம்?

## தாய் என்னும் தனி உறவு

அக்காள் - தங்கை,அண்ணன் - தம்பி, மனைவி - கணவன், தாத்தா - பெயன் என்று எத்தனை விதமான உறவுகளானாலும், அவற்றின் அளவுகோல்களும் அமைப்பு முறையும், பற்பல விதமாக மாறுபடும். ஆயின், 'தாய்' என்னும் உறவு, எந்த இடத்திலும், எந்தப் பகுதியிலும், எந்த நிலையிலும் ஒன்றே ஒன்றை மட்டுமே குறிக்கும் - அதுவே அன்பு.

ஏதோவொரு காலகட்டத்திலாவது, தாய்மையின் அன்பையும் வாத்சல்யத்தையும், ஒவ்வொரு உயிரும் எதிர் நோக்குகிறது. எங்கிருந்தாவது அத்தகைய அன்பும் வாத் சல்யமும் தன்னை நோக்கி வாராதா என்று ஏங்குகிறது.

இது ஒருபுறமிருக்க, ஒவ்வொரு பெண்ணுக்குள்ளும் புதைந்து கிடக்கும் 'தாய்மைப் பண்பு', ஏதேனும் ஒரு கால கட்டத்திலாவது வெளிப்பட்டுவிடும். கைம்மாறு வேண்டாது அன்பு மாத்திரம் செலுத்தக்கூடியதான தாய்மைப் பண்பு, தீமையைக் கூட போக்கவல்லது என்பதை வரலாறு நன்கறியும்.

## இது பெரும் தாயர்

கிட்கிந்தை அரசியான தாரையும், இலங்கை அரசியான மண்டோதரியும் திறமையும் திட்பமும் நிரம்பப் பெற்றவர்கள். தத்தம் மகவுகளிடம் மட்டுமல்லாது, பிறரிடமும் அன்பு காட்டக் கூடிய தன்மையை, இவர்கள் இருவருமே பெற்றிருந்தனர்.

அன்பு என்பதைத் தங்களுடைய வலிமையாகக் கொண் டிருந்த இந்த இரு பெரும் தாயரின், அன்பும் தாய்மையும், உண்மையிலேயே உணர்ந்து கொள்ளப்பட்டனவா?

கம்ப காப்பியத்தின் துணைகொண்டு, இந்த இரண்டு பேரரசிகளையும் அணுகும்போது, இருவருமே புரிந்து கொள்ளப்படாமல் உதாசீனப்படுத்தப்பட்டனர் என்பதை உணர்வதற்கு வெகு நேரமாகாது.

சொல்லப்போனால், எல்லாத் தருணங்களிலும், தத்தம் பிள்ளைகளுக்கு நல்ல தாயாக இவர்கள் வெளிப்பட்டார்களா என்பது கேள்விக் குறியாகும்.

## குரக்கினத் தாய்

அங்கதன் என்ற செல்வ மகனுடைய அன்புத் தாயாக காட்சி தருகிற தாரை, கணவனான வாலிக்கும், மைத்துனமான சுக்ரீ வனுக்கும் தாயாகச் செயல்பட வேண்டிய நிலைக்கு உள்ளா கிறாள். அத்தகு நிலையை அவள் செவ்வனே கையாள்கிறாளா?

## வாலியிடம் வாஞ்சை

மகன் என்னதான் வளர்ந்துவிட்டாலும், ஒரு தாய் அவனைக் குழந்தையாகவே நினைப்பாள். அவனுக்கு எவ்வித துன்பமும் வந்துவிடக் கூடாதே என்று கவலைப்படுவாள். சில நேரங்களில்,

கணவனிடத்தும் அதே பரிமாணங்களைப் பயன் படுத்துவாள். தாரை, வாலியைக் குழந்தையாக நினைத்தாளோ இல்லையோ, அவனுக்குத் துன்பம் நேர்ந்து விடக் கூடாது என்பதில் பெரிதும் நாட்டம் கொள்கிறாள். கணவனாக நின்று, அவன் அவளை இடித்துரைத்துவிட்டுப் போனாலும்கூட, தாயாக நின்று அவன் புகழ் காக்கிறாள் அவள்.

## அங்கதனுக்கு அன்பு

அங்கதனுடைய தாய் என்ற நிலையில், அவளின் செயல்பாடு என்ன?

பாலகனாக அங்கதன் வளரும்போது, அவளுக்கும் அவனுக்கும் நல்லுறவு திகழ்ந்தது என்பதாகவே கொள்ள வேண்டும். சுக்ரீவனோடு நட்பு கொண்ட மானுடர் இருவர், வாலியை அழிப்பதாகத் திட்டம் தீட்டியுள்ளனர் என்பதை, கானகத்தில் அங்கதன் கேட்டு வந்து சொன்னதாகவே, வால் மீகியின் தாரை கூறுவாள். அரச பாதுகாப்பு மட்டுமல்லாமல், குடும்பத் தலைவனின் வாழ்நிலை பற்றியதுமான இத்தகவலை, தாயும் பிள்ளையுமாக ஆராய்ந்தனர் என்பது அவர்களுக்குள் இருந்திருக்க வேண்டிய அணுக்கத்தை வெளிப்படுத்துகிறது.

வாலியின் மறைவு, தாய் - பிள்ளை உறவை, எவ்வகை யிலேனும் பாதிக்கிறதா?

கம்பருடைய காப்பியத்தில், மரணப் பிடிக்குள் சிக்கிய வாலி, அங்கதனை இராமனிடம் கையகப்படுத்துகிறான். அப்போது தாரை அங்கில்லை. அத்ன பின்னரே, அவள் அவ்விடம் வருகிறாள். வாலியின் உடல்மீது படர்ந்து அவள் தவிக்கும்போது, இடையில் ஒருமுறை அங்கதனைக் குறிப் பிட்டு, அவனிடம் பேசுவது போல் அழுகிறாள். வால்மீகியின் தாரையோ, அங்கதனைக் காட்டிக் காட்டியே கதறுகிறாள். இறந்து கொண்டிருக்கும் கணவனை வணங்கச் சொல்லி மகனுக்குக் கட்டளையிடுகிறாள்.

தாரையைச் சமாதானப்படுத்துகிற அனுமனும், இராமனும் (வான்மீகம்), அங்கதனை முன்னிலைப்படுத்தியே மொழிய முற்படுகின்றனர். மகனை அரசபோகத்திற்கு ஆட்படுத்துவதன்

மூலமும், சிம்மாசனத்தில் அமர்த்துவதன் மூலமும் அவள் தனது துயரத்திலிருந்து விடுபடலாம் என்று பகர்கின்றனர். ஆதி காவியத்தில் அரசபோகத்திற்கு ஆட்படுத்துவதன் மூலமும், சிம்மாசனத்தில் அமர்த்துவத்ன மூலமும் அவள் தனது துயரத் திலிருந்து விடுபடலாம் என்று பகர்கின்றனர். ஆதிகாவியத்தில் அங்கதன், இராமனிடம் கையடையாகக் கொடுக்கப்படவில் லையாயினும், சுக்ரீவனுக்குத் துணையாக இருக்கும்படி வாலியாலும், இராமனாலும் பணிக்கப்படுகிறான்.

சுக்ரீவ - அங்கத உறவைத் தீர்மானிப்பதிலோ, நிர்ணயிப் பதிலோ, தாரை பங்காற்றியதாகத் தெரியவில்லை.[2]

மகன் பாலகப் பருவத்தைத் தாண்டும்வரை, சாதாரணத் தாய் போன்றே தோற்றம் தருகிற தாரை, இதன் பின்னரே, தாய்மைப் பண்பின் உச்சத்தை அடைகிறாள்.

கணவனை இழந்து, மைத்துனன் அரசனாகி, மகன் இளவரசனா கியிருக்கும் நிலையில், அரசமாதா என்ற அந்தஸ்தை அடைகிற தாரை, இந்நிலையிலே, தாய்மையின் முழு வீச்சையும் காட்டுகிறாள்.

வாலி மரணத்திற்குக் காரணமாக இருந்த இராமனை, தாரை சபித்ததாகக் கிழக்கிந்திய இராமாயணங்கள் சிலவற்றில் காணலாம். வாலியோடு தானும் இறந்துபோவதாக இராமனிடமே தாரை விண்ணப்பம் செய்தாள் (வான்மீகம்). அப்படியிருக்க, சுக்ரீவனோடு அவள் எவ்வாறு சேர்ந்து வாழ்ந்தாள்?

இதற்கான விடை, சீதையைத் தேடிப் போன நிலையில், அங்கதனிடமிருந்து கிடைக்கிறது. சுக்ரீவன் சொன்ன காலக் கெடுவிற்குள் சீதையைக் காணமுடியாமல் தவித்துக் கொண்டு இருக்கும் வானரங்கள், தங்களுக்குள் பேசிக் கொள்கின்றன. தென்திசை சென்ற வானரக் கூட்டத்தை வழி நடத்திய அங்கதன், 'இனி என்ன செய்வது?' என்று விசனிக்கிறான். அப்போது அவன் கூறும் சொற்கள், சிந்திப்பதற்குரியன.

'சீதையைக் காணாமல் திரும்பிப் போனால், நான் அரசனுடைய (சுக்ரீவன்) கோபத்திற்காளாவேன். ஏற்கெனவே என்மீது அரசன் ஆத்திரம் கொண்டுள்ளான். என் தந்தையின்

மரணத்திற்குப் பின்னர், என் தாயைக் கவர்ந்து கொண்டான். எனக்குத் தீங்கு வரக்கூடாது என்பதற்காக, அதை என் தாய் பொறுத்துக் கொண்டாள். எனக்காக வாழ்கிறாள் (வான்மீகம்). என் தந்தை இறந்தவுடனேயே அவன் என்னைக் கொன்றி ருப்பான். இராமபிரான் எனக்கு அடைக்கலம் தந்து என்னைக் காக்கவில்லையாயின், நான் எப்போதோ இறந்திருப்பேன் (துளஸீ மானஸம்). எனவே, சீதையைக் காணாமல் இப்போது போனால், அவனால் கொல்லப்படுவேன்.'

சீதையைத் தேடும் பணி சரியாக நடைபெறவில்லையே என்ற ஆதங்கத்திலும், சொல்லொண்ணா பரிதவிப்பிலும் அங்கதன் இவ்வாறு பேசினான் என்று கொள்ளலாம். இருப்பினும், சிறிதேனும் உண்மை இதில் இல்லாமலில்லை. அப்படியாயின், மகனுடைய எதிர்காலத்தைக் கருத்தில் கொண்டு,அரசபோக வாழ்க்கைக்கு அவள் உடன்படுகிறாள்.

ஒரு தாய் எப்போது பெருமகிழ்ச்சி அடைகிறாள் என்பதை வள்ளுவப் பேராசான் விளக்குவார். ஈன்ற பொழுதைக் காட்டிலும், சான்றோன் என்று பிறர் போற்றக்கூடிய தருணங் களில், தன் மகனைப் பெற்றதற்காக, அந்தத் தாய் பெரிதும் மகிழ்கிறாள். இந்த அளவுகோலைக் கொண்டு நோக்கினால், அங்கதனைப் பற்றிய பெருமை, தாரைக்கு எப்போது இருந்திருக்கும்?

சுக்ரீவன் பணியிலும், இராமன் பணியிலும் அங்கதன் ஈடுபடுகிறான். சுக்ரீவன் மீதோ, இராமன் மீதோ, எந்த வகையான காழ்ப்புணர்வும் இல்லாமல் பணி செய்கிறான். சொல்லப் போனால், முழுமையாகத் தன்னை ஈடுபடுத்திக் கொள்கிறான். அனுமன் தூது செல்ல வேண்டிய கட்டத்தில், அனுமன் செல்லமுடியாத நிலை ஏற்படுமானால், அடுத்து அப்பணியைச் செய்யக்கூடிய ஆற்றலும் தகுதியும் பெற்றவனாக, அங்கதனே தேர்ந்தெடுக்கப்படுகிறான்.

வாலி வதம் நிகழ்கிற கட்டத்தில், அங்கதன் மிகப் பெரிய வீரனாகவோ, சான்றோனாகவோ காட்டப்படவில்லை. ஆயின், உடனுக்குடனாக, தனது ஆற்றல் முழுவதையும் பயன்கொள்கிற

நிலைக்கு அவனால் உயர முடிகிறது. மிகக் குறுகிய காலத்திலேயே, பாலக நிலையிலிருந்து பரிபக்குவ நிலைக்கு எவ்வாறு அவனால் உயர முடிகிறது என்பதை எண்ணும்போது, அதற்குத் தாயின் வளர்ப்பு, பின்னணியில் இருந்திருக்க வேண்டும் என்பதையும் எண்ண வேண்டும்.

அங்கதனைப் பொறுத்தவரை, கூடவே இருந்து 'இதைச் செய், அதைச் செய்' என்று யோசனைகளை அந்தத் தாய் சொல்லவில்லை. வாலி மரணத்திற்குப் பின்னரான அவனுடைய செயல்பாடுகளில், அவளுக்கு நேரடிப் பங்கு ஏதும் இருக்கவுமில்லை. இருப்பினும், தக்க நேரத்தில் தக்க செயல்களைப் புரியக் கூடியவனாக, அவனை, அவள் வளர்த்திருக்கிறாள்.

திறமையும், வீரமும் மிக்கவனான அங்கதனை, நாம் காணக் கூடியதோர் அழகான கட்டத்தைக் கம்பர் அமைத்துக் கொடுப்பார். அப்போது தாரை அருகிலில்லை. எந்தக் கட்டம்?

இராம முடிசூட்டு விழா! முடிசூட்டு விழாவில், ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு பணியைக் கொடுத்த கம்பர், அங்கதன் உடைவாள் எந்தியதாக வருணிப்பார்.

**அரியணை அனுமன் தாங்க, அங்கதன் உடைவாள் ஏந்த**
**பரதன் வெண்குடை கவிக்க, இருவரும் கவரி பற்ற**
**விரை செறி குழலி ஓங்க, வெண்ணெயூர்ச் சடையன் தங்கள்**
**மரபுளோர் கொடுப்ப வாங்கி, வசிட்டனே புனைந்தான் மௌலி**[3]

முடிசூட்டு விழாவில் உடைவாள் ஏந்தலுக்கு என்ன பொருள்? முடிசூட்டப்படுகிற அரசின் மேன்மையை ஏற்றுக் கொண்டு, அந்த அரசாட்சியின் பாதுகாவலுக்கும் பொறுப்பு வகிப்பதுதான். உடைவாள் ஏந்தும் தன்மை. இராமனுடைய ஆட்சியதிக்காரத்தைஏற்றுக் கொள்கிற முதலாவது இயல்பில், எவ்வித ஐயமும் இருக்கமுடியாது.

பாதுகாவல் பொறுப்பு? பாதுகாவல் பொறுப்பைத் தாங்கக்கூடிய தனி ஆற்றல், அங்கதனுக்கே உண்டு என்கிற முடிவுக்கு இராமன் வந்திருந்தால் மட்டுமே இது சாத்தியம். இராமனுடைய நம்பிக்கைக்கு என்ன காரணம்?

பாதுகாவல் பொறுப்பில் இருக்கிற ஒருவன், தன்னுடைய சுற்றம், தன்னுடைய பாசம் என்கிற சுயநல வட்டங்களுக்குள் சுழலமுடியாது. சொந்தத் தந்தையின் மரணத்திலும் சுயநல நோக்கம் கொள்ளாமல், எது சரி எது தவறு என்று சீர்தூக்கிப் பார்க்கிற தன்மையும், நியாய -அநியாயங்களைப் புரிந்து கொள்கிற தன்மையும், அங்கதனிடமே இருக்கிறது என்பதை இராமன் முழுமையாக உணர்கிறான். உணர்ச்சிக் கொந்தளிப்புகளுக்கு ஆட்பட்டு சராசரி இருப்புக்கு உள்ளாகாமல் நேர்மைக்கும் உழைப்புக்கும் கட்டுப்பட்டவனாக அங்கதன் வாழ்வது, இராமனைக் கவர்கிறது.

தந்தையைப் பறிகொடுத்ததால் ஏற்படும் உணர்ச்சிப் பிரவாகம், தந்தை கொல்லப்பட்டார் என்பதால் தோன்றக்கூடிய காழ்ப்பு, இடையீடாக வந்துவிட்ட சிற்றப்பாவிடம் சீற்றம், இத்தகைய கோப தாபங்களால் உண்டாகும் சமமின்மை - சீர்குலைக்கிற எந்த தன்மையையும் அங்கதனிடம் காண இயலவில்லை. எத்தகைய எதிர்ப்பு வந்தாலும், எவ்வளவுதான் சிக்கல்கள் வந்தாலும், தன்னுயைட நடுவு நிலைமையிலிருந்து அங்கதன் வழுவ மாட்டான் என்ற நம்பிக்கை கொண்ட இராமன், அயோத்தி முடிசூட்டு விழாவில், அவனுக்குச் சிறப்பிடம் தருகிறான். கம்பர் காட்டுகிற முடிசூட்டு விழாவில், அயோத்தியைச் சாராதவர்கள் என்று பார்த்தால், அங்கதனும், வெண்ணெயூச் சடையன் மரபுளோருமே ஆவர். தனக்கு ஆதரவு காட்டிய வெண்ணெயூர்ச் சடையனைக் குறித்தது கம்பரின் நன்றியானால், தக்க பணியில் நின்றமைக்காக அங்கதனைச் சேர்த்தது இராமனின் நன்றி.

விருப்பு வெறுப்பற்ற தன்மையை, அங்கதனுக்குத் தந்தது யார்? அவனுடைய தாய் என்பாளைத் தவிர வேறு யார்?

தாரையின் தாய்மை, அங்கதனைப் பக்குவப்படுத்தியதை உணர்ந்துகொள்ள, வாலியும் தாரையும் உரையாடிய காலத் திற்குச் செல்லவேண்டும். போருக்கு எழவேண்டாம் என்று வாலியைத் தடுக்கிற தாரை, சுக்ரீவனை அழைத்து இளவரசு பட்டம் கட்டச் சொல்கிறாள் (வான்மீகமும் மற்றும் பிற இராம கதைகளும்).

தன்னுடைய சொந்த மகனே இளவரசனாவதற்கான தகுதியில் இருக்கும்போது, அந்த அதிகாரத்தையும் பதவியையும் மற்றொருவனுக்குக் கொடுக்கச் சொல்கிற பக்குவம் அவளுக்கு இருக்கிறது. அதே பக்குவம், தாய் வழிப் பண்பாக அவன் தனயனுக்கு இறங்குகிறது.

**சுக்ரிவனிடம் கருணை**

தாரை என்னும் பெண், தெய்விகத் தாய்மையில் மிளிர்வது, சுக்ரீவனுக்கு அவள் கருணை காட்டும் கட்டங்களிலாகும்.

சுக்ரீவனோடு தாரை சேர்ந்து வாழ்ந்தான் என்னும் ஆதிகாவியச் செய்தியை மாற்றி, அவளைக் கைம்மைக்கோலம் பூண்ட அரசமாதாவாகக் கம்பர் படைக்கிறார். இத்தகைய கோலத்திலே அவளைக் காண்கிற இலக்குவன், அயோத்தியில் இருக்கும் தனது தாயரை நினைந்து வருந்துகிறான்.

இலக்குவனுடைய நினைப்பு, அயோத்தி நோக்கிப் பாய, அதே அயோத்தியில், பல்லாண்டுகளுக்கு முன்னர் நடைபெற்ற நிகழ்வை எண்ணத் தலைப்படுகிறோம். அது இராமனும் இலக்குவனும் சுமித்திரைகோயிலில் நின்ற தருணம். கைகேயி அனுப்பிய மரவுரிகளைக் கைகளில் எந்தி, இலக்குவன், சுமித் திரையின் தாள் பணிந்தான். இராமனுடன் ஏகும்படி அவனுக்கு அவள் ஆணையிடுகிறாள். ஆணையின் முழு வடிவம் என்ன?

**ஆகாதது அன்றால் உனக்கு; அவ்வனம் இவ்வயோத்தி;**
**மாகாதல் இராமன் நம் மன்னவன்; வையம் ஈந்தும்**
**போகா உயிர்த் தாயர் நம் பூங்குழல் சீதை - என்றே**
**ஏகாய்; இனி இவ்வயின் நிற்றலும் ஏதம்[4]**

கானகம் அயோத்தி, இராமன் தந்தை, சீதை தாய் என்று இலக்குவனுக்குப் புதிய உறவுகளைக் காட்டி அனுப்புகிறாள்.

**ராமம் தசரதம் வித்தி மாம் வித்தி ஜனகாத்மஜாம்**
**அயோத்யாம் அடவிம் வித்தி கச்ச தாத் யதா - சுகம்[5]**

என்று வால்மீகி காட்டுவதன் அப்பட்டமான தமிழ் வடிவம் இது எனக் கொள்ளலாம்.

இராமன் அடியொற்றிக் கானகம் புக்க இலக்குவன், அதன் பின்னர் அயோத்தியையோ, தாயரையோ உறவினரையோ எண்ணியதாகத் தெரியவில்லை. உற்றாரும் உறவினரும் சித்திர கூடம் அடைந்தபோதும், பற்றற்று நின்றான் இலக்குவன்.

பிற தருணங்களில் தன்னுடைய சுற்றத்தை மறக்கமடிந்த அவனுக்கு, தாரையைக் கண்டபோது, தாயரை நினைக்காமல் இருக்கமுடியவில்லை. எந்தத் தாய் (சுமித்திரை) அவனிடம் 'இனி சீதையே அவனுக்குத் தாய்' என்று கூறியிருந்தாளோ, அந்தத் தாயையே இப்போது நினைவுகூர்கிறான்.

வெறுமே - இனைவு கூர்ந்தானில்லை. அயோத்தியில் எனது தாயரும் இவ்வாறான கைம்மையில் தவிப்பார்களே என்று உள்ளம் நைகிறான். உணர்வுகளை நீக்கி, பதினான்கு ஆண்டுகள் உண்ணா நோன்பனாகவும் உறங்காவில்லியாகவும் செயல்பட முடிந்த ஒருவனை, தாரையின் தாய்மை, உறவுக் கூட்டுக்குள் கொணர்கிற தென்றால் அந்தத் தாய்மையின் மேன்மைதான் எத்தகையது!

## தாய் – நல்ல தாய் – தெய்வத் தாய்

சுக்ரீவனைக் காப்பாற்றவே, அவன் இலக்குவனிடம் பேசுகிறாள். அவளை அவ்வாறு செய்யுமாறு, அனுமனும் அங்கதனும் வேண்டுகிறார்கள். இடைப்பட்ட காலத்தில், அவர்களுக்கு அவள் அறிவுரை கூறியும்,அவர்கள் செவி சாய்க்கவில்லை என்பதை அவளுடைய கூற்றின் வாயிலாகவே அறிகிறோம். அவர்களைக் கடிந்து கொள்கிறாள். சீதையைப் பிரிந்த துயரம், இராமனை எவ்வளவு வதைக்கும் என்பதையும் அவர்களுக்கு நினைவூட்டுகிறாள்.

தாரையின் தாய்மை, படிப்படியாக மேன்மையடைவதை இங்குக் காணலாம். அனுமனும், அங்கதனும் வந்து கேட்ட வுடன், அவர்களுடைய உறவினளாகவும்,அந்த நாட்டின் பேரரசியாகவும் அவள் புறப்படுவது, 'தாய்' என்னும் தன்மை யாலாகும்.

இடையிலே, தவறு செய்த அவர்களைக் கடிவதும், இலக்குவனைச் சாந்தப்படுத்துவதற்கான உபாயங்களைத்

தேடுவதும், சீற்றத்தில் பேசும் இலக்குவனை மடை மாற்றுவதும், சராசரியிலிருந்து மேலேறிய 'நல்ல தாய்'.

இராமன் அங்கில்லை. எனினும் இராமனுடைய துன்பம் எத்தகையது என்பதை எண்ணிப் பார்ப்பதும், அதனைத் தீர்பப்தற்கான வழியைச் சிந்திப்பதும், தனக்கே தீங்கு செய்த சுக்ரீவனுக்கு நன்மை செய்ய ஒருமுகப் படுவதும்,அவளுக்கே உரித்தான 'தெய்வத் தாய்' என்னும் பண்பு.

சுக்ரீவன் அவசர புத்திக்காரன் என்பதில், வாலிக்கோ, இராமனுக்கோ ஐயமிருந்திருக்கவில்லை.

**மத இயல் குரங்குச் செய்கை மயர்வொடு மாற்றி, வள்ளல்**
**உதவியை உன்னி, ஆவி உற்றிடத்து உதவுகிற்றி**[6] - இது வாலியே,

சுக்ரீவனுக்குக் கூறும் அறிவுரை.

**பெறல் அருந்திருப் பெற்று, உதவிப் பெருந்**
**திறம் நினைந்திலன்; சீர்மையின் தீர்ந்தனன்;**
**அறம் மறந்தனன்-**[7]

இது இராமன் சுக்ரீவனைப் பற்றிக் கூறும் தெளிவுரை.

அவசர புத்திக்காரன் ஆபத்தில் சிக்கிக் கொண்டபோத, 'அவன் படட்டும்' என்று தாரை எண்ணியிருந்தால்கூடத் தவறில்லை. வாலி மரணத்திற்குப் பின்னர், சுக்ரீவனோடு சேர்ந்து வாழ்ந்தாள் என்று கூறும் வான்மீகத்திலாவது, அவள் சுக்ரீவனைக் காப்பாற் முற்படுவதற்கான முகாந்திரம் உண்டு. ஆயினும், தனிப் பெருமாட்டியாக, தன்னேரில்லா அரசமாதாவக அவள் வாழும் கம்பகாப்பியத்தில், அத்தகைய முகாந்திரம் ஏதும் தேவையில்லை.

தாரையிடத்து இயல்பாகப் பொதிந்திருந்த தாய்மையை அடையாளம் கண்டுகொண்ட கம்பர், அதனை விரிவுப் படுத்துகிறார். அங்கதன் தாய் என்ற நிலையிலிருந்து மெல்ல விரிந்து, இலக்குவன் தாய், சுக்ரீவன் தாய் என்ற விசுவரூப எல்லை களை அவள் தொடுகிறாள். இடையில், வாலியும் அனுமனும், கிட்கிந்தைவாசிகளும், ஏன் இராமனும் கூட, அவளுடைய தாய்மை வீச்சின் தண்ணளியைப் பெறுகிறார்கள்.

### அரக்கினத் தாய்

கிட்கிந்தையின் தாய்க்கு மகன் ஒருவன் என்றால், இலங்கையின் தாய்க்கு இருவர். மகனைத் தனது கண்முன்னரே இழக்கும் அவலம், கிட்கிந்தைப் பெருமாட்டிக்கு நேரவில்லை. ஆயின், இரண்டு மகன்களையும், கணவனுக்கும் முன்னதாக இழக்கும் அவலம், இலங்கைச் செல்விக்கு நேர்ந்தது.

அகவையில் இளையவனான அக்ககுமாரனை இழக்கும் போது, அதன் முழுமையான துயரம் அவளுக்குக் புரியக்கூட இல்லை. அரக்கிமார்கள் பலரும் வந்து கதறும்போது, தானும் கூட்டத்தோடு கூட்டமாக வந்து மூகிறாள். 'என்ன தாய் இவள்?' என்ற எண்ணம் மெல்லத் தலைதூக்க, கொண்டவனுக்காக என்னவெல்லாம் செய்வதற்கும், இந்தப் பெண்மணி ஆயத்தமாக இருக்கிறாள் என்பதைக் கண்ணுறும்போது, அவள் மீது பரிதாபம் எழுகிறது.

### இந்திரசித்தனிடத்து பாசம்

எந்த மகனுக்கு ஆபத்து வராது என்று அவள் நம்புகிறாளோ அந்த மகனான இந்திரசித்தனே களத்தில் மாண்டுபோனான். அவள் அழுகிறாள். என்றாலும், இந்த மரணத்தை அவள் எதிர் பார்க்காமலா இருந்திருப்பாள் என்று கேட்கத் தோன்றுகிறது. கட்டாயம், இப்படியொரு நிலை வரும் என்று அவள் சிந்தித்திருக்கத்தான் வேண்டும்.

அக்ககுமாரன் மரணம் வேண்டுமானால், எதிர்பாராது நிகழ்ந்திருக்கலாம். ஆனால், முறையான போர் தொடங்கி, அதிகாயன் முதல் கும்பகன்னன் வரை அரக்க வீரர் பலரும் மாண்டு போயினர் என்ற நிலையில், இந்திரசித்தனுக்கும் கேடு வரும் என்று அவள் எண்ணியிருக்கக் கூடும். ஆனாலும், அதைச் சொல்லவோ, சொல்லிப் பார்த்துச் செப்பனிடவோ, அவள் மாட்டு அதிகாரம் இல்லை.

இந்திரசித்தன் இறந்தபோது துடித்தாள் என்பது இருக்கட்டம். அவன் வாழும்போது, தாயாக என்ன செய்தாள்?

பிள்ளையை வளர்க்கும் தாய், அந்தப் பிள்ளைக்கு வழிகாட்டவும் வேண்டும். போகக் கூடிய பாதை எது? போகக் கூடாத பாதை எது என்பனவற்றை விளக்க வேண்டும். ஒரு சராசரி தாய்க்குக் கிடைக்கக்கூடிய இத்தகைய வாய்ப்பு, மண்டோதரி போன்ற பெரிய இடத்துத் தாய்க்குக் கிடைத்ததா?

இராவணன் என்னும் நச்சுமரத்தின் அடியில் தழைக்க முடியாமல் போகிற துளிர்களாகவே அவனுடைய மக்கள் நசிவடைகிறார்கள். அந்தத் துளிர்களைப் பெற்ற, வளர்த்து, கணவனின் தகாத ஆசைக்குப் பிள்ளைகளைப் பலிகொடுக்க வேண்டிய சூழலில் மண்டோதரி சிக்கிக் கொள்கிறாள்.

மகன் பெருமைக்குரியவன் என்று பிறர் பாராட்டும்போது, ஈன்ற காலத்தைக் காட்டிலும், தாய் கூடுதல் மகிழ்ச்சிக்கு உள்ளாகிறாள் என்னும் வள்ளுவ வாக்கை, மண்டோதரிக்குப் பொருத்தினால் எப்படியிருக்கும்? மேகநாதனாக விளங்கு பவன், தேவாதி தேவர்களுக்கெல்லாம் தலைவனான இந்திரனை வென்றதால், இந்திரசித்தன் என்று பெயர் பெறும் நிலைவரை, அவள் பெருமை கொள்கிறாள். ஆனால், அதற்குப் பின்னர்?

அக்ககுமாரன் வீழ்ந்துபட்டான் என்ற நிலையில், இராவணிடம் விவாதம் செய்து, அனுமனுடன் பொருத, தானே எழுந்தான் இந்திரசித்தன்.[6] அன்று தொடங்கி, நிகும்பலை யாகம் அழியப் பெற்ற நிலையில், இந்திரசித்தன் போருக்குப் புறப்படும் நாள்வரை, அதர்ம யுத்தம் செய்யாதே என்று அவனைத் தடுத்திருக்க மண்டோதரியால் முடியுமா?

'அப்பாவைத் திருத்த முடியாத நீ, ஏனம்மா என்னைத் திருத்தப் பார்க்கிறாய்?' என்று மகன் திருப்பிக் கேட்டால் அவள் என்ன செய்வாள்?

அது மட்டுமன்று; அசுர குலத்திற்குள் வாழ்க்கைப்பட்டு, அசுர வித்துகளையே மகன்களாகப் பெறவேண்டிய கட்டாயத்துக்கு உள்ளானவள் அவள். அதர்மத்தைப் பற்றி அவள் என்ன பேசமுடியும்?

ஆயினும் ஒன்று. இறுதியாகப் போருக்குப் புறப்படுகிற இந்திரசித்தன், இராவணுக்கு நற்சொல் கூறுகிறான். 'ஆசைதான்

அச்சீதைபால் விடுதி ஆயின், அனையவர் சீற்றம் தீர்வர்; போதலும் புரிவர்; செய்த தீமையும் பொறுப்பர்; உன்மேல் காதலால் உரைத்தேன்' என்று புகல்கிறான்.

போர்க்களத்தே நிகழ்ந்த நிகழ்வுகள் அவனிடத்தில் மாற்றங்களை ஏற்படுத்திவிட்டன என்றாலும், அவனுக்குள் சிற்சில நன்மைகளும் இருந்திருக்க வேண்டும். மண்டோதரி என்ற மங்கையின் மகனல்லவா?

இந்திரசித்தனுடைய நிலைமையை மேலும் சிந்திக் கையில்தான், மண்டோதரியின் மகன் என்ற மாண்புக்கு அவன் எவ்வளவு தகுதி படைத்தவன் என்பதை அறியலாம். தன்னுடைய தாயின் இடத்திற்கோ,அதற்கு நிகராகவோ ஒரு பெண்ணைக் கொணரும் முயற்சியில் தந்தை ஈடுபட்டிருக்கும் போது, அதற்காகப் பாடுபடுவதும், போருக்குச் செல்வதும் எத்தகைய துன்பம்! இப்படியொரு துன்பத்தை, கம்பீரமாகத் தாங்கிக் கொண்டு, தந்தையைக் காட்டமாக ஏதும் கூறாது, இந்திரசித்தன் போர்செய்யப் போகிறான் என்பதுதான், அறம் வழுவுகிற செயல்களுக்கு இடையேயும், அவன்மீதான மரியாதையைக் காப்பாற்றுகிறது. மண்டோதரியிடத்திருந்த பொறுமை, அவனிடத்தும் சிறிதாவது சேர்ந்திருக்க வேண்டும்.

## இலங்கை வேந்தனிடத்து நேசம்

இராவணன் ஒருமுறை மாத்திரம் தவறு செய்தவன் இல்லை என்பது காப்பியத்தை நுகர்வோர் யாவராலும் உணரமுடியும். அப்படியாயின், மண்டோதரி அவனைத் திருத்துவதற்கு ஏன் முயற்சி செய்யவில்லை என்ற வினா எழும். இதற்கான விடையும் ஏற்கெனவே தெரிந்ததாகும். அவள் சொல்ல முயன்றிருப்பாள் -அவன் காது கொடுத்திருக்க மாட்டான். அவள் தட்டிக் கேட்டிருப்பாள் -அவன் தட்டிவிட்டுப் போயிருப்பான்.

இறந்துகிடக்கும் நிலையிலும், அவன் புகழை விட்டுக் கொடுக்காமல் அவள் பேசுவதாகவே கம்பர் படம்பிடிப்பார். பிள்ளை போன்று அவனிடம் அவள் வாத்சல்யம் காட்டியதன்

விளைவே, அவனைப் 'பாற்கடல்' என்றும் 'சிவன் மலை தூக்கியவன்' என்றும் அவள் சிலாகித்துச் சிறப்பிப்பதாகும்.

பத்து மாதங்கள் சீதையை அசோகவனத்திடை வைத்து அவன் பாதகம் செய்த காலத்தும், அவன்மீது வெறுப்பு கொள்ளாமல் அவள்இருந்ததற்கும் காரணம்,அவளுடை அன்பும் நேசமும் ஆகும்.

### இன்னும் அவளின் வாசம்

தன்னுடைய குழந்தைக்குச் சோறிடும்போது, பக்கத்து வீட்டுக் குழந்தைக்கும் அதில் ஒரு பிடி கொடுப்பவள் தாய். தாய்மையின் இந்த உணர்வு, மண்டோதரியிடம் நிரம்பவே செயல்படுகிறது.

'கள்ளிருக்கும் மலர்க் கூந்தல் சானகியை மனச் சிறையில் கரந்த காதல் உள்ளிருக்கும் எனக் கருதி உடல் புகுந்து தடவியதோ ஒருவன் வாளி?' என்கிற அவளின் கேள்வி, இராமன் எதிரிலேயே எழுகிறது. இந்த வினாவின் சாயலே, 'இல்லை' என்னும் விடையை உள்ளடக்கியதாகும். இராமனுக்கு மறைமுகமாக மண்டோதரி சொல்லக்கூடிய செய்தி -இறக்கும் தறுவாயில், இலங்கேஸ்வரன் மனதில் சீதை இல்லை என்பதோ!

சீதைக்குத் தாய் மண்டோதரி என்று இராமாயணங்கள் சில கூறுகின்றன. தாய்மையின் வாத்சல்யத்தைச் சீதை மாட்டும் காட்டி னாள் என்பதாகக் கம்பகாவியத்தை எண்ணுவதிலும் தவறில்லை.

### தாய் - நல்ல தாய் - தெய்வத் தாய்

'மயன் மகள்' என்றே மண்டோதரியைக் கம்பர் காட்டுகிறார். மகளாக இருக்கும் நிலையிலேயே, அவளின் உணர்வுகளும் உரிமைகளும் பிறருக்காக பலியிடப்படுகின்றன.

இதன் பின்னரே, அவள் 'தாய்' என்னும் நிலையை அடைகிறாள்.

மகளாகவோ பெண்ணாகவோ செயல்பட முடியாத அவள், தாய் என்று மட்டும் எவ்வாறு செயல்பட முடியும்?

'இலங்கைவேந்தன் மனைவி' என்னும் அடையாளம், எங்குச் சென்றாலும் அவளைத் தொடர்கிறது. இருப்பினும், அவள் எவ்வாறு மேன்மையடைகிறாள்?

அக்ககுமாரனையும் இந்திரசித்தனையும் வளர்க்கும்போது, அவர்களுக்கான அன்னையாக அவளால் செயலாற்ற முடிந்ததா என்பது தெரியவில்லை. இருந்தாலும், இங்கொன்றும் அங்கொன்றுமாக அவர்களிடத்துக் காணப்பட்ட நல்ல தன்மைகளுக்கு அவளே காரணம். அவ்வகையில் அவள் 'நல்ல தாய்'.

பகை நிலையில் இருந்தவரிடத்தும் மென்மை காட்டு கிறாள். தன்னுடைய சிதைவுக்குக் காரணமான சீதையைப் பற்றியும் நாகரிகம் காக்கிறாள். அன்பு கொண்டு அனைவரையும் அனைத்தையும் பேதம் பாராட்டாமல் அரவணைகக்கக்கூடியது தாய்மை என்றால், இவ்விதத்தில் அவள் 'தெய்வத் தாய்'.

**தாய் தன்னை அறியாத...**

தாரை - மண்டோதரி -

கம்ப காப்பியத்தின் இந்த இரண்டு தாயரும்,அவர்களைச் சேர்ந்தவர்களால் சரியாகப் புரிந்து கொள்ளப்பட்டதாகத் தெரியவில்லை.

இருந்தபோதினும், தத்தம் நெறிகளைக் கைவிடாமல், 'அன்னை' என்ற நிலையிலிருந்து உயர்ந்து, 'அரசமாதா' என்னும் நிலையில் இருவரும் செயல்பட்டனர்.

சொந்த நலன்களைப் பேணமுடியாமல் போன கட்டங்க ளிலும், பொது நலமும், நாட்டு நலமும், பிறர் நலமும் பேணினர்.

தன் குழந்தை 'அம்மா' என்றழைக்கும் வாய்ப்பு தாரைக்காவது தங்கியது; மண்டோதரிக்கு அது கைநழுவியது. நல்லவனாக வளர்ந்த மகன், நல்லவனாக வாழும் நிலையைத் தாரை பார்த்தாள்; கெட்டவனாக வளர்க்கப்பட்ட மகன் நல்லவனாக மடியும் விதியை மண்டோதரி பெற்றாள்.

இருவருமே, தத்தம் பிள்ளைகளால் அழைக்கப் படுவதினும், ஊராரால் மதிக்கப்படும் மரியாதைக்குரியவர் ஆயினர்.



குறிப்புகள் :

1. இராமாவதாரம், ஆரணியம், விராதன் வதை - 54
2. கிட்கிந்தை மற்றும் சுந்தர காண்டச் சம்பவங்கள்
3. இராமாவதாரம், யுத்தம், திருவடி சூட்டு - 38
4. இராமாவதாரம், அயோத்தியா, நகர் நீங்கு - 146
5. ஸ்ரீமத் வால்மீகி இராமாயணம், அயோத்தியா
6. இராமாவதாரம், கிட்கிந்தை, வாலி வதை - 143
7. இராமாவதாரம், கிட்கிந்தை, வாலி வதை - 2
8. சுந்தர காண்டம், பாசப் படலம்





## டாக்டர் சுதா சேஷய்யன்

சென்னை ஸ்டான்லி மருத்துவக் கல்லூரியில் உடற்கூறியல் துறையின் பேராசிரியராகவும், தலைவராகவும் திகழும் டாக்டர் சுதா சேஷய்யன் இருபதாண்டுகளுக்கும் மேலாகத் தமிழ் இலக்கிய மேடைகளில் உலா வருபவர். கம்பன் மேடைகளில் தொடங்கிய தனது இலக்கியப் பயணத்தை, இராமாயணம், மகாபாரதம் முதல் ஆதிசங்கரர், அபிராமிபட்டர் வரை, ஆன்மிகப் பயணமாகத் தொடர்ந்துகொண்டிருப்பவர்.

தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் மருத்துவக் களஞ்சியம், தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் அறிவியல் களஞ்சியம் ஆகியவற்றில் மருத்துவ-அறிவியல் கட்டுரைகள் பல எழுதியவர். இதழ்கள் பலவற்றிலும் சமூகம், அறிவியல், மருத்துவம், ஆன்மிகம் தொடர்பாக எழுதி வருபவர்.

'இந்த நூற்றாண்டில் இந்து மதம்', 'தேவாரத் திருவுலா', 'ஸ்ரீலலிதா', 'மத்வாசார்யர்', 'படிவங்கள் எப்படியோ?' ஆகிய நூல்களின் ஆசிரியர், பொது மக்கள் விழிப்புணர்வும், பயனும் பெறவேண்டி, மருத்துவ நூல்களை எளிமையான ஆங்கிலத்தில் எழுதியுள்ளவர். வான்மீகி இராமாயணத்தின் சுந்தர காண்டத்தைச் செய்யுளுக்குச் செய்யுள் தமிழில் மொழிபெயர்த்து நூலாக்கித் தந்தவர். மருத்துவத்துறையின் இலக்கணமாகக் கருதப்படும் GRAY'S ANATOMY என்னும் நூலின் சர்வதேச வல்லுநர் குழு உறுப்பினர்.

தமிழில் மட்டுமல்லாது, ஆங்கிலத்திலும் உரையாற்ற வல்லவர். தேசிய மற்றும் சர்வதேச விளையாட்டு நிகழ்ச்சிகளின் வர்ணனையாளர், வினா-விடை நடத்துநர், விழும-ஆதாரக் கல்விக்கான வல்லுநர், மொழிபெயர்ப்பாளர்.

விருதுகள் பல பெற்றிருக்கும் சுதா சேஷய்யன், தமிழக அரசின் 2005 ஆம் ஆண்டுக்கான 'கலைமாமணி' பட்டம் பெற்றவர்.





உமா
பதிப்பகம்